# அயோத்தியா காண்ட ஆழ்கடல்

ஆராய்ச்சி அறிஞர்

முனைவர் சுந்தர சண்முகனார்

தமிழ்-அகராதித் துறைப் பேராசிரியர் (ஓய்வு)

புதுச்சேரி-11





முதல் பதிப்பு: மே, 1990

புதுவைக் கம்பன் கழக வெள்ளி விழாவில் (10-5-1990) புதுவை கல்வி அமைச்சர் மாண்புமிகு நா. மணிமாறன் அவர்களால் வெளியிடப் பெற்றது.

திருநாவுக்கரசு தயாரிப்பு

---

விலை : ரு. 20



அச்சிட்டோர் :
ஸ்ரீ பரமேஸ்வரி பிரஸ்
49, காரணீஸ்வரர் கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை—600 004

# முன்னுரை

1989-ஆம் ஆசிரியர் ஆண்டு புதுவையில் நடைபெற்ற கம்பன் விழாவில் வெளியிடுவதற்காகப் புதுவைக் கம்பன் கழகச் செயலாளர் உயர்திரு புலவர் கம்பவாணர் அ. அருணகிரியவர்கள் இட்ட அன்புக் கட்டளையின்படிச் 'சுந்தர காண்டச் சுரங்கம்' என்னும் நூல் எழுதித் தந்தேன். விழாவில் நூல் வெளியிடப் பெற்றது.

### ஊக்குவிப்பு

அந்த நூலுக்கு நேரிலும் மடல் வாயிலாகவும் பெரிய பாராட்டு கிடைத்தது. சிலர் இரண்டு முறை படித்ததாகக் கூறினர். கம்பராமாயணத்தின் மற்ற ஐந்து காண்டங்கள் பற்றியும் நூல் எழுதுமாறு சிலர் பணித்தனர். இந்த ஊக்குவிப்பால், கம்பராமாயணத்தின் அயோத்தியா காண்டம் பற்றி இந்த நூலை எழுதியுள்ளேன்.

கம்பராமாயண அயோத்தியா காண்டம் ஓர் ஆழ் கடல். அந்தக் கடலில் குளித்து அனைத்து முத்துகளையும் அள்ளிக்கொண்டு வருவது அரிது. அடியேனால் இயன்றவரை ஆங்காங்கு உள்ள முத்துகளுள் சிலவற்றை இந்நூல் வாயிலாக அறிமுகப்படுத்தியுள்ளேன்.

### கம்பராமாயணப் பதிப்புகள்

கம்ப ராமாயண ஓலைச் சுவடிகள் இருநூற்றுக்கும் மேல் உள்ளன. கம்பராமாயணத்தைப் பலர் பதிப்பித்துள்ளனர். பதிப்புக்குப் பதிப்பு வேறுபாடுகள் உள்ளன. அவற்றுள் எஸ். இராஜம் அவர்கள்

பதிப்பாசிரியர் குழு அமைத்துப் பல படிகளையும் ஆராய்ந்து ஒப்பு நோக்கச் செய்து, 'மர்ரே அண்டு கம்பெனி— சென்னை' என்னும் நிறுவனத் தின் வாயிலாக வெளியிட்டுள்ள பதிப்பையே, என் நூலுக்கு அடிப்படை ஆதாரமாகக் கொண்டு எழுதியுள்ளேன்.

யான் இப் பதிப்பினைத் தேர்ந்தெடுத்ததற்கு உரிய காரணம், தமிழ் யாப்பிலக்கணம் அறியாதாரும் எளிதில் படித்துப் பொருள் புரிந்து கொள்ளும்படிச் சொற்களைப் பிரித்து அமைத்துப் பதிப்பித்திருத்தலேயாகும். மற்றும், இம்மலிவுப் பதிப்பே பலராலும் வாங்கப் பட்டிருக்கலாம்; என் நூலோடு ஒத்திட்டுப் பார்க்க உதவலாம்.

மலரை இதழ் இதழாகப் பிய்த்தும் கசக்கியும் நுகர்வது பொருந்தாது என்பது அடியேனும் அறிந்த செய்தியே. இருப்பினும், எல்லோரும் படித்து இன்புறும்படி இப்படியொரு பதிப்பும் இருக்கலாமே! யாப்பிலக்கண வல்லுநர்கள் சுவைக்கும்படியாக வேறு சில பதிப்புகள் உள்ளனவே! அவர்கட்கு அவை சாலும்.

அடியேனைத் தூண்டி நூல் எழுதச் செய்த திரு அ. அருணகிரி அவர்கட்கும் மற்ற சுவைஞர் கட்கும் மிகவும் நன்றி செலுத்துகிறேன். இந்நூலை அன்புடன் நன்முறையில் வெளியிட்ட வானதி பதிப்பகத்தார்க்கு என் பெருநன்றி உரியது. வணக்கம்.

**சுந்தர சண்முகன்**

# புகு வாயில்

கம்ப ராமாயணத்தில் பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என ஆறு பிரிவுகள் உள்ளன. இந்தக் காண்டப் பெயர்கள் வால்மீகி தம் இராமாயண நூலில் வைத்த பெயர்களே. இந்த ஆறனுள் இங்கே எடுத்துக் கொண்டது அயோத்தியா காண்டம் மட்டுமாகும்.

பால காண்டம் பருவத்தால் பெற்ற பெயர்; அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம் ஆகியவை செயல் நிகழ்ந்த இடத்தால் பெற்ற பெயர்களாகும். சுந்தர காண்டம் செயல் நிகழ்த்தியவர் பெயரால் பெற்ற பெயராகும். யுத்த காண்டம் செயலால் பெற்ற பெயராகும். அயோத்தியா காண்டத்தில், அயோத்தியிலும் அதன் அண்மைக் காட்டிலும் நடந்த நிகழ்ச்சிகள் அறிவிக்கப்பட்டுள்ளன—

## உட்பிரிவு

வால்மீகி தம் காண்டங்களின் உட்பிரிவுகட்குச் சருக்கம் என்னும் பெயர் ஈந்துள்ளார்; கம்பர் தம் காண்டங்களின் உட்பிரிவுகட்குப் படலம் என்னும் பெயர் தந்துள்ளார். கம்பரின் அயோத்தியா காண்டத்தின் உட்பிரிவுகளாகிய பதினான்கு படலங்களின் பெயர்கள் வருமாறு:

1. மந்திரப் படலம்
2. மந்தரை சூழ்ச்சிப் படலம்
3. கைகேயி சூழ்வினைப் படலம்
4. நகர் நீங்கு படலம்
5. சுமந்திரன் மீட்சிப் படலம்
6. தயரதன் மோட்சப் படலம்
7. கங்கைப் படலம்
8. குகப் படலம்
9. வனம்புகு படலம்
10. சித்திர கூடப் படலம்
11. பள்ளி படைப் படலம்
12. ஆறு செல் படலம்
13. கங்கை காண் படலம்
14. திருவடி சூட்டு படலம்.

இனி, இப்படலங்களில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளின் சுருக்க அறிமுகம் வருமாறு:—

1. மந்திரப் படலம்: தயரதன், ஆசான் வசிட்டர், அமைச்சர்கள் ஆகியோருடன், இராமனுக்குப் பட்டம் கட்டுவது பற்றிச் சூழ்ந்த மந்திராலோசனை பற்றியது.

2. மந்தரை சூழ்ச்சிப் படலம்: இராமனுக்கு முடி சூட்டாதபடி, மந்தரை என்னும் பெயருடைய கூனி, கைகேயியிடம் சென்று சூழ்ச்சியுரைகூறிக் கைகேயி மனம் மாறும்படிச் செய்தது பற்றியது.

3. கைகேயி தயரதனிடம் இரண்டு வரங்கள் பெற்று, இராமனைக் காட்டிற்குச் செலுத்தும்படியும், பரதனுக்குப் பட்டம் கட்டும்படியும் சூழ்ச்சியினால் தன் எண்ணத்தை முடித்துக் கொண்டது பற்றியது கைகேயி சூழ்வினைப் படலம்.

4. நகர் நீங்கு படலம்: கைகேயி பெற்ற வரங்களின் படி, இராமன் அயோத்தி நகரைவிட்டு நீங்கிக் காடு ஏகியது பற்றியது.

5. சுமந்திரன் மீட்சிப் படலம்: தயரதன் கட்டளைப் படி, சுமந்திரன் காடேகிய இராமனைக் கண்டு நாட்டிற்குத் திரும்புமாறு வேண்டிக் கொண்டும் அவன் திரும்பாமையால் இவன் பயனின்றித் திரும்பி வந்ததைப் பற்றியது.

6 தயரதன் மோட்சப் படலம்: இராமன் நாடு திரும்பவில்லை என்பதை அறிந்ததும் தயரதன் உயிர் நீத்து வீடு பேறு அடைந்ததைப் பற்றியது.

7. கங்கைப் படலம்: இராமன் மனைவியுடனும் இலக்குவனுடனும் கங்கைக் கரையை அடைதல், முனிவர் கள் இவர்களை வரவேற்றுப் போற்றி விருந்தளித்தல்— ஆகியவை பற்றியது.

8. குகப் படலம்: கங்கைக் கரையில் குகன் வந்து இராமனையும் மற்றவரையும் கங்கையைக் கடக்கச் செய்து தன்னுடனேயே இருக்குமாறு வேண்டிக் கொள்ளுதல், இராமன் குகனிடம் உறவு பாராட்டி ஆறுதல் கூறி மேற் செல்லுதல் ஆகியவை பற்றியது.

9. மூவரும் காட்டிற்குள் சென்று முனிவர்களின் விருந்தோம்பலை வழியெல்லாம் பெற்று சித்திர கூடம் நோக்கிச் செல்லுதல் பற்றியது வனம் புகு படலம்.

10. சித்திர கூடப் படலம்: காட்டில் சித்திர கூடம் என்னும் இடத்தில் குடில் அமைத்துக் கொண்டு மூவரும் தங்கியிருத்தலைப் பற்றியது.

11. பள்ளி படைப் படலம்: பரதன் கேகய நாட்டி லிருந்து அயோத்திக்கு வந்து நடந்தன யாவும் அறிதல்— தந்தையின் இறப்புக்கும் தமையனின் பிரிவுக்கும் வருந்துதல்— தாயைக் கண்டித்தல்— தயரதன் உடலை ஈமப் படுக்கையில் (பள்ளியில்) வைத்து எரியூட்டுதல்— பத்து நாட்கள் ஈமக் கடன்கள் (இறுதிச் சடங்குகள்) நடத்துதல்— ஆகியவை பற்றியது. இறந்தவரின் நினைவு கூடத்திற்குப் பள்ளி என்னும் பெயர் உண்டு.

12. ஆறு செல் படலம்: பரதன் தான் முடிசூடிக் கொள்வதற்கு உடன்படாமல், இராமனை அழைத்து வரக் காடு நோக்கி உறவினருடனும் படைகளுடனும் வழி கடத்தல் பற்றியது.

13. கங்கை காண் படலம்: பரதன் தன்னுடன் வந்தவர்களோடு கங்கைக் கரையை அடைதல்— குகனது

தொடர்பு— கங்கையைக் கடத்தல்— ஆகியவை பற்றியது.

14. திருவடி சூட்டு படலம்: பரதன் இராமனை நெருங்குதல்— இலக்குவன் சினத்தல்— முடிசூடிக் கொள்ளுமாறு இராமனைப் பரதன் அழைத்தல்— இராமன் உடன்படாமை— பரதன் இராமனின் திருவடியை (பாதுகையை— மிதியடியை) வேண்டிப் பெற்றுத் தன் முடிமேல் சூடிக் கொண்டு அயோத்திக்கு மீளுதல்— ஆகியவை பற்றியது.

## வேறுபாடுகள்

கம்பராமாயணத்தில் சில படலங்கட்கு வேறு பெயர்கள் தரல், ஒரு பதிப்பாளர் ஒரு படலத்தின் இறுதியில் அமைத்திருக்கும் பாடல்களுள் சிலவற்றை வேறு பதிப்பாளர் அடுத்த படலத்தின் தொடக்கத்தில் அமைத்தல், ஒரு பதிப்பாளர் ஒரு படலத்தின் தொடக்கத்தில் அமைத்திருக்கும் பாடல்களுள் சிலவற்றை வேறு பதிப்பாளர் முன் படலத்தின் இறுதியில் அமைத்தல், பாடல்களிலே சில தொடர்களும் சில சொற்களும் பதிப்புக்குப் பதிப்பு வேறுபட்டிருத்தல், பாடல்களின் எண்ணிக்கையில் ஏற்றத் தாழ்வு உள்ளமை, சில பதிப்புகளில் இல்லாத பாடல்கள் வேறு பதிப்புகளுள் உள்ளமை- முதலிய பல வேறுபாடுகள் கம்ப ராமாயணப் பதிப்புகளில் உள்ளன. அயோத்தியா காண்டமும் இதற்கு விதிவிலக்கு அன்று.

கம்ப ராமாயணம் பதினாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்கள் உடைமையால், இடத்திற்கு இடம்— ஆளுக்கு

ஆள் சுவடிகளைப் பெயர்த்து எழுதும் போது இவ்வா றெல்லாம் வேறுபடுவதற்கு வாய்ப்பு உண்டு. இடைச் செருகலாகச் சில பாடல்கள் சிலரால் சேர்க்கப்பட்டிருப்ப தாகவும் ஒரு கருத்து கூறப்படுகிறது. இருநூறுக்கும் மேற்பட்ட சுவடிகள் இருத்தலின், சுவடிக்குச் சுவடி குழப்பம் ஏற்பட்டுள்ளது. இவையெல்லாம், கம்ப ராமாயணம் ஒரு காலத்தில் நாடு முழுவதும் பரவலாகப் பயிலப்பட்டது என்னும் உண்மையை அறிவிக்கின்றன.

## கம்பரும் வால்மீகியும்

வால்மீகி ராமாயணத்தின் வழி நூலே கம்ப ராமாயணம். எனினும், கம்பர் வால்மீகியினும் சிற்சில வேறுபாடுகள் கொண்டுள்ளார். அடிப்படையான பெரிய வேறுபாடு, வால்மீகி இராமனையும் சீதையையும் மக்களாகக் கொண்டிருக்க, கம்பரோ இருவரையும் திருமால்— திருமகள் ஆகியோரின் தெய்வப் பிறவிகளாகக் கொண்டு அதற்கு ஏற்பக் கதையை அமைத்துக்கொண்டு சென்றுள்ளமையாகும். இன்னொரு வேறுபாடு காண் பாம்: இராவணன் சீதையை உடலைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு போனதாக வால்மீகி அறிவித்திருக்க, கம்பரோ, சீதை இருந்த குடிலை அடியோடு அகழ்ந்து சீதையைத் தீண்டாமல் குடிலோடு தூக்கிக் கொண்டு சென்றதாகக் கூறியுள்ளார்.

கதையின் இடையிடையே இருவர்க்கும் சிறுசிறு மாறுபாடுகள் பற்பல உண்டு. அவர் சொன்னதை இவர் விட்டிருப்பார்— அவர் சொல்லாததை இவர் சொல்லி இருப்பார். புனைவுகளில் இருவரிடையே ஏற்றத்

தாழ்வுகள் இருக்கும். இனி, அயோத்தியா காண்டத்தில் உள்ள வேறுபாடுகளுள் ஒரு சிலவற்றைக் காண்பாம்:

தயரதன் இராமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட எண்ணியதாகவே வான்மீகி கூறியிருக்க, கம்பரோ, முழு முடி சூட்ட விரும்பியதாக் கூறியுள்ளார்.

இராமனுக்கு முடி சூட்டைப் பற்றி அறிவிக்கும் வேளையில், தயரதனே இராமனுக்கு வேண்டிய அறநெறியைக் கூறியதாக வான்மீகி கூறியுள்ளார். வசிட்டர் அறநெறி கூறியதாகக் கம்பர் உரைத்துள்ளார்.

முடி சூட்டுவது தொடர்பாக, இராமனும் சீதையும் திருமாலின் கோயிலுக்குச் சென்றதாகக் கூறியிருப்பது வான்மீகம். இராமன் மட்டும் சென்றதாக அறிவித திருப்பது கம்பனுடையது.

இராமன் இளம் பருவத்தில் கூனியின் முதுகில் வில்லிலிருந்து அம்பாக மண் உருண்டைகளை அடித்தான் என்பதாகக் கம்பர் பாடல் அறிவிக்கிறது. வால்மீகி இதை அறவே விட்டுவிட்டார்.

சுமந்திரன் தயரதனிடத்திலும் கைகேயினிடத்திலும் போய் வந்ததைப் பற்றிய செய்திகள், ஒருவர்க்கு ஒருவர் உரையாடிய கருத்துக்கள் முதலிய இரு நூல்களிலும் வேறு படுகின்றன.

இராமன் சீதையை நோக்கி, எனக்கு முடி சூட்டப் போகின்றனர்— நீ அரசி ஆகப் போகிறாய் என்று கூறிய தாக வால்மீகி எழுதியுள்ளார். கம்பர் இவ்வாறு கூறவில்லை.

இராமன்— கைகேயி ஆகியோரிடையே நடந்த உரையாடல்களிலும் வேறுபாடு உண்டு.

கோசலையிடம் இராமன், இலக்குவன் ஆகிய இருவரும் சென்றதாகவும், இராமன் காடு செல்லப் போவதைக் கோசலை முன்பே தெரிந்து அது பற்றி உரையாடியதாகவும் வான்மீகி அறிவித்துள்ளார். இராமன் மட்டும் சென்றதாகவும் இராமன் அறிவித்த பின்புதான் அவன் காடேகப் போவது கோசலைக்குத் தெரிந்ததாகவும் கம்பர் தெரிவித்துள்ளார்.

தயரதனுக்கு மூன்று பட்டத்தரசியர் இருப்பதோடு மேலும் மனைவியர் முந்நூற்றைம்பதின்மர் இருந்தனர் என வால்மீகி கூறியிருக்க, கம்பரோ, மனைவியர் அறுபதினாயிரவர் இருந்ததாகத் தாராளக் கணக்கு தந்துள்ளார்.

வனம் சென்றபோது சீதை மரஉரி தரித்ததாக வான்மீகி சொல்லவில்லை; சீதையும் மரஉரி தரித்ததாகக் கம்பர் சொல்லியுள்ளார்.

இவ்வாறு இன்னும் பல வேறுபாடுகள் கூறிக் கொண்டு போகலாம். ஒரு கதையைப் பலர் எழுதும் போது இவ்வாறு சில அல்லது பல வேறுபாடுகள் எழுவது இயற்கை.

## ஆழ்கடல் முத்துகள்

அயோத்தியா காண்ட ஆழ்கடலுள் எண்ணிறந்த ஆணி முத்துகள் உள்ளன. இனி, அவற்றுள் சிலவற்றைக் கம்பர் தந்துள்ளாங்கு அறிந்து அணிந்து மகிழலாம்.

# பொருளடக்கம்

# 1. காப்பிய முன்னோட்டச் சுவை

காப்பிய ஆசிரியர்கள் தம் காப்பியத்தில் பல்வேறு சுவைகளை அமைப்பர். அவற்றுள் முன்னோட்டச் சுவை மிகவும் சிறந்தது. 'முன்னோட்டச் சுவை' என்பது நான் (சு.ச.) கொடுத்துள்ள பெயராகும்.

காப்பியத்தில், பின்னால் நிகழப் போகும் செயலை முன்னாலேயே குறிப்பாக அறிவிப்பதை முன்னோட்டம் எனலாம். இந்த முன்னோட்டம் பின்னால் நிகழ இருப் பதற்கு எதிர்மாறானதாக முன்னால் சொல்லப்படும் போது சுவை மிகுகின்றது. இந்தச் சுவையை முன்னால் படிக்கும்போது அறிய முடியாது; இதற்கு எதிர்மாறான நிகழ்ச்சி பின்னால் நடந்திருப்பதைப் படிக்கும்போது தான், இரண்டையும் ஒத்திட்டு நோக்கி மகிழ முடியும். எடுத்துக் காட்டாகச் சிலப்பதிகாரத்தில் அமைந்துள்ள சில முன்னோட்டங்களைக் காண்போம். கம்பன் காப்பி யத்தில் அமைந்துள்ள சில முன்னோட்டங்களை அறிந்து சுவைப்பதற்காக, 'இலக்கிய ஒப்புமை காண்டல்' என்னும் முறையில் சிலம்பின் முன்னோட்டங்கள் ஈண்டு அறிவிக்கப் படும்.

திருமண அரங்கிலே மணமக்களை வாழ்த்துபவர்கள் உங்கட்கு வயிற்று வலி வராமல் இருப்பதாகுக! உங்கட்கு இதய நோய் வராமல் இருப்பதாகுக! உங்கட்குக் காச நோய் வராமல் இருப்பதாகுக!— என்று வாழ்த்தினால்,

அது இயற்கைக்கு மாறான தீச் சகுனம் அல்லவா? எனவே, இதுபோல் யாரும் வாழ்த்துவதில்லை. நீங்கள் எல்லா நலங்களும் வளங்களும் பெற்று வாழ்வீராக என்று வாழ்த்துவதுதான் முறை— இயற்கை.

திருமண அரங்கில் கோவலனுடன் இருந்த மணமகள் கண்ணகியை நோக்கிச் சிலர் பின்வருமாறு வாழ்த்தினர்: ''நீ காதலனைப் பிரியாமலும், கை கோத்த நெருங்கிய தொடர்பு தளராமலும், தீமை வராமலும் வாழ்வாயாக'' என வாழ்த்தினர்.

**காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்**
**தீதுஅறுக என ஏத்தி''** (மங்கல வாழ்த்துப் பாடல்—61, 62)

என்பது பாடல் பகுதி. பின்னால் கண்ணகியும் கோவலனும் கவவுக் கை ஞெகிழ்ந்து பிரியப் போகிறார்கள்— தீமை வரப்போகிறது— என்பதை இந்த வாழ்த்து உள்ளடக்கிக் கொண்டுள்ளது. வரலாறு முழுதும் நடந்து முடிந்த பிறகு காப்பிய ஆசிரியர் இளங்கோவடிகள் எழுதியதால், பின்னால் நிகழ்ந்ததை அறிந்து முன்னோட்டமாக முன்னாலேயே எழுதிச் சுவை தந்துள்ளார். இது மட்டுமா?

மனையறம் படுத்த காதையில், கோவலனும் கண்ணகியும் இன்புற்றிருந்த வாழ்க்கையை தொண்ணூறு (90) அடிகளால் தெரிவித்துள்ளார் இளங்கோ. இந்த தொண்ணூறு அடிகளில் நாற்பத்தைந்து அடிகள், கோவலன் கண்ணகியைப் பாராட்டிய அடிகளாகும். இந்தப் பாராட்டு 'எவரெஸ்ட்' உச்சிக்குப் போய்விட்டிருக்கிறது. அதாவது இறுதிப் பகுதியை மட்டும் காணலாம்.

**''மாசறு பொன்னே வலம்புரி முத்தே**
**காசறு விரையே கரும்பே தேனே**
**அரும்பெறல் பாவாய் ஆருயிர் மருந்தே**
**பெருங்குடி வாணிகன் பெருமட மகளே**
**மலையிடைப் பிறவா மணியே என்கோ**
**அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ**

யாழிடைப் பிறவா இசையே என்கோ
தாழிருங் கூந்தல் தையால் நின்னைஎன்று
உலவாக் கட்டுரை பல பாராட்டி!'' (73—81)

என்பதுதான் அந்தப் பாராட்டு. இரண்டாம் காதையின் இறுதியில் இவ்வாறு அமைத்தது, (45 அடிக்) கண்ணகியை, அடுத்த காதையாகிய அரங்கேற்று காதையிலேயே கோவலன் பிரியும்படிச் செய்து காட்டியுள்ளார் இளங்கோ. இது ஒரு வகையான காப்பிய முன்னோடிச் சுவை. இந்த மனையறம் படுத்த காதையின் இறுதியில் ஒரு தனி வெண்பா உள்ளது. இது முற்றிலும் முன்னோட்டப் பாடலாகும். ஆண் பாம்பும் பெண் பாம்பும் ஒன்றோடு ஒன்று உடலைப் பின்னி முறுக்கிக்கொண்டு இன்பம் துய்ப்பது போலவும், மன்மதனும் இரதியும் கலந்து இன்புறுவது போலவும் கோவலனும் கண்ணகியும் இரண்டற ஒன்றிக் கலந்து இன்பம் துய்த்தனராம். இந்த உலக இன்பம் நிலையில்லாதது; எனவே, நாம் இருக்கும் போதே எவ்வளவு மிகுதியாக இன்பம் துய்க்க முடியுமோ— அவ்வளவும் துய்த்துவிட வேண்டும் என்று எண்ணிச் செய்தவர் போலக் காணப்பட்டனராம்.

தூமப் பணிகளொன்றித் தோய்ந்தாலென ஒருவார்
காமர் மனைவியெனக் கைகலந்து— நாமம்
தொலையாத இன்பமெலாம் துன்னினார் மண்மேல்
நிலையாமை கண்டவர்போல் நின்று

என்பது பாடல். பணிகள் = பாம்புகள். காமர்—மனைவி = மன்மதனும் அவன் மனைவி இரதியும். 'நிலையாமை கண்டவர்போல்' என்பது உண்மையில் பலித்து விட்டதே. காமத்துறைக்குப் பொறுப்பாளனாகச் சொல்லப்படும் மன்மதனைக் குறிப்பிட்டிருப்பதும் ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும்.

மற்றொன்று:— கண்ணகியையும் கவுந்தியடிகளையும் மதுரைப் புறத்தே தங்கச் செய்து கோவலன் மதுரை

நகரைச் சுற்றிப் பார்த்து வந்து, மதுரையின் சிறப்பையும் பாண்டியனின் உயர்வையும் புகழ்ந்து கூறுகிறான். இது தொடர்பாக, அடைக்கலக் காதையில் உள்ள ஒரு பகுதி வருமாறு:

நிலந்தரு திருவின் நிழல் வாய்நேமி
கடம்பூண் டுருட்டும் கௌரியர் பெருஞ்சீர்க்
கோலின் செம்மையும் குடையின் தண்மையும்
வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப்
பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட
மதுரை மூதூர் மாநகர் கண்டாங்கு
அறந்தரு நெஞ்சின் அறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பொழிலிடம் புகுந்து
தீதுநீர் மதுரையும் தென்னவன் கொற்றமும்
மாதவத் தாட்டிக்குக் கோவலன் கூறுழி (1-10)

என்பது பாடல் பகுதி. பாண்டிய மன்னனின் செங்கோல் சிறப்பு இங்கே கூறப்பட்டுள்ளது. தென்னவன் புகழைக் கோவலன் வாய் வழியாகவும் கூறச் செய்துள்ளார் இளங்கோ. ஏன்?— அடுத்தாற்போல், கோவலன் செங்கோல் வளையப் போகிறது. இதை வைத்து, இதன் முன்னோடியாகப் பாண்டியனது செங்கோல் சிறந்தது என்பது கூறப்பட்டுள்ளது. இதன் குறிப்பு, அடுத்து மாறான நிகழ்ச்சி வரப்போகிறது என்பதாகும்.

இது போல், வழக்குரை காதையிலும் ஒரு குறிப்பு உள்ளது. வழக்கு உரைக்கக் கண்ணகி வந்துள்ளதைப் பாண்டிய மன்னனுக்கு அறிவிக்கச் சென்ற காவலன், முதலில் மன்னனை வாழ்த்திப் பின்னரே செய்தியைத் தெரிவிக்கிறான். அவ் வாழ்த்துப் பகுதி வருமாறு:—

வாழிஎம் கொற்கை வேந்தே வாழி
தென்னம் பொருப்பின் தலைவ வாழி
செழிய வாழி தென்னவ வாழி
பழியொடு படராப் பஞ்சவ வாழி (30-33)

என்பது பாடல் பகுதி. (பஞ்சவன் = பாண்டியன்) பழியே இல்லாத பாண்டியனே வாழி என்று காவலன் குறிப்பிட்டுள்ளது, இன்னும் சிறிது நேரத்தில் பாண்டியனின் பழி வெளிப்படப் போகிறது என்பதன் குறிப்பாகும். மற்றும் இப்பகுதியில், வாழி— வாழி என்று ஆறு முறை வாழி சொல்லியிருக்கிறான். இது, இன்னும் சிறிது நேரத்தில் பாண்டியன் இறக்கப் போகிறான் என்பதின் முன்னோட்டக் குறிப்பாகும்.

நான் (சு. ச.) இப்போது சிலப்பதிகாரம் பற்றி நூல் எழுதவில்லை; கம்பராமாயணம் பற்றியே எழுதுகின்றேன். சிலப்பதிகாரச் சுவைப் பித்தால் ஓரளவு கூடுதலாகவே எழுதிவிட்டேன்.

யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவர் போல்
இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை உண்மை
வெறும் புகழ்ச்சி யில்லை (தமிழ்—2)

என்னும் சுப்பிரமணிய பாரதியாரின் கூற்றுக்கு இணங்க, இளங்கோ அடிகள் போலவே, கம்பர் தம் காப்பியத்தில் கையாண்டுள்ள முன்னோட்டச் சுவையைக் காண்போம். முன்னோட்டச் சுவை என்பது என்ன என்பதை அறிமுகம் செய்யவே இவ்வளவு பயணம் செய்ய வேண்டியதாயிற்று. இனிச் சுவை வருமாறு:

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### இராமனைப் பயந்தவள்

உறங்கிக் கொண்டிருந்த கைகேயியைக் கூனி எழுப்பி, துன்பம் வந்துள்ள போதும் தூங்கிக் கொண்டிருக்கிறாயே என, கைகேயி பின்வருமாறு கூறினாள்:

என் பிள்ளைகள் நால்வரும் நல்லவர்கள்— அறம் பிழையாதவர்கள்— அவர்கள் இருக்கும்போது எனக்கு என்ன துன்பம் வரக்கூடும். நல்ல பிள்ளைகளைப் பெற்றவர்கள் இன்பமேயன்றித் துன்பம் எய்தார். இன்னும் குறிப்பாகச் சொல்கிறேன்: இராமனைப் பிள்ளையாகப் பெற்ற எனக்குத் துன்பமே இல்லை.

வெவ் விடம் அனையவள் விளம்ப வேற்கணாள்
தெவ்வடு சிலைக்கை என் சிறுவர் செவ்வியர்
அவ்வவர் துறைதொறும் அறம் திறம்பலர்
எவ்விடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டு எனா (54)

பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்
உராவரும் துயரைவிட்டு உறுதி காண்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேதமே அன
இராமனைப் பயந்த எற்கு இடர்உண்டோ என்றாள் (55)

இந்தப் பாடல்களில் பொதுவாகப் பிள்ளைகள் நால்வரையும்— சிறப்பாக இராமனையும் பெரிதும் புகழ்ந்து பாராட்டும் கைகேயி, பின்னால், இராமனது முடியைப் பறித்துக் காட்டுக்கு அனுப்பப் போகிறாள். நிலைமை இதுவாயிருக்க, இதற்கு எதிர்மாறாக இப் பாடல்கள் அமைந்து சுவை பயப்பதை என்னென்று சொல்வது!

## பரதன் தவம்

கூனி கைகேயிக்கு மேலும் கூறுகின்றாள்: இராமன் இலக்குவனை உடன் வைத்துக்கொண்டு இந் நாட்டை ஆள்வானாயின், உன் மகன் பரதன் சத்துருக்கனனுடன் காட்டிற்குச் சென்று தவம் செய்ய ஏற்பாடு செய்தல் நன்று— என்கிறாள்.

சரதம் இப்புவி எலாம் தம்பியோடும் இவ்
வரதனே காக்குமேல் வரம்பில் காலமும்
பரதனும் இளவலும் பதியின் நீங்கிப் போய்
விரதமா தவம்செய விடுதல் நன்று என்றாள் (65)

இவ்வாறே இதன் பிற்புலம் அமைந்துள்ளது. பரதன் சத்துருக்கனனுடன் அயோத்தியை விட்டு அப்பால் உள்ள நந்தியம் பதியில் பதினான்காண்டு தவக் கோலத்துடன் காலம் கழித்தான் அல்லவா?

## நாடு கடத்தல்

கூனியின் தூண்டுதலின்படி, கைகேயி, ஒரு வரத்தால் பரதனுக்கு முடியைப் பெற்றாள்; சரி— இராமனை மற்றொரு வரத்தால் பதினான்காண்டுகள் நாடு கடத்தியது எதற்காக? இவ்வாறு செய்தது, இராமனால் பின்னால் தொல்லை ஏற்படாதிருக்கவே யாம். நாடு கடத்திவிடின் தொல்லையில்லையன்றோ?

உலக வரலாறுகளைப் புரட்டிப் பார்ப்போமாயின், நாடு கடத்தலின் நோக்கம் நன்கு புரியும். உலக வரலாற்றில் அன்று தொட்டு இன்றுவரை, எத்தனையோ நாடு கடத்தலைக் கண்டிருக்கிறோம். இளங்குமணன் தன் அண்ணன் குமணனது ஆட்சியைப் பறித்துக்கொண்டு அவனை நாடு கடத்திய செய்தி நாம் அறிந்ததே.

இங்கிலாந்தில் இரண்டாம் ரிச்சர்டு மன்னன் (King Richard-II) ஆண்டு கொண்டிருந்தபோது, தன் பங்காளிப் பகைவனாகிய பாலிங்புரோக் (Boling broke) என்பவனை நாடு கடத்திய செய்தியை, சேக்சுபியரின் King Richard-II என்னும் படைப்பைப் படித்தவர்கள் அறிவர். பகைவன் வெளிநாட்டில் இருந்தால் தன்னை ஒன்றும் அசைக்க முடியாது— என்பது இதன் கருத்து. இதே அடிப்படையில் ஒன்று நிகழ்ந்தது. இங்கிலாந்திலிருந்து ரிச்சர்டு மன்னன் மேலாட்சியைக் கவனிக்க அயர்லாந்துக்குச் சென்றிருந்த போது, வெளிநாட்டில் இருந்த பாலிங்புரோக் இங்கிலாந்துக்கு வந்து ஆட்சியைப் பிடித்துக் கொண்டு, அயர்லாந்து சென்றிருந்த ரிச்சர்டு மன்னனைச் சிறையில் அடைத்துப் பின் கொன்றே விட்டான். பகைவன் வெளியில் இருக்கும் போது எளிதில் காரியம் முடித்துக் கொள்ளலாம் என்பதை இது அறிவிக்கிறதல்லவா?

சில ஆண்டுகட்கு முன், ஆப்பிரிக்கப் பெரு நிலத்தில் உள்ள கானா என்னும் நாட்டின் தலைவனாக இருந்த என்குருமா என்பவன், சீனாவிற்குச் சென்றிருந்தபோது, கானாவில் இருந்த அவன் எதிரிகள் நாட்டைப் பிடித்துக் கொண்டு அவனை நிலையாக வெளியேற்றிவிட்ட வரலாறு உலகறிந்ததே.

இத்தகைய பின்னணியிலேயே இராமனும் அகப்பட்டு நாடு விட்டுக் காடு செல்லும்படிச் செய்யப்பட்டான் என்பது ஒருவகைக் காப்பியக் கருத்துச் சுவையாகும் பாடல்:

**இரு வரத்தினில் ஒன்றினால் அரசு கொண்டு இராமன்**
**பெரு வனத்திடை ஏழிரு பருவங்கள் பெயர்ந்து**
**திரிதரச் செய்தி ஒன்றினால்; செழுநிலம் எல்லாம்**
**ஒருவழிப் படும்உன்மகற்கு; உபாயம் ஈது என்றாள்** *(90)*

ஓராண்டோ— ஈராண்டோ இல்லை. பதினான்கு ஆண்டுகள் இராமன் வெளியே இருந்தால், நாடு இராமனை மறந்துவிடும்; பரதனது ஆட்சி நிலைத்து விடும்— என்பது ஒருவகைப் பின்னணியாகும்.

## கைகேயி சூழ்வினைப் படலம்

### வாழிய

தயரதன் கைகேயிக்கு இராமனது முடி சூட்டைப் பற்றிச் சொல்ல அவள் இருக்கும் இடத்திற்கு, வாழ்க வாழ்க எனச் சிற்றரசர்கள் தன்னை வாழ்த்திக் கொண்டு பின்தொடர நள்ளிரவில் வந்தான்.

**நாழிகை கங்குலின் நள் அடைந்த பின்றை**
**யாழிசை அஞ்சிய அம்சொல் ஏழை கோயில்**
**வாழிய என்று அயில்மன்னர் துன்ன வந்தான்—**
**ஆழி நெடுங்கை மடங்கல் ஆளி அன்னான்** *(5)*

இந்தப் பாடலில் நான்கு முன்னோட்ட அமைப்புகள் உள்ளன. தயரதன் மடங்கல் ஆளி (ஆண் சிங்கம்) போன்றவனாம். இத்தகையவன் இன்னும் சிறிது நேரத்தில் மயங்கி விழப் போகிறான். வாழிய— வாழிய எனச் சிற்றரசர்கள் வாழ்த்த வந்தானாம். இந்த 'வாழிய' என்பது, தயரதன் அண்மையில் இறக்கப் போகிறான் என்பதைப் பின்புலமாகக் கொண்டது. கைகேயியின் சொல்லுக்கு— பேச்சுக்கு இருக்கும் இனிமை தன் இசைக்கு இல்லையே என யாழ் அஞ்சக் கூடிய அளவுக்கு இன்மொழி பேசும் கைகேயி என்பது, இன்னும் சிறிது நேரத்தில் வன்மொழி பேசப் போகிறாள் என்பதன் எதிர்மறை. 'யாழிசை அஞ்சிய அம் சொல் ஏழை' எனக் கம்பர் கூறியுள்ளார். ஏழை என்னும் சொல்லுக்கு வறியவர் என்னும் பொருளோடு பெண் என்ற பொருளும் உண்டு. இந்த ஏழை என்பது, தயரதனாலும் மகன் பரதனாலும் துறக்கப்படப் போகிறாள் என்பதன் குறியீடும் ஆகும்.

## இகழ்ந்தவர் மாள்வர்

கைகேயி வருந்தியவள் போல் கீழே வீழ்ந்தாள். தயரதன் அவளை நோக்கி, ஏன் வருந்துகிறாய்? ஏழு உலகிலும் உள்ளவர்களுள் உன்னை இகழ்ந்தவர் யாராயினும் இறப்பர்; நடந்ததைச் சொல்! அதன்பின் என் செயலைக் காண்பாய் என்றான் தயரதன்.

**அன்னது கண்ட அலங்கல் மன்னன் அஞ்சி**
**என்னை நிகழ்ந்தது இவ்வேழு ஞாலம் வாழ்வார்**
**உன்னை இகழ்ந்தவர் மாள்வர் உற்ற தெல்லாம்**
**சொன்னபின் என்செயல் காண்டி; சொல்லிடு என்றான்** *(9)*

உன்னை இகழ்ந்தவர் இறப்பர் என்றான் தயரதன். பின்னர் தயரதன் கைகேயியை இகழ்ந்து பேசி இறந்து விடுகிறான். பின்பு என் செயல் காண்டி என்றான். பின்பு அவன் இறந்த செயலைக் கைகேயி கண்டாள்.

உன்னைத் துன்புறுத்தியவர் யார்?— உன் உடைமையைப் பறித்தவர் யார்?— என்பது போலத் தயரதன் சொல்ல வில்லை. உன்னை 'இகழ்ந்தவர்' யார் என்றுதான் கேட்டான். அவ்வாறே அவளை உலகம் இன்றளவும் இகழ்ந்து கொண்டிருக்கிறது.

## இராமன்மேல் ஆணை

கைகேயி தயரதனை நோக்கி, எனக்கு முன்பு இரண்டு வரங்கள் தருவதாகக் கூறினீர்களே— அவற்றை இப்பொழுது தருவீர்களா?—என்று வினவினாள். அதற்கு மன்னன், ஓ! தருவேன்— மறுக்க மாட்டேன்— வஞ்சிக்க மாட்டேன். உன் மகன் இராமன்மேல் ஆணை!— என்று பதிலிறுத்தான்:

**உள்ளம் உவந்தது செய்வென் ஒன்றும் உலோவேன்**
**வள்ளல் இராமன் உன்மைந்தன் ஆணை என்றான்** *(11)*

இது பாடல் பகுதி. உள்ளம் உவந்தது செய்வேன் என்பதை உள்ளம் உவந்து அது செய்வேன் எனப் பிரித்து, மனம் விரும்பி, நீ கேட்ட அதைச் செய்வேன் என்று பொருள் கொள்வர். இதில் மற்றொரு மறை பொருள் உள்ளது. உவந்தது என்பதை உவந்து + அது என்று பிரிக்காமல், என் மனம் விரும்பியதைச் செய்வேன் என்பதே அம் மறைபொருள். தயரதன் உள்ளம் உவந்தது இராமனுக்கு முடிசூட்டுவதுதான். அதைச் செய்வேன்— நீ மறுக்காதே— விட்டுக்கொடு— என்னும் பொருள் மறைந்திருக்கிறது. மேலும் இராமனை, 'உன் மகன் இராமன்' எனக் கைகேயியின் மகனாகக் கூறுகிறான். அப்படித்தான்— அவள் உண்மைத் தாயாக இருந்தவள் இப்போது மாறிவிட்டாள். இராமன் மேல் ஆணை என்பது இராமனது முதன்மைச் சிறப்பைக் குறிக்கிறது. ஆனால் இன்னும் சிறிது நேரத்தில், இராமன், கைகேயியால் செல்லாக் காசாக ஆக்கப்படப் போகிறான். படிப்பவர்கட்டு இஃதும் ஒரு முன்னோட்டச் சுவைதானே!

## இப்பொழுதே பகர்ந்திடு

*தயரதன் கைகேயியிடம் கூறுகிறான். நீ வரம் கேட்க இவ்வளவு மயங்க வேண்டியதில்லையே. வருத்தமோ—தயக்கமோ வேண்டா. இப்பொழுதே கேள்— உடனே தருவேன்— என்கிறான்:*

வரம்கொள இத்துணை மம்மர் அல்லல் எய்தி
இரங்கிட வேண்டுவ தில்லை ஈவேன் என்பால்
பரம்கெட இப்பொழுதே பகர்ந்திடு என்றான்
உரம்கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலா தான் (13)

*இப்போதே கேள்— தருகிறேன்— என்றானே—ஆனால் உடனே தரக்கூடிய வரமாக அவள் கேட்க வில்லையே— உடனே தயரதன் ஒத்துக் கொள்ள வில்லையே!*

## வண்மைக் கேகயன் மான்

*இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டா எனத் தயரதன் கைகேயியிடம் கெஞ்சுகிறான். பெண்ணே! எதையும் ஈயும் வள்ளலாகிய கேகயன் மகளே! நீ என் கண்ணை வேண்டினும் தருவேன்— மேற்கொண்டு என் உயிரையே கேட்கினும் ஈவேன். மண் ஆட்சியை—பரதனுக்கு ஆட்சியை வேண்டுமானால் பெற்றுக்கொள்—மற்ற இன்னொன்றையும் மட்டும் மறந்துவிடு—என்கிறான்.*

கண்ணே வேண்டும் என்னினும் ஈயக்கடவேன் என்
உண்ணேர் ஆவி வேண்டினும் இன்றே உனதன்றோ
பெண்ணே வண்மைக் கேகயன் மானே பெறுவாயேல்
மண்ணே கொள்நீ மற்றையதொன்றும் மற என்றான் (32)

*உயிர் வேண்டினும் தருவேன் என்றான். அவ்வாறே உயிர் போய்விட்டது. பெண்கள் இரக்கம் உடையவர்கள் என்னும் பொருளில் 'பெண்ணே' என்றான். ஆனால் அவள் பெண்மை மாறிவிட்டாள். இரண்டு வரங்களுள்*

*மண்ணை (ஆட்சியை) வேண்டுமானால் பெற்றுக் கொள்! ஆனால் இராமனைக் காட்டுக்கு அனுப்பாதே— என்ற கொடிய செய்தியை வாயால் சொல்லவும் உள்ளம் இடம் தராமல், 'மற்றையது ஒன்று' என மறைமுகமாகக் குறிப்பிடுகின்றான்— அதை மறந்தே விடு— என்கிறான். இஃதும் ஒருவகைச் சுவையன்றோ?*

## கைகேயியின் காலில் விழல்

*சிற்றரசர்கள் பலர் ஒருவரோ டொருவர் போட்டி போட்டு முந்திக் கொண்டு வந்து தயரதன் காலில் விழுவார்களாம். அத்தகைய பெருமைக்கு உரிய தயரதன் இப்போது கைகேயியின் காலில் விழுந்து சிறுமை எய்தினானாம்.*

**கால்மேல் வீழ்ந்தான் கந்துகொல் யானைக் கழல் மன்னர்**
**மேல்மேல் வந்து முந்தி வணங்கி மிடை தாளான்** *(29)*

## விரைவின் போதுதி

*கைகேயியிடம் அடைக்கலம் (சரணாகதி) அடைந்த தயரதனைத் தேடிக் கொண்டு கைகேயியின் இருப்பிடத்திற்கு வந்த சுமந்திரனை நோக்கி, இராமனை அழைத்துவா எனக் கைகேயி ஆணையிட்டாள். உண்மை அறியாத சுமந்திரன் இராமனிடம் சென்று கூறுகிறான்: உலகத்தவர் உன்னைப் பெற்றவனைப் போலவே உன் மேல் பெரும் பரிவு கொண்டுள்ளனர். உன் சிற்றன்னை கைகேயியோ, (விரைவில் உனக்கு மகுடம் சூட்டுவதற்காக) உன்னை அழைத்துவரச் சொன்னாள். எனவே, முடி சூடிக் கொள்வதற்காக நீ விரைவில் புறப்படுவாயாக!— என்றான்.*

**கொற்றவர் முனிவர் மற்றும் குவலயத்து உள்ளோர் உன்னைப்**
**பெற்றவன்தன்னைப் போல பெரும் பரிவு இயற்றி நின்றார்**
**சிற்றவைதானும் ஆங்கே கொணர்க எனச் செப்பினாள் அப்**
**பொன்தட மகுடம்சூடப் போதுதி விரைவின் என்றான்** *(85)*

இங்கே சுமந்திரன் கூறியதற்கு எதிர்மாறாக நிலைமை ஆனது. முடி சூடிக் கொள்ள விரைவாகப் போனவன் மர உரி அல்லவா அணிந்து கொண்டான்!

**தேவரின் வாழ்த்து**

கைகேயி அழைத்ததாகச் சுமந்திரன் சொன்னதும், தெய்வப் பாடல்கள் இசைக்க, தேவர்கள் மகிழ்ந்து வாழ்த்த, பெண்கள் ஆரவாரித்து நோக்க இராமன் தேரில் சென்றான்.

**தெய்வ கீதங்கள் பாடத் தேவரும் மகிழ்ந்து வாழ்த்தத்**
**தையலார் இரைத்து நோக்கத் தார் அணி தேரில் சென்றான்** (86)

தேவர்களின் மகிழ்ச்சியும் வாழ்த்தும் எதிராய் மாறின அன்றோ?

**வறியோர்க்கு வழங்கு**

சந்தனம், மணிமாலை, நெற்றிப் பொட்டு, யானைகள், குதிரைகள், பொன் அணிகள் முதலியவற்றை இராமன் முன் கொண்டு வந்து, முடிசூட்டு மகிழ்ச்சியின் கூறாக ஏழைகட்கு வழங்குவாயாக என்றனர் பெரியவர்கள்:

**சந்தம் இவை; தாவில் மணியாரம் இவை; யாவும்**
**சிந்துரமும் இங்கு இவை செறிந்த மத வேழப்**
**பந்திகள் வயப்பரி பசும் பொனின் வெறுக்கை**
**மைந்த வறியோர் கொள வழங்கு என நிரைப்பார்** (97)

மகிழ்ச்சி மேலீட்டால் வறியோர்க்கு இவற்றை யெல்லாம் வழங்கியும் மேற்கொண்டு நிலைமை என்னாயிற்று!

**வளர்த்தது கைகேயி**

முனிவர் முதலிய பெரியோர்கள் பின்வருமாறு பேசிக் கொள்கின்றனர்: இராமன், பெற்ற தாய் கையில் வளர வில்லை. அவனை தவப் பயனால் வளர்த்தது கைகேயியே. மகிழ்ச்சியோடு வளர்த்த கைகேயி, இராமனது

முடிசூட்டிற்காக அடையும் உவகையின் அளவினைச் சொல்ல இயலாது:

**தாய் கையில் வளர்ந்திலன், வளர்த்தது தவத்தால்**
**கேகயன் மடந்தை கிளர்ஞாலம் இவன் ஆள**
**ஈகையில் உவந்தவள் இயற்கை இது என்றால்**
**தோகையவள் பேருவகை சொல்லல் அரிது என்பார்** *(101)*

வளர்த்த கைகேயி மிகவும் மகிழ்வாள் என எல்லாரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் நிலைமை மாறிவிட்டது. இந்தப் பாடலில் உள்ள 'வளர்த்தது கேகயன் மடந்தை' என்னும் தொடரின் தொடர்பாக ஒன்று சொல்ல வேண்டியுள்ளது. வானொலியில் செய்தி வாசிப்பவர், வாசிப்பது இன்னார், என்று தம் பெயரைச் சொல்லிச் செய்தியைத் தொடங்குகிறார். இது குறித்துப் பலரிடையே 'தடைவிடை' நடைபெற்றது. 'வாசிப்பது இன்னார்' என்று சொல்வது தவறு; 'வாசிப்பவர் இன்னார்' என்று சொல்வதே பொருத்தம் என்பது சிலரது கொள்கை. சிலர், 'வாசிப்பது இன்னார்' என்று கூறுவதில் தவறு இல்லை என்று கூறினர். எது பொருத்தமானது என்பதை அறியக் கம்பரிடம் சென்று கேட்டுப் பார்ப்போம்: 'வளர்த்தவள் கேகயன் மடந்தை' என்று கூறாமல் 'வளர்த்தது கேகயன் மடந்தை' என்றே கம்பர் கூறியுள்ளார். எனவே, இந்த இரண்டினுள் எவ்வாறு கூறினும் பொருத்தமே என்ற தீர்ப்பு கம்பரால் நமக்குக் கிடைத்துள்ளது.

## இடர் தருவாய்

உடன் வருவேன் என்று மன்றாடிய சீதைக்கு இராமன் சொல்கிறான். நீ உடன்வரின், எல்லையில்லாத் துன்பம் வரும். இதை நீ உணரவில்லை என்றான்:

**...................... விளைவு உன்னுவாய்**
**அல்லை; போத அமைந்தனை ஆதலின்**
**எல்லை யற்ற இடர் தருவாய் என்றான்** *(ந.நீ.ப—227)*

இராமன் முன்னால் கூறியது போலவே, சீதை வந்ததால், பின்பு எல்லையற்ற துன்பம் வந்ததைச் சொல்ல வேண்டுமா!

## சுமந்திரன் மீட்சிப் படலம்

### எம தூதன்

யான் நாட்டிற்குத் திரும்ப முடியாது; நீ தேரை ஓட்டிக் கொண்டு அயோத்தி செல்க என்று சுமந்திரனிடம் இராமன் கூறியதும் சுமந்திரன் கூறுகிறான்: கல் மனம் உடைய யான், மிகவும் வருந்திக் கொண்டிருக்கும் தயரதனிடம், நீ சொல்வதை அறிவிக்கச் செல்லவா? அல்லது எம தூதனாகச் செல்லவா?— என்கிறான்.

வன்புலக் கல்மன மதியில் வஞ்சனேன்
என்பு உலப்புற உடைந்து இரங்கும் மன்னன்பால்
உன்புலக் குரிய சொல் உணர்த்தச் செல்கெனோ?
தென்புலக் கோமன் தூதின் செல்கெனோ? (22)

தென் புலம் = தென் திசை; கோமகன் = தென் திசையின் காவலனாகிய எமன். ‘திசை’ என்னும் வடசொல்லுக்குப் பதிலாக, ‘தென்புலம்’ எனப் ‘புலம்’ என்னும் தமிழ்ச் சொல்லைக் கம்பர் கையாண்டுள்ளார். ‘தென் புலத்தார்’ எனத் திருவள்ளுவரும் கூறியுள்ளாரே. எம தூதனாகச் செல்லவா?— என்று சுமந்திரன் முன்னர்ச் சொல்லியவாறே பின்னர்த் தயரதன் இறந்து விட்டான்.

### பயந்த மூவர்

அயோத்திக்குத் திரும்ப இருக்கின்ற சுமந்திரனிடம், இராமன், என்னைப் பெற்றெடுத்த தாயர் மூவர்க்கும், எனது குறையாத— குறைவு இல்லாத நீண்ட— பெரிய வணக்கத்தை அறிவிப்பாயாக என்று கூறினான்.

**முறைமையால் என் பயந்தெடுத்த மூவர்க்கும்**
**குறைவிலா என்நெடு வணக்கம் கூறி...** *(37)*

*தனக்குத் தீங்கிழைத்த கைகேயிக்கும் இராமன் தெரிவித்திருப்பதும், அதிலும்— போலித்தனம் (குறைவு) இல்லாத உண்மையான வணக்கம் என்று கூறியிருப்பதும் ஒருவகைச் சுவை பயக்கிறது. இராமன் திரும்பப் பதினான்கு ஆண்டு காலம் ஆகுமாதலின் 'நெடு வணக்கம்' என்று கூறியுள்ளான்.*

## பள்ளி படைப் படலம்

### பரதன் பண்பு

*தயரதன் தந்த திருமுகத்தை (கடிதத்தை), கேகய நாட்டில் இருந்த பரதனிடம் தூதர்கள் கொண்டு போய்த் தந்தனர். அவர்களைக் கண்டதும், பரதன், மன்னர் (தயரதன்) நலமாயுள்ளாரா என வினவினான்:*

**தீது இலன்கொல் திரு முடியோன் என்றான்** *(2)*

*பின்னர், இராம— இலக்குமணர் நலமா என, நலம் என, தாழ்ந்து தொங்கிய நீண்ட கைகளைத் தலைமேல் ஏந்திக் குவித்து, இங்கிருந்தபடியே புலம் (திசை) நோக்கி வணக்கம் செலுத்தினான்:*

**தலையில் ஏந்தினன் தாழ் தடக் கைகளே** *(3)*

*பின்னர்த் திருமுகத்தை வாங்கித் தலைமேல் வைத்துச் சிறப்பளித்தான்.*

**துன்று நாள்மலர்ச் சென்னியில் சூடினான்** *(5)*

*திருமுகத்தைப் படித்துப் பார்த்து, இராமனுக்கு முடி சூட்டு என்பதை அறிந்ததும், மகிழ்ச்சி மேலீட்டால், கொண்டு வந்த தூதர்க்குக் கோடிக்கு மேலும் நிதி வழங்கினானாம்.*

அயோத்தி சென்று இராமன் திருவடிகளில் மலர் தூவி வணங்கலாம் என்னும் ஆவல் தூண்டியதால், பரதன், நகை முகத்தோடும் மெய்ம்மயிர்ச் சிலிர்ப்போடும் பொங்கிய காதல் உடையவனானான்.

**வாள் நிலா நகை தோன்ற, மயிர்ப்புறம்**
**பூண, வானுயர் காதலின் பொங்கினான்**
**தாணிலாம் மலர் தூவினன் தம்முனைக்**
**காணலாம் என்னும் ஆசை கடாவவே** (7)

உடனே பரதன் நாளும் நேரமும் பார்க்காமல் தம்பி சத்துருக்கனனொடு தேரேறி அயோத்திக்குப் புறப்பட்டுப் போனான்.

**தழுவு தேரிடைத் தம்பியொடு ஏறினான்**
**பொழுதும் நாளும் குறித்திலன் போயினான்** (8)

ஊருக்குப் புறப்படுபவர்கள் நல்லநாளும் அந்த நாளிலேயே நல்ல நேரமும் பார்த்துப் புறப்படுவர். இந்தப் பாடலில் 'நாள்' என்பது, திதி— நட்சத்திரம்— கிழமை ஆகியவற்றை குறிக்கும் நல்ல தேதியாகும். 'பொழுது' என்பது, இராகு காலம்— எமகண்டம் முதலியன இல்லாதனவாய் இருக்கும் நல்ல நேரம் ஆகும். ஆனால், பரதன், இராமனைக் காணவேண்டும் என்னும் ஆவலினால் நாள்— நேரம்— பாராமல் உடனே புறப்பட்டானாம். உலகியலில் நாள்தோறும் பார்க்கும் பழைய பஞ்சாங்கங்கள் கூட (மூடநம்பிக்கையினர் கூட) சாவுச் செய்தி வந்தால் நாள்— நேரம் பார்க்காமல் உடனே புறப்படுவது உண்டு. பரதனுக்கு வந்த திருமுகம் (கடிதம்) ஒரு வகையில் சாவு ஓலை போலவே ஆயிற்று. பரதன் அயோத்திக்குச் சென்று செத்த தந்தையின் உடலைத் தானே கண்டான். மிக்க பண்பாளனாகிய பரதனுக்குப் பின்னர் எல்லாம் எதிர் மாறாகவே நிகழ்ந்தன.

**ஆய காதல்**

இராமனைப் பிரிந்திருந்த கோசலை, தூய்மையான பரதனைக் கண்டதும் காடு சென்ற இராமனே வந்தால்

எவ்வளவு மகிழ்ச்சி கொள்வாளோ— அவ்வளவு மகிழ்ச்சி கொண்டாள்; காதலுடன் அழுது கொண்டே பரதனைத் தழுவிக் கொண்டாள்:

தூய வாசகம் சொன்ன தோன்றலை
தீய கானகம் திருவின் நீங்கிமுன்
போயினான் வரக் கண்ட பொம்மலாள்
ஆய காதலால் அழுது புலம்பினாள் (117)

கைகேயி கோசலையின் மைந்தனுக்குக் கொடுமை செய்திருந்தும், அவள் மகனைக் கோசலை தழுவிக் கொண்டது படிப்பதற்குச் சுவையாயுள்ளது.

பின்னால் வரப்போவதை அறிந்தவர் போல முன்னாலேயே சொல்வதும் செய்வதும் ஆகிய முன்னோட்டம் காப்பியத்தில் மிகவும் சுவை நல்கும் பகுதியாகும். மற்றும், ஒருவர்க் கொருவர் தமது உரிமையை விட்டுக் கொடுப்பதும், தமது துன்பத்திற்குக் காரணமானவர்களையும் போற்றி வணங்குதலும் இன்ன பிற மாற்றங்களும் மேலும் சுவையூட்டும் கூறுகளாம்.

# 2. உலகியல் உண்மை முத்துகள்

கல்வியில் பெரியவராகிய கம்பர், ஏட்டுக் கல்வியோடு நின்று விடாமல், உலகியல் உண்மைகளை நிரம்ப அறிந்துள்ளார். உலகில் மக்களின் ஒழுகலாறு உள்ள நிலைமையை அப்படியே ஓவியப்படுத்திக் காட்டியுள்ளார். அயோத்தியா காண்டத்தில் அவர் கையாண்டுள்ள இந்தக் கலைக் கூறு அமைந்துள்ள முத்தான சில இடங்களைக் காணலாம்:—

## மந்திரப் படலம்

### உள்ளம் நோக்கியோ?

உலகில் பெருஞ் செல்வரையோ, பெரிய பதவியாளரையோ சிலர் 'காக்கா' பிடிப்பதாகச் சொல்லும் வழக்காறு ஒன்று உண்டு. அந்தப் பெரியவர்கள் என்ன சொன்னாலும்— ஏன்— வெள்ளைக் காகம் ஒன்று பறந்தது என்று சொன்னாலும், ஆம்— பறந்திருக்கலாம்— இரண்டு காகங்கள் கூடப் பறந்திருக்கும் என்று கூறி அவர்களின் உள்ளத்திற்கு மாறுபடாமல் சிலர் நடந்து கொள்வர். பெரியவர்களின் வீட்டுக் குழந்தைகளோடு வாளாவாயினும் கொஞ்சுவர்— அவர்கள் என்ன சொன்னாலும், ஆம் ஐயா, (Yes Sir— ஆங்கிலம்)— (Oui Monsieur— பிரெஞ்சு) என்று 'ஆமாம் சாமி'களாகத்

தலையாட்டுவர். இஃது ஓர் உலகியல் உண்மை. இனிக் கம்பரிடம் வருவோம்.

தயரதன் சிற்றரசர்களையெல்லாம் அழைத்து, யான் இராமனுக்கு முடிசூட்ட விரும்புகிறேன்; உங்கள் கருத்து என்ன என்று வினவினான். அவர்கள் அனைவரும் அப்படியே ஆகுக என்று தம் ஒப்புதலை அளித்தனர். பின்னர் தயரதன் அவர்களை நோக்கி, யான் என் மகன் மேல் உள்ள பற்றினால் இதைக் கூறினேன். நீங்கள் உடன்பட்டுக் கூறிய உயர்ந்த கருத்து, உண்மையிலேயே மகிழ்ச்சியால் கூறியதா? அல்லது, என் உள்ளம் நோகக் கூடாது— என்று கருதி என் உள்ளத்தின் நிறைவுக்காகக் கூறியதா அல்லது, இது தக்கதே என்று கருதிக் கூறியதா என்று வினவினான்.

மகன்வயின் அன்பினால் மயங்கி யான் இது
புகல நீர் புகன்ற இப் பொம்மல் வாசகம்
உவகையின் மொழிந்ததோ உள்ளம் நோக்கியோ
தகவென நினைந்ததோ தன்மை யாது என்றான் (78)

என்பது பாடல். இங்கே, ''உள்ளம் நோக்கியோ'' என்பது ஓர் உலகியல் உண்மையாகும்.

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### விளையாட்டும் வினையும்

'விளையாட்டு வினையாயிற்று' என்று கூறுவது ஓர் உலகியல். கூனி மந்தரை கைகேயியின் மனத்தை மாற்றுவதற்காகக் கைகேயியின் மாளிகையை அடைந்தாள். சினத்தோடும் மடித்த வாயோடும், இராமன் சிறுவனாயிருந்தபோது மண்ணுருண்டையை வில்லினால் முதுகில் அடித்ததற்குப் பழிவாங்கும் எண்ணத்தோடும் கூனி சென்றாளாம்.

தொண்டை வாய்க் கேகயன் தோகை கோயில்மேல்
மண்டினாள் வெகுளியின் மடித்த வாயினாள்
பண்டைநாள் இராகவன் பாணி வில்லுமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள் *(49)*

*என்பது பாடல். பழிவாங்க எண்ணுபவர்கள் வாயை மடிப்பது இயற்கையான ஓர் உலகியல் உண்மை. பழிக்குப் பழி வாங்க நினைப்பதும் உலகியல். இங்கே விளையாட்டு வினையானதை அறியலாம்.*

## செல்வமும் மன மாற்றமும்

*கூனி கைகேயின் மனத்தை மாற்றப் பின்வருமாறு கூறுகிறாள்: இப்போது இராமன் உன்னிடம் அன்புடையவன்போல் காணப்படுகிறான்; ஆனால் அவன் முடிசூடிக் கொள்ளின் மனம் மாறி, தன் மனைவியையும் தன் தாயையுமே பொருட்படுத்துவான்; உன்னைப் புறக்கணித்து விடுவான்; இது உலகியல். அருள் நிரம்பிய தவசிகள்கூட, பெரிய செல்வம் பெற்றுவிடின் மனம் மாறி விடுவர்— என்று கூறிக் கலைக்கிறாள்.*

அறன் நிரம்பிய அருளுடைய அருந்தவர்க் கேனும்
பெறலரும் திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம் *(78)*

*என்பது பாடல் பகுதி. இங்கே, இரண்டு பாடல்கள் நினைவு கூரத் தக்கன.*

*ஒன்று:— பெரிய செல்வம் என்னும் பிணி வந்துவிடின், செல்வர்க்குத் தம்முன் நிற்கும் பழைய நண்பர்கள்— உறவினர்கள் முதலியோரை ஏறிட்டுப் பார்க்க முடியா வண்ணம் கண்ணொளி மழுங்கிவிடும். இதற்கு மருந்து (மருத்து) உண்டா எனில், வாகடத்தில் (மருத்துவ நூலில்) சொல்லப்படவில்லை; இந்நோய் தீர்தற்கு மருந்துதான் யாதோ எனில், மீண்டும் தரித்திரம் (வறுமை) என்னும் மருந்து அவரைச் சாருமாயின், கண்ணொளி தெளிவாகி விடும்— என்னும் கருத்துடைய தனிப்பாடல்—*

பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடின்
உருத்தெரி யாமலே ஒளி மழுங்கிடும்
மருத்து உளவோ எனில் வாகடத்து இலை
தரித்திரம் என்னுமோர் மருந்தின் தீருமே

என்பது அப்பாடல். இரண்டாவது பாடல், தேவராசப் பிள்ளை இயற்றிய குசேலோபாக்கியானம் என்னும் நூலிலிருந்து ஈண்டு தரப்படும். அப்பாடலின் கருத்து:— 'அற்பர்கள் மதிக்கும் செல்வம் மிகுதியாகச் சேர்ந்துவிடின், சிலர் செருக்கு கொண்டு, வாயிருந்தும் மற்றவரோடு பேசாமல் ஊமையராய் விடுகின்றனர். சிலர், செவி இருந்தும், செல்வம் இல்லாத மற்றவர் சொல்வதைக் கேட்காமல் செவிடராகிவிடுகின்றனர். சிலர், கண்கள் இருந்தும், எளியோரை ஏறிட்டும் பார்க்காமல் குருடராகி விடுகின்றனர்.

சிறியரேம் மதிக்கும் இந்தச் செல்வம் வந்துற்ற ஞான்றே
வறிய புன்செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியுளாரும் பயில்தரு செவிட ராவர்
குறியணி கண்ணு ளாரும் குருடராய் முடிவ ரன்றே

என்பது பாடல். இந்த உலகியல் உண்மையைக் கூனி கைகேயினிடம் கூறினாள்.

## கைகேயி சூழ்வினைப் படலம்

### வஞ்சனை மாதர்

பெண்கள் சிலரால் குடும்பத்தில் பல கோளாறுகளும் வஞ்சகப் போக்கும் அரக்கத்தனமும் நிகழ்வதால், தக்க பெரியோர் சிலர், பெண்களை வஞ்சகக் கோலம் உடையவர்கள் எனக் கருதி, அவர்களின் ஒத்துழைப்பை நாடமாட்டார்கள்— என்னும் கருத்தை, கைகேயி தயரதனது வேண்டுகோளுக்கு இணங்காததைக் குறிப்பிடும்போது கூறியுள்ளார்:

**வஞ்சனை பண்டு மடந்தை வேடம் என்றே**
**தஞ்சென மாதரை உள்ள லார்கள் தக்கோர் (21)**

என்பது பாடல் பகுதி. இந்தக் காலத்துப் பெண்கள் சிலர் குடும்பங்களில் குழப்பம் விளைவிப்பதைக் காணலாம். ஆனால், பெண்ணுரிமை பேசும் இந்த நாளில் இந்தக் கருத்து எடுபடாது.

## ஏகுமின் ஏகுமின் !

ஒரு பெருவிழாவில் தெருவில் மக்கள் மிகுதியாக—நெருக்கமாகக் கூடிவிடின், பின்னால் இருப்பவர்கள் முன்னால் இருப்பவர்களை நோக்கிச் செல்லுங்கள்—செல்லுங்கள் (ஏகுமின்) என்று சொல்வதும், ஆனால் யாரும் நகர முடியாதபடித் தேங்கித் தெருவின் நடு நடுவே அப்படியே நின்றுகொண்டிருப்பதும், முன்னால் போகமுடியவில்லையெனில், வந்த வழியே பின்னாலே யாவது போகலாம் எனின், அதற்கும் முடியாமல் கூட்டம் நெருக்கிக் கொண்டிருப்பதும் உலகியலில் உண்டு. இராமனது முடிசூட்டு விழாவைக் காணலாம் என்று வந்த மகளிர் கூட்டமும் மைந்தர் கூட்டமும் இதே நிலையில் இருந்தனவாம்.

**பாகியல் பவளச் செவ்வாய் பணை முலை பறவை அல்குல்**
**தோகையர் குழாமும் மைந்தர் சும்மையும் துவன்றி எங்கும்**
**ஏகுமின் ஏகுமின் என்று இடை இடை நிற்றல் அல்லால்**
**போகில மீளகில்லா பொன் நகர் வீதி எல்லாம் (72)**

## வாய் புதைத்தல்

உயர்ந்தவர்களிடம் மற்றவர் பேசும் போது—ஏதாவது சொல்லும் போது, வணங்கி, கையால் வாயைப் பொத்திக்கொண்டு மெதுவாய்ப் பேசுதல் உலகியல். இவ்வாறே சுமந்திரன் இராமனிடம் பேசினானாம்:

**குன்றிவர் தோளினானைத் தொழுது வாய் பொத்திக் கூறும் (84)**

என்பது பாடல் பகுதி.

*சுமந்திரன் இராமனிடம் வாய் பொத்தி நின்றது போலவே, இராமனும் கைகேயினிடம் ஒரு கையால் வாய் பொத்திக் கொண்டும் மற்றொரு கையால் நீண்டு தொங்கும் உடையைச் சிறிது மடக்கிக் கொண்டும் நின்றானாம்.*

சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையின் புதைத்து மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்றான் *(108)*

*என்பது பாடல் பகுதி.*

## நகர் நீங்கு படலம்

### கையால் தைவரல்

*சோர்ந்து கிடப்பவரை, அவருக்கு நெருக்கமானவர் வந்து உடம்பையும் முகத்தையும் இரு கால்களையும் கைகளால் தடவிக் கொடுத்தல் சோர்வை நீக்க முயலும் ஒரு செயலாகும். சோர்ந்து கிடந்த தயரதனைக் கோசலை இவ்வாறு தடவிக் கொடுத்தாளாம்.*

என்றென்று அரசன் மெய்யும் இருதாள் இணையும் முகனும்
தன்தன் செய்ய கையால் தைவந்திடு கோசலையை
ஒன்றும் தெரியா மம்மர் உள்ளத்து அரசன் மெள்ள
வண்திண் சிலைநம் குரிசில் வருமே வருமே என்றான் *(70)*

*என்பது பாடல். மகனது பிரிவால் ஒன்றும் புரியாமல் மயங்கிக் கிடக்கும் தயரதன், கோசலையை நோக்கி, நம் மகன் இராமன் மீண்டு வருவானா— வருவானா என்று கேட்டானாம். இவ்வாறு, துயரத்தின்போது குழந்தை நிலையை அடைந்து விடுதல் உலக இயல்பு அன்றோ?*

### கைவிடுவேம்

*தலைவனே தவறு செய்தால், கீழிருப்பவர்கள், அந்த ஆளே அப்படிச் செய்யும் போது நமக்கு மட்டும்*

என்னாடா— அடித்துத் தள்ளுங்கடா— என்று பேசிக் கொள்வது உலகியலில் சிலரிடையே உண்டு. இதுபோல், அயோத்தி மக்கள், தயரதனே அறத்தைக் கைவிட்டு இராமனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டான். இனி நாமும் அறத்தைக் கைவிடுவோம்— என்று பேசிக் கொள்கிறார் களாம்.

**ஆஆ அரசன் அருள் இலனே ஆம் என்பார்;**
**காவா அறத்தை இனிக் கைவிடுவேம் யாம் என்பார் (95)**

என்பது பாடல் பகுதி.

**காக்குநர் காமின்**

ஓரிடத்தில் ஒரு கொடுமை நிகழின், அதைப் பொறுக்க முடியாத ஒருவர், யான் இப்படியெல்லாம் என்னென்னவோ செய்யப் போகிறேன்; என்னைத் தடுப்பவர் தடுக்கட்டும் பார்க்கலாம்— என்று கூறுவது உலகியலில் உண்டு.

இராமன் முடி இழந்ததைப் பொறாத இலக்குமணன், யான் எதிர்ப்பவர் அனைவரையும் கொன்று வென்று இராமனுக்கு முடி சூட்டுவேன். என் செயல் நிகழாமல் காப்பவர் காக்கட்டும் பார்க்கலாம்— என்று முழங்குகிறான். பாடல்:

**புவிப்பாவை பரம்கெடப் போரில் வந்தோரை எல்லாம்**
**அவிப்பானும், அவித்து அவர் ஆக்கையை அண்டம் முற்றக்**
**குவிப்பானும், இன்றே என் கோவினைக் கொற்ற மௌலி**
**கவிப்பானும் நின்றேன் இது காக்குநர் காமின் என்றான் (117)**

**வாய் தந்தன**

சீற்றம் கொண்ட ஒருவன் கண்டபடி ஏதாவது பேசினால், மற்றவர், நீ வாயில் வந்தவையெல்லாம் பேசலாமா என்று கண்டிப்பது உலகியல். இலக்குமணனின் சீற்ற உரையைக் கேட்ட இராமன்,

ஐய! நின்தன் வாய்தந்தன கூறுதியோ? *(131)*

என்றான்.

## நெடிது நிற்கின்றான்

நீடு காடு வர வேண்டா என்று தடுத்த இராமனை நோக்கி நான் வரத்தான் போகிறேன் என்று மன்றாடிய இலக்குமணனை அவ் இராமன் மறுத்துக் கூற முடிய வில்லை; இலக்குமணனது முகத்தை நோக்கி நோக்கிக் கண்களினின்றும் நீரைக் கொட்டிச் செய்வதறியாது திகைத்து அப்படியே நின்றுவிட்டான். இது ஒருவகை உலகியல். பாடல்:

உரைத்தபின் இராமன் ஒன்று உரைக்க உன்னிலன்
வரைத் தடந் தோளினான் வதனம் நோக்கினான்
விரைத் தடந் தாமரைக் கண்ணை மிக்கநீர்
நிரைத்து இடை இடைவிழ நெடிது நிற்கின்றான் *(156)*

## மறந்தனர்— அறிந்திலர்

நிலைமையில் குழப்பமான துன்பச் சூழ்நிலை ஏற்பட்டபோது, தாய்மார்கள் குழந்தைகளையும் மறந்து கவனிக்காமல் துன்பத்தில் தோய்ந்து மூழ்கியிருப்பதும், தாய்மார்கள் போன இடம் அறியாமல் குழந்தைகள் திகைத்து அழுவதும் உலகியல். இராமனுக்கு முடி யில்லை என்றதை அறிந்ததும், மாதர்கள் மக்களை மறந்தனராம்; பிள்ளைகள் தாயர் இருக்குமிடம் அறியாமல் திகைத்தனராம். பாடல் பகுதி:

மக்களை மறந்தனர் மாதர் தாயரைப்
புக்க இடம் அறிந்திலர் புதல்வர்... *(196)*

## முன்— பின் செல்லல்

கணவனும் மனைவியும் தெருவில் செல்லும் போதோ அல்லது வேறு எங்கேனும் நடந்து செல்லும் போதோ ஆடவனாகிய கணவன் முன் செல்வதும், பெண்ணாகிய

மனைவி கணவனின் பின் செல்வதும் இயற்கை. (பணக்காரப் பெண் வீட்டில் 'வாழ்க்கைப் பட்டுவிட்ட' மாப்பிள்ளை வேண்டுமானால் பெண்ணுக்குப் பின் சென்றாலும் செல்லலாம்).

அம்பிகாபதி கோவை என்னும் நூலிலே ஆணும் பெண்ணும் முன்பின் செல்லல் ஒரு வேடிக்கையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு பாலை நிலச் சுரத்தைக் கடக்கும் போது, தலைவன் பின்னே தலைவி சென்றாளாம். ஆனால் முன் செல்வதை நிறுத்தி, தலைவியின் இடை அழகைக் கண்டது போலவே நடையழகையும் காண வேண்டும் என தலைவியின் பின் சென்றானாம். தலைவியோ, தலைவனுக்கு முன் செல்ல நாணிப் பின் சென்றாளாம்— ஒருவர்க் கொருவர் பின்னால்— பின்னால் சென்று கொண்டிருந்தால் நிலைமை என்னாவது?

இந்த முறையினால், புதுச்சேரிக்குத் தெற்கேயுள்ள கடலூருக்குச் செல்லப் புறப்பட்டவர்கள், கடலூருக்குச் செல்லாமல், புதுச்சேரிக்கு வடக்கேயுள்ள மரக்காணத்தைச் சென்றடைவர். இவர்கள் கடலூர் செல்ல வேண்டுமெனில், மரக்காணம் பக்கம் முகத்தை வைத்துக் கொண்டு ஒருவர் பின் ஒருவர் சென்றால்தான் கடலூரை அடைவர். இது ஒருவகை நகைச்சுவைக்காகச் சொல்லப்பட்டது. இனி அம்பிகாபதி கோவைப் பாடலைக் காணலாம்:—

**முன்செல்ல நாணும் முகிழ்நகை வல்லி முருகனிவன்**
**பின்செல்ல எண்ணும் பிடிநடை காண...** (179)

என்பது பாடல் பகுதி. முகிழ் நகைவல்லி= முல்லை மொக்குப் போன்ற பற்களையுடைய தலைவி. முருகனிவன்= முருகனைப் போன்ற தலைவன்.

சிலர் முன்னும் பின்னுமாகச் செல்லாமல் இணையாகக் கைகோத்துக் கொண்டு செல்வர். (ஒருவர் இன்னொருவரை விட்டு ஓடிவிடாமல் இருப்பதற்காகக்

கையைப் பிடித்துக் கொண்டு செல்லவில்லை. காதல் மிகுதியால் அவ்வாறு செல்வர்.)

இனிக் கம்பனிடம் வருவோம்: இராமனுக்கு முன்னே காவலாக இலக்குமணன் செல்ல, இராமனுக்குப் பின்னே சீதை சென்றாளாம். அப்படியென்றால், சீதைக்கு முன்னே இராமன் செல்ல, இராமனுக்குப் பின்னே சீதை சென்றாள் என்பது கருத்து. இது முறையான உலகியல் அமைப்பு. இந்தக் காட்சியைத் தெருவில் கண்ட ஊரார் மிகவும் வருந்தினராம். பாடல்:—

**சீரை சுற்றித் திருமகள் பின்செல**
**மூரி விற்கை இளையவன் முன்செல**
**காரை ஒத்தவன் போம்படி கண்டஅவ்**
**வூரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ?** *(230)*

## சுமந்திரன் மீட்சிப் படலம்

### முலை வருடலும் அங்கை அணையும்

இராமனை நகருக்கு அழைத்துவரச் சுமந்திரனுடன் காட்டிற்குச் சென்ற மக்கள் வழியில் ஓர் இரவில் ஒரு சோலையில் தங்கித் தூங்கினர். இளைய சில பெண்டிர், தம் முலையைக் குழந்தை தடவிக் கண்டு சுவைத்துக் கொண்டிருக்கத் தாம் தூங்கிக் கொண்டிருந்தார்களாம்.

சிலர் கையையே தலையணையாக மடித்து வைத்துக் கொண்டு உறங்கினராம். இவையெல்லாம் உலகியல் அன்றோ? பாடல் பகுதிகள்:—

**மகவு முலை வருட இளமகளிர்கள் துயின்றார்** *(15)*

**அங்கை அணையில் பொலிவழுங்க முகமெல்லாம்**
**பங்கயம் முகிழ்த்தன எனச் சிலர் படிந்தார்** *(16)*

முலை வருடல்= முலையைத் தடவுதல். கம்பர், கையாகிய அணையில் துயின்றார் எனக் கூறவில்லை. 'அங்கை அணை' என்றே கூறியுள்ளார். அங்கை

(அகங்கை) என்றால் உள்ளங்கை. கையை மடித்து முழங்கையைத் தரையில் ஊன்றிக் கொண்டு, அகலமாக உள்ள உள்ளங்கையை விரித்து வைத்துக் கொண்டு, அந்த உள்ளங்கையின் பரப்பில் தலையை வைத்துக் கொண்டு தூங்கினர் என்னும் பொருளில் 'அங்கை அணை' என்று கூறியிருப்பதில் உள்ள நயம் சுவைக்கத் தக்கது.

## தயரதன் மோட்சப் படலம்

### உரையாமையும் காணாமையும்

துன்பச் செய்தியைச் சொல்ல மனம் வராமல் பேசாதிருத்தலும், துன்பச் சூழ்நிலையைக் காணப் பொறாமல் அப்பால் நகர்தலும் உலகியற்கை. இராமன் திரும்பவில்லை என்பதைத் தயரதனிடம் சொல்ல மனம் வராமல் வசிட்டன் பேசாதிருந்தானாம்; பின்னர்த் தயரதன் நிலைமையை அறிந்ததும் சோர்ந்து கிடைப்பதைப் பார்க்க மனமின்றி அங்கிருந்து அகன்றானாம். பாடல்:—

**இல்லையென் றுரைக்க லாற்றான் ஏங்கினன் முனிவன் நின்றான்;**
**வல்லவன் முகமே நம்பி வந்திலன் என்னும் மாற்றம்**
**சொல்லலும் அரசன் சோர்ந்தான்; துயர்உறு முனிவன் நானிவ்**
**அல்லல் காண்கில்லேன் என்னா ஆங்குநின்றகலப் போனான்** (11)

### உயிர் வரல்

மக்கள் ஒரு துன்பத்தால் வருந்திக்கொண்டிருக்கையில் அத்துன்பம் நீங்கியதும், 'அப்பா! இப்பொழுதுதான் உயிர் வந்தது' என்று கூறுவது உலகியல். சுமந்திரனுடன் சென்று ஊர்மக்கள் காட்டில் உறங்கிக் கொண்டிருக்கையில், இராமன் வர மறுத்ததால் சுமந்திரன் அயோத்தி நோக்கித் தேரை ஓட்டிக்கொண்டு சென்றுவிட்டான். விழித்துப் பார்த்த மக்கள், நகர் நோக்கிச் சென்றதன் அடையாளமாகிய தேர்ச் சுவடைக் கண்டு, இராமன்

அயோத்திக்குச் சென்றுவிட்டான் என எண்ணி, இப்போதுதான் உயிர் வந்தவர்களானார்களாம். முகிலும் கடலும் ஒருசேர ஒலித்தாற்போல ஆரவாரித்தார்களாம். பாடல்:

தேரின் சுவடு நோக்குவார்; திருமா நகரின் மிசைத் திறிய
ஊரும் திகிரிக் குறி கண்டார்; உவந்தார் எல்லாம் உயிர் வந்தார்;
ஆரும் அஞ்சல் ஐயன்போய் அயோத்தி அடைந்தான் என அசனிக்
காரும் கடலும் ஒருவழிக் கொண்டு ஆர்த்த என்னக் கடிது
[ஆர்த்தார் *(33)*

## கங்கைப் படலம்

### மனையின் நீங்கிய மக்கள்

பிள்ளை, பெற்றோருக்குத் தெரியாமல் வீட்டைவிட்டு ஓடிவிடின், பெற்றோர் நாடோறும் பிள்ளையை நினைந்து நினைந்து காணாது தேடிக் கொண்டிருப்பார்கள். அந்தப் பிள்ளை திரும்ப வந்துவிடின் அன்போடு எதிர்கொண்டு அணைத்து மகிழ்வர். இது போலவே, இராமனைத் தம் பிள்ளைபோல் நினைத்திருந்த முனிவர்கள், காட்டில் இராமனைக் கண்டதும் வரவேற்றுத் தத்தம் தவப் பள்ளிக்கு அழைத்துச் சென்றனராம். பாடல்:—

மனையின் நீங்கிய மக்களை வைகலும்
நினையும் நெஞ்சினர் கண்டிலர் நேடுவார்
அனையர் வந்துற ஆண்டெதிர்ந் தார்கள் போல்
இனிய மாதவப் பள்ளி கொண் டெய்தினார் *(13)*

## குகப் படலம்

### பெரியோரைக் காணும் முறை

பெரியோரைக் காணச் செல்பவர்கள் தலைப் பாகையை நீக்கி, தோளின்மேல் உள்ள துண்டை

(அங்கவத்திரம்) இடுப்பில் குறுக்கு வாட்டத்தில் கட்டிக் கொண்டு ஆடம்பரம்— ஆரவாரம் இல்லாமல் அமைதியுடன் செல்வது உலகியல். இராமனைக் காணச் சென்ற குகன், தன்னைச் சேர்ந்தவர்களை அப்பால் நிறுத்திவிட்டு, தான் மட்டும், கை வில்லையும் இடுப்பில் உள்ள வாளையும் கீழே எறிந்து விட்டுத் தூய— அன்புள்ள மனத்துடன் சென்று, இராமன் இருக்கும் தவப் பள்ளியை அடைந்தானாம். பாடல்:

சுற்றம் அப்புறம் நிற்கச் சுடுகணை
வில்துறந்து அரை வீக்கிய வாள் ஒழித்து
அற்றம் நீத்த மனத்தினன் அன்பினன்
நற்றவப் பள்ளி வாயிலை நண்ணினான் (10)

மற்றும் வாயிலுக்குள் புக்க குகன், இராமனைக் கண்டதும் கால்களில் விழுந்து வணங்கி, உடலை வளைத்து வாய் பொத்தி நின்றான். இராமன் குகனை அமர்க என்று கூறிய பிறகும் அவன் அமரவில்லை; உண்ணுதற்கு மீனும் தேனும் கொண்டு வந்துள்ளேன் என்று குகன் கூறியதும், மீனை விரும்பாத இராமன், மீனை விரும்பாத முனிவர்களை நோக்கிப் புன்முறுவல் பூத்தானாம். இவையெல்லாம் உலகியல் அன்றோ? பாடல்கள்:—

கண்ணனைக் கண்ணின் நோக்கிக் கனிந்தனன் இருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி வளைத்து வாய் புதைத்து நின்றான்
(13)

இருத்தி ஈண்டு என்னலோடும் இருந்திலன்; எல்லை நீத்த
அருத்தியன் தேனும் மீனும் அமுதினுக்கு அமைவதாகத்
திருத்தினென் கொணர்ந்தேன்; என்கொல் திருவுளம் என்னவீரன்
விருத்தமா தவரை நோக்கி முறுவலன் விளம்ப லுற்றான் (14)

தம்பி கூறல்

துன்பச் சூழ்நிலையில் உள்ள தலைவரைக் காணச் சென்றவர், என்ன துன்பம் என்பதைத் தலைவரிடம்

நேரில் கேட்காமல் அக்கம் பக்கத்திலுள்ளவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்வது ஒருவகை உலகியல். இவ்வாறே, குகன், காட்டிற்கு வந்தது எதற்காக என்று இராமனை வினவாமல், தம்பி இலக்குமணனை வினவி அவன் கூறக் கேட்டுத் தெரிந்து கொண்டான். பாடல்:—

திரு நகர் தீர்ந்த வண்ணம் மானவ தெரித்தி என்ன
பருவரல் தம்பி கூறப் பரிந்தவன் பையுள் எய்தி
இருகண் நீர் அருவி சோரக் குகனும் ஆண் டிருந்தான்... (20)

## பள்ளி படைப் படலம்

ஒரு பெண், தன் தாய் வீட்டிலிருந்து வந்த ஒருவரை நோக்கி, என் பெற்றோர், உடன் பிறந்தவர் எல்லாரும் குறைவின்றி நலமாயுள்ளனரா என்று வினவுவதுண்டு. கேகய நாட்டிலிருந்து பரதன் வந்து தன் தாயாகிய கைகேயியை வணங்கியதும் அவள் அவ்வாறே வினவினாள். பாடல்:—

வந்து தாயை அடியில் வணங்கலும்
சிந்தை ஆரத் தழுவினள்; தீது இலர்
எந்தை, என்னையர், எங்கையர் என்றனள்
அந்தமில் குணத்தானும் அது ஆம் என்றான் (42)

எந்தை = என் தந்தை; என்னையர் = என் அண்ணன்மார்; எங்கையர் = என் தங்கைமார்.

செவி கூடின

பரதன் கைகேயியை இரு கைகளையும் குவித்து வணங்கிக் கொண்டிருந்தான். அப்போது அவள், இராமன் காடு சென்றதையும், தயரதன் மேல் வீடு (மோட்சம்) அடைந்ததையும் கூற, அச் சொல்லைக் கேட்டதும், பரதனின் இரு கைகளும் இரு காதுகளைக்

பொத்திக் கொண்டனவாம். கேட்கக் கூடாத சொற்களைக் கேட்க நேர்ந்தபோது செவிகளைக் கையால் பொத்திக் கொள்வது இயற்கைதானே! பாடல் பகுதி:—

**சூடின மலர்க்கரம் சொல்லின் முன் செவி கூடின... (66)**

## உயிரோடு தின்றல்

ஒருவர் செயற்கையாக இறந்துவிடின், அவரது இறப்பிற்குக் காரணமாயிருந்தவரை நோக்கி, மற்றவர், அவரை உயிரோடு தின்று விட்டாயே— என்று கூறுதல் ஒருவகை உலக இயற்கை. தம்பியர் இருவர் இறந்து போக, அவர்களின் தமையன், நான் என் இரண்டு தம்பிகளையும் உயிரோடு தின்று விட்டேன் என்று கூறியதையும், குழந்தையை இழந்த தாய் ஒருத்தி, நான் என் குழந்தையைத் தின்று விட்டேன் என்று கூறியதையும் யான் (சுந்தர சண்முகம்) நேரில் கேட்டுள்ளேன். இங்கே, பரதன் தாயை நோக்கி, உன் வாயாலேயே தந்தை தயரதரின் உயிரைத் தின்று விட்டாயே என்று கூறினான்.

**ஒன்றும் பொய்யா மன்னனை வாயால் உயிரோடும்**
**தின்றும் தீரா வன்பழி கொண்டீர்... (77)**

என்பது பாடல் பகுதி. இங்கே 'வாயால்' என்னும் சொல்லின் நயம் கவனிக்கத் தக்கது. கைகேயி வாயால் வரம் கேட்டுத்தானே கொன்றாள் அல்லவா? மற்றும், தின்பது வாய்தானே என்னும் கருத்தும் இதிலே அடங்கியுள்ளது.

## நாவில் நீர் வரல்

ஒருவர் சிறந்த உணவு உண்பதைப் பார்க்கும் மற்றொருவர்க்கு நாக்கில் நீர் ஊறும் என்பதாகச் சொல்வதுண்டு. இங்கே, பரதன், கோசலையிடம் சில சூளுரை கூறுகிறான்: நான் உண்மையில் இராமனை வஞ்சித்தேன் எனில், நறுமணம் மிக்க உணவைப் பிறர்க்கும் தராமல் அவர்களின் நாக்கில் நீர் ஊறும்படி

தான்மட்டும் உண்ணும் ஒருவன் அடையக்கூடிய தீமையை யானும் அடைவேனாக என்கிறான். பாடல் பகுதி:—

நறியன அயலவர் நாவில் நீர்வர
உறுபதம் நுங்கிய ஒருவன் ஆக யான் *(112)*

நுங்குதல்= நிரம்ப 'லபக்— லபக்' என்று விழுங்குதல். உறுபதம்= மிக்க உணவு. ஈண்டு,

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று *(82)*

என்னும் குறளும், "மருந்தே யாயினும் விருந்தோடுண்" என்னும் ஔவையின் 'கொன்றை வேந்தன்' அடி— (70) ஒப்பு நோக்கத்தக்கன.

**மங்கையர் முன்**

ஆடவர் பெண்களின் முன்னே தோல்வி உறுதலுக்கும் தாழ்த்தப்படுதலுக்கும் மிகவும் நாணுவது உலகியற்கையே. பரதன் மேலும் கூறுகிறான்: மங்கைமார்கள் முன்னே, பகைவரின் அடியைப் பணியும் தலையை உடையவனாக யான் என்று சூளுரைக்கின்றான். பாடல் பகுதி:

மணிக்குறு நகை இள மங்கை மார்கள்முன்
தணிக்குறு பகைஞரைத் தாழ்க என் தலை *(115)*

பெண்டிர் தோற்றவனை நோக்கி ஏளனமாகக் குறுநகை புரிவார்கள் என்னும் கருத்து இதிலே அடங்கியுள்ளது.

**தளை ஈர்த்த கால்**

ஒருவனைக் காலில் விலங்கு பூட்டி இழுத்துச் சென்றால், அவன் தன் பகைவர் முன்னே— ஏன்— பொது மக்கள் முன்னேயும் மிகவும் நாணம் அடைவது இயல்பு.

புதுச்சேரியிலே பெரிய கடைத் தெருவின் நடுவிலே சிறைச்சாலை உள்ளது. பெரியவர்கள் கூடின ஒரு கூட்டத்திலே, "கடைத் தெருவிலிருந்து சிறைச்சாலையை

வேறிடத்திற்கு மாற்றச் செய்யவேண்டும். கடைத் தெருவின் வழியாகப் பலர் பார்க்க விலங்கிட்டுச் சென்றால் வெட்கமாயிருக்காதா''— என்று ஒருவர் கூறினார். அதை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை; ''கடைத் தெரு வழியாகப் பலர் பார்க்க அழைத்துச் சென்றால்தான், எவரும் குற்றம் செய்ய அஞ்சுவர்— என்று மற்றவர்கள் கூறிவிட்டனர்.

இதைத்தான் பரதனும் குறிப்பிடுகிறான்: இரும்பு விலங்கு பூட்டிய கால்களோடு பகைவர் முகத்தின் எதிரில் யான் விழிப்பேனாக— என்கிறான். பாடல் பகுதி:-

இரும்பலர் நெடுந்தளை ஈர்த்த காலொடும்
விரும்பலர் முகத்தெதிர் விழித்து நிற்கயான் *(116)*

## ஆறு செல் படலம்

### மகளிரின் இரங்குதல்

ஒருவர் துணிவான மன வலிமையின்றி எடுத்ததற் கெல்லாம் சோர்ந்து போவாராயின், அவரை மற்றவர் நோக்கி, ''என்னையா! ஆண் பிள்ளையா நீ? பெண் பிள்ளைபோல் அது அதற்கும் சோர்ந்து போகிறாயே! பெண்களே அவ்வாறு சோர்வர். அவர்கள் மேல்போல் இருக்கிறதே! அவர்களினும் நீ கோழையாயிருக்கிறாயே,'' என்று கூறுதல் ஒருவகை உலகியல்.

இங்கே, வசிட்டர் பரதனை நோக்கி, நீதான் முடி சூடிக்கொண்டு ஆளவேண்டும் எனக் கூற, பரதன் நடு நடுங்கினானாம்— நாக்குப் பேச முடியாமல் தடுமாறி னானாம்— கண்களை இடுக்கிக் கொண்டானாம்— பெண் களைப்போல் நெஞ்சம் சோர்ந்து போனானாம். பாடல் பகுதி:

நடுங்கினன் நாத்தடு மாறி நாட்டமும்
இடுங்கினன் மகளிரின் இரங்கும் நெஞ்சினன் *(13)*

## திருவடி சூட்டு படலம்

### கைகயன் மகள்

ஒருவர்க்கு ஒரு பெண்ணின்மேல் காழ்ப்பு வந்து விடின், அவளது பெயரைக் கூறாமல், 'தோ அவன் பெண் டாட்டி' 'தோ அவன் மகள்' என இழித்துச் சுட்டுவது ஓர் உலகியல். இலக்குமணன் தன் சிற்றன்னையாகிய கைகேயியைத் தாய் என்றும் குறிப்பிடாமல்— கைகேயி எனப் பெயர் சூட்டியும் குறிப்பிடாமல், 'கைகயன் மகள்' என்று கூறுகின்றான்.

இலக்குவன் இராமனை நோக்கி, ''உன்னைப் பெற்ற அன்னையின் துயர் கண்டு மகிழ்பவளும்— குற்றம் நிறைந்தவளும் ஆகிய கைகயன் மகள் விழுந்து அழும்படிச் செய்கிறேன் பார்''— என்று கடுமையாகப் பேசுகிறான். பாடல் பகுதி:

**நைதல் கண்டு உவந்தவள் நவையின் ஓங்கிய**
**கைகயன் மகள் விழுந்து அரற்றக் காண்டியால்** *(40)*

### யார் முகத்தை நோக்கல்

ஒருவர் பொருந்தாச் செயல் செய்ய நேர்ந்தபோது, 'நான் இதைச் செய்தால் பின் யார் முகத்தில் விழிப்பது? ஒருவர் முகத்திலும் நாணத்தோடு விழிக்க முடியாதே,' என்று கூறுதல் உலகியலில் ஒன்று.

தந்தை இறந்ததையறிந்த இராமன் கூறுகிறான்: யான் அரசை ஏற்றுக்கொண்டிருப்பின் தந்தை இறக்க மாட்டார். கைகேயியின் வரத்துக்கு மாறாக யான் ஆள்வதனினும் யான் இறந்து போதல் நல்லது. இந்த உடம்பைச் சுமந்து கொண்டு ஆள்வதெனில், அப்புறம் யார் முகத்தில் விழிக்க முடியும்— என்கிறான். பாடல்:

**மாண்டுமுடிவ தல்லால் மாயா உடம்பிது கொண்டு**
**ஆண்டு வருவது இனியார் முகத்தே நோக்கவோ?** *(64)*

**உந்தை**

*தவறு செய்த ஒருவரின் பிள்ளைகள் இருவர் உரையாடிக் கொண்டிருக்கும்போது, அவர்களுள் ஒருவர் இன்னொருவரை நோக்கி, இது நம் தந்தை செய்த தவறு என்னாமல், 'உன் தந்தை செய்த தவறு' எனக் குறிப்பிடுதல் ஒருவகை உலகியல். இதுபோல், திரும்பவும் வந்து முடிசூடிக்கொள் என்று இராமனை வற்புறுத்தும் பரதன் இராமனை நோக்கி, 'உன் தந்தை செய்த தவறும் என் தாய் செய்த தவறும் நீங்க, எந்தையே! வந்து ஆட்சி செய்' என்றான். பாடல்:*

**உந்தை தீமையும் உலகு உறாதநோய்**
**தந்த தீவினைத் தாய்செய் தீமையும்**
**எந்தை! நீங்க மீண்டு அரசு செய்கஎனா**
**சிந்தை யாவதும் தெரியக் கூறினான்** *(103)*

*உந்தை என்பது உன் (இராமனின்) தந்தை எனப் பொருள் படும். பரதன் இராமனை நோக்கி, 'என் தந்தையே' என்னும் பொருளில் 'எந்தை' என்று குறிப்பிட்டுள்ளான்.*

*இவ்வாறு, கம்பர் தம் பட்டறிவில் கண்ட உலகியல் உண்மைகளைத் தம் காப்பியத்தில் ஆங்காங்கு—பொருத்தமான இடங்களில் குறிப்பிட்டு கற்பவர் களிக்கச் செய்துள்ளார். கல்வியில் பெரிய கம்பரின் கலைத் திறனில் இஃதும் ஒன்றாகும்.*

# 3. சிறப்புறு செய்தி முத்துகள்

*கம்பர் தமது இராமாயண நூலில் சிறப்பான முத்தான செய்திகள் பல தெரிவித்துள்ளார். அவற்றுள், அயோத்தியா காண்டத்தில் உள்ள சிறப்புறு செய்திகள் சில காணலாம்:*

## மந்திரப் படலம்

### கலையின் குப்பை

*அமைச்சர்கள் வழிவழியாக அமைச்சர் மரபைச் சேர்ந்தவர்கள்; கலையின் குப்பையும் கேள்விச் செல்வமும் உடையவர்கள்— எனக் கம்பர் புகழ்ந்துள்ளார். பாடல் பகுதி:*

குல முதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பல முதல் கேள்வியும் பயனும் எய்தினார் *(5)*

*அமைச்சர்கள் கல்வி— கலை மிக்கவர்கள் என்பதைக் 'கலையின் குப்பை எய்தினர்' என்னும் தொடரால் சுட்டிக் காட்டியுள்ளார். ஈண்டு குப்பை என்றால் என்ன?*

### குப்பையின் வரலாறு

*கண்ட இடங்களில் கண்டபடிக் குவிக்கப்படும் கழிவுப் பொருள்களின் தொகுதி, தொடக்கத்தில் குப்பை எனப்*

யட்டது. அந்தக் குப்பைக் குவியலில் முளைக்கும் செடி கொடிகள் செழிப்பாயிருந்தன. எனவே, குப்பையைத் திரட்டி வயலில் கொட்டி வளங்கண்டனர். பிறகு குப்பை ஒரு சிறந்த பொருளாகத் திரட்டப்பட்டது. நிலம் இல்லாதார் வீட்டுக் குப்பை விலைக்கு வாங்கப் பட்டது. இவ்வாறாகக் குப்பை தாழ் நிலையிலிருந்து உயர்நிலை பெற்றது. கழிவுப் பொருள்களின் குவியலுக்கு ஏற்பட்ட குப்பை என்னும் பெயர் மற்ற பொருள்களின் குவியலுக்கும் வழங்கப்படலாயிற்று.

நாளடைவில், நெல், வரகு, ஆம்பல், உப்பு, பாக்கு, அகில், சந்தனம், இரத்தினம், பன்மணிகள் பலவகைச் செல்வப் பொருள்கள் முதலியவற்றின் குவியலுக்கும் குப்பை என்னும் பெயர் உயர்நிலையில் வழங்கப்பட்டது. இதற்கு உரிய அகச் சான்றுகள் சில வருமாறு:

குப்பை நெல்லின் முத்தூறு தந்த (புறநானூறு,24-22)

சில்விளை வரகின் புல்லென் குப்பை
ஆம்பல்—குப்பை கல்லாடம் (புறநானூறு,327-2)

உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை
(நற்றிணை,138-1)

பளிக்காய்க் குப்பையும் பலம்பெய் பேழையும்
(பெருங்கதை—2-2-72-பளிக்காய் = பாக்கு)

யானைவெண் கோடும் அகிலின் குப்பையும்
(சிலப்பதிகாரம்,25-37)

சந்தின் குப்பையும் தாழநீர் முத்தும்
(சிலப்பதிகாரம்,26-168-சந்து = சந்தனம்)

மரக்களி யன்ன திருத்தகு பொன்னும்
இரத்தினக் குப்பையும் இலங்கொளிப் பவழமும்
(பெருங்கதை,2-14-68,69)

**கோடிபல அடுக்கிய கொழுநிதிக் குப்பை**
*(சிலப்பதிகாரம்,6-121)*

**விரைமரம் மென்துகில் விழுநிதிக் குப்பை**
*(மணிமேகலை,16-122,123)*

*முதலிய அகச் சான்றுகளால் குப்பையின் உயர்வு புலப் படும். இந்த அடிப்படையுடன் கம்பரிடம் வருவோம். பல வகையான கலைகளைக் குறிக்கக் 'கலையின் குப்பை' என்று குறிப்பிட்டுள்ளார் கம்பர். குப்பையின் வரலாறு இது.*

## மருத்துவன் இயல்பு

*அமைச்சர்கள் அரசனுக்கு நல்லவை எவை, தீயவை எவை—என ஆய்ந்து அதற்கேற்பச் செயல்படுவார்களாம். இங்கே, பிணியாளிக்கு நல்லது எது— தீயது எது எனக் கண்டுபிடித்து அதற்கேற்ப மருத்துவம் செய்யும் மருத்து வர்கள் அமைச்சர்கட்கு ஒப்புமையாக்கப்பட்டுள்ளமை சுவையாயுள்ளது.*

**நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு**
**எல்லையில் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்** *(9)*

*என்பது பாடல் பகுதி. ஈண்டு,*

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்** *(948)*

*என்னும் திருக்குறட்பா ஒப்பு நோக்கத் தக்கது.*

## கண்ணும் உள்ளமும்

*தயரதன் இராமனை அழைத்து வருமாறு சுமந்திரனை அனுப்பினான். சுமந்திரன் இராமன் அரண்மனைக்குச் சென்று, தன் கண்ணும் உள்ளமும் தேன் உண்ட வண்டு போல் களிப்புறும்படி இராமனைக் கண்டான். பாடல் பகுதி:*

**அண்ணல் ஆண்டிருந்தான் அழகுஅரு நறவெனத் தன்**
**கண்ணும் உள்ளமும் வண்டெனக் களிப்புறக் கண்டான் (49)**

கண் களிப்புறக் கண்டதாகக் கூறுதல் மரபு. இங்கே, கண்ணோடு உள்ளமும் களிப்புறக் கண்டதாகக் கம்பர் கூறியுள்ளார். இதில் உள்ள சிறப்பாவது:—

கண் கண்டாலும் உள்ளம் வேறொன்றை நினைத்துக் கொண்டிருக்குமாயின் களிப்பு தோன்றாது. நாம் ஒரு வரைப் பார்க்கச் செல்கிறோம்; வழியில் அவரே வரினும், மனம் வேறு எதையாவது எண்ணிக்கொண்டிருந்தால் நாம் அவரைக் கவனிக்க முடியாது. அவராகப் பார்த்துப் பேச்சு கொடுப்பின், 'ஓ! நான் உங்களைப் பார்க்கத்தான் செல்கிறேன்; நன்றாகக் கவனிக்கவில்லை' என்று 'அசடு' வழிகிறோம்.

எனவே, உள்ளமும் ஒன்றினால்தான் கண் கண்டு களிப்புற முடியும். பொருள்களைப் பார்ப்பது கண்கள் அல்ல. மனம் என்பது மூளையின் இயக்கமே. மூளையே கண் என்னும் பலகணி (சன்னல்) வழியாகப் பொருள் களைப் பார்க்கிறது. கண்கள் வாயிலே யாகும். இங்கே, ''பொறிவாயில் ஐந்தவித்தான்'' என்னும் குறள் (6) பாவில், கண் உட்பட்ட ஐம்பொறிகளும் 'வாயில்' எனக் கூறப்பட்டிருப்பது ஒப்பு நோக்கத் தக்கது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளுமே, மன மாகிய மூளையின் வாயில்களே யாகும். இந்த ஐந்து பொறிகளையும் 'அறிவுக் கோட்டையின் ஐந்து வாயில்கள்' (Five Gates of Knowledge) என்று உளவிய லார் கூறுவதும் ஈண்டு எண்ணத் தக்கது.

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### கன்றுடைப் பசு

இராமனுக்கு முடிசூட்டு என்பதை யறிந்ததும், தாய் கோசலை மகிழ்ந்து தவசியர்க்கு கன்றுடன் கூடிய பசுவின் கடலைக் கொடுத்தாளாம். பாடல் பகுதி:

நன்றி ழைத்து அவண் நல்ல தவர்க்கு எலாம்
கன்றுடைப் பசுவின் கடல் நல்கினாள் (9)

*பசுவின் கடல் என்பது, அளவற்ற பசுக்களைத் தந்தாள் என்பதைக் குறிக்கிறது. (தவசியர்க்குக் 'குருமா— பிரியாணி' செய்துண்ணக் கோழியும் ஆடுமா தருவாள்?) தவசியர், பால் மட்டும் அருந்துபவர் ஆதலின் பசு தந்தாள். கன்று இல்லாத— மரத்துப் போன பசுவைக் கொடுத்தால் பால் கிடைக்காது ஆதலின், கன்றுடைப் பசு நல்கியதாகக் கம்பர் கூறியிருப்பது சிறப்பாயுள்ளது.*

**உயிரும் உடலும்**

*வசிட்டன் இராமனுக்கு உயர்ந்த கருத்துகளைக் கூறுகிறான்: உலகம் மன்னனின் உயிராகும். உலகமாகிய உயிரைத் தன்னுள் கொண்டு தாங்கும் உடல் மன்னனாவான். எனவே, நல்லாட்சி ஏற்று உயிர்களைக் காப்பதனினும் உயர்ந்த வேள்வி இல்லை— என்று வசிட்டன் கூறுகிறான். பாடல்:—*

வையம் மன்உயிர் ஆக, அம்மன் உயிர்
உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு
ஐயம் இன்றி அறம் கடவாது அருள்
மெய்யில் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ? (25)

*இப்பாடலில், மன்னனை உடலாகவும் உலகத்தை உயிராகவும் கம்பர் கூறியுள்ளார். ஆனால், வேறு புலவர்கள் சிலர் இதை மாற்றிச் சொல்லியுள்ளனர். அதாவது, உலகம் உடம்பு என்றும் அதற்கு உயிர் மன்னன் என்றும் கூறியுள்ளனர். அவற்றுள் சில காண்போம்:— மோசி கீரனார் புறநானூற்றுப் பாடல் ஒன்றில்,*

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால், யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே (186)

என்று கூறியுள்ளார்— கொங்குவேளிர் என்னும் புலவர் பெருங்கதை என்னும் தம் நூலில்,

மன்னுயிர் ஞாலக்கு இன்னுயிர் ஒக்கும் இறை
(உஞ்சைக் காண்டம், 11-17, 18)

என்று மொழிந்துள்ளார். திருத்தக்க தேவர் தமது சீவக சிந்தாமணி என்னும் நூலில்,

மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலம் தன்னுள் நாமவேல் நம்பி என்றான் (2908)

என்று உரைத்துள்ளார். தோலா மொழித் தேவர் என்பவர் தமது சூளாமணி நூலில்,

உலகிற்கு ஓருயிர்ப்
பெற்றியான் பயாபதி என்னும் பேருடை
வெற்றிவேல் மணிமுடி வேந்தர் வேந்தனே (நகர—16)

எனத் தெரிவித்துள்ளார். பரஞ்சோதி முனிவர் தமது திருவிளையாடல் புராணம்— பழியஞ்சின படலத்தில்,

உலகினுக்கு உயிரா யிருந்தனன் இறைகுலோத்துங்கன் (44)

என்று அறிவித்துள்ளார். கம்பர் கூறியிருப்பதற்கு மாறாக மற்றவர் கூற்றுகள் உள்ளன. இந்தச் சிக்கலுக்குத் தீர்வு யாது?

கம்பராமாயணத்திலுள்ள சூழ்நிலை வேறு. மற்ற நூல்களில், மன்னர்களாக இருப்பவர்களைப் பற்றிக் கூறியுள்ளனர். இங்கோ, இராமன் இன்னும் மன்னனாக ஆகவில்லை. தந்தை தயரதன் மன்னனாக இருக்கின்றான். இருக்கும் மன்னன் இறந்த பின்னே மைந்தன் மன்னனாக வரமுடியும். எனவே, தந்தை இருக்கும்போது இராமனை முடிசூட்டிக் கொள்ளும்படி வசிட்டர் வற்புறுத்துகிறார். அதற்காக, உடம்பு உயிரைத் தாங்கிக் காத்தல்போல், மன்னன் உலகைக் காக்க வேண்டும். அகவை முதிர்ந்து தளர்ந்து போன தயரதனால், இனி உடம்பாக இருந்து உலகாகிய உயிரைக் காக்க முடியாது— எனவே நீ

முடிசூட்டிக் கொள் என்னும் கருத்தில் கூறுகிறான். இதை ஒருவகை வேள்வி என்கிறான். வேள்வித் தீயில் ஆடு மாடுகளின் உடல்கள் போடப்பட்டுத் தேவர்கட்கு அவி உணவாகிறது. மன்னனும் தன் உடம்பை வருத்தி உழைத்து உலகைக் காக்க வேண்டும். இந்தக் கருத்துகள் எல்லாம் கம்பர் பாடலில் அடங்கியுள்ளன. இங்கே திருமூலரின் திருமந்திர நூலில் உள்ள

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே (724)

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே (725)

என்னும் பாடல்கள் ஈண்டு எண்ணத்தக்கன. உடம்பு அழியின் உயிர் அழிந்து விடும்; இறைவன் உள்ளே இருப்பதற்கு உடம்பு கோயிலாக உள்ளது; அதனால் யான் உடலைக் காக்கிறேன்; அதனால் உயிர் வாழ முடிகிறது— என்பது பாடல்களின் கருத்து. இறைவனுக்கு உடம்பு கோயிலாக இருப்பது போல், உலகினுக்கு மன்னன் இருப்பிடம் ஆகிறான். மன்னனாகிய உடம்பு அழிந்தால், உலகமாகிய உயிர் வாழ முடியாது. எனவே, தயரதனால் தாங்க முடியாத சுமையை நீ (இராமன்) தாங்காவிடின் உலகாகிய உயிர் அழியும்— என்ற குறிப்புடன் வசிட்டன் இராமனிடம் கூறியதாகக் கொள்ள வேண்டும்.

சூழ்நிலையை ஒட்டி மன்னன் உடம்பு போன்றவன் என்று கூறப்பட்டுள்ளதே தவிர, அரசன் உயிர் என்ற கருத்து கம்பருக்கும் உடன்பாடே. நகர் நீங்கு படலத்தில்,

இயங்கு பல் உயிர்க்கு ஓர் உயிர்என நின்ற இராமன் (213)

என்று கம்பர் கூறியிருப்பது காண்க.

### தூம கேது

தூம கேது என்பது ஒருவகை வால் விண்மீன் (வால் நட்சத்திரம்— Comet) தூமம்=புகை; கேது=கொடி. எனவே, இதனைத் தமிழ் நூல்கள் 'புகைக் கொடி' என்றும் கூறும் சிலப்பதிகாரத்திலிருந்து ஓர் அகச் சான்று காண்போம்:

**கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்...** *(10-102, 103)*

புகை என்பது வெப்பத் தோற்றம். கொடி என்பது வால். விண் வீழ் கொள்ளியாகிய இந்தத் தூம கேது தோன்றினால் மண்ணுலகம் (பூமி) கெடுதியை எதிர் நோக்க வேண்டியிருக்குமாம்.

பூமிக்குத் தொல்லை தரும் தூம கேதுவைப் போன்ற பெண்டிர், சிலர்மேல் கொள்ளும் காமம் இல்லையெனில் கெடுதியில்லை எனக் கூறுகிறது கம்பர் பாடல்:

**தூம கேது புவிக் கெனத் தோன்றிய**
**வாம மேகலை மங்கையரால் வரும்**
**காமம் இல்லை யெனில் கடுங் கேடெனும்**
**நாமம் இல்லை நரகமும் இல்லையே** (29)

என்பது பாடல். ஒருவர் மற்றொருவரை மட்டம்தட்டிப் பேசும் பொருளில், 'போடா தூம காது' என்று சொன்னதை யான் இளமையில் கேட்டிருக்கிறேன். அப்போது இதன் பொருள் தெரியவில்லை. பிறகே, தூம கேது என்பதே 'தூம காது' எனக் கொச்சையாக மருவி வழங்கப்படுகிறது என்னும் உண்மை விளங்கிற்று.

### மயில் முறைக் குலம்

இராமனுக்கு முடிசூட்டலாகாது— பரதனுக்கே பட்டம் தரவேண்டும் எனக் கூறிய கூனிமேல் கைகேயி சினம் கொண்டு கூறுகிறாள்: ஞாயிறு குலத்தில் வந்தவர்கள் உயிர் போவதெனினும் உரை மாறமாட்டார்கள்.

எனவே, தயரதன் இராமனுக்குப் பட்டம் என்று கூறிய பின் அதை மாற்ற முடியாது. இவர்களது குலத்து உரிமை மயில் முறைக் குலத்ததாகும். மனுவின் காலத்தி லிருந்து மாறவில்லை. நீ உன் இழி மதியால் இவ்வாறு கூறலாமா? என்று கடிந்துரைக்கிறாள்:

**வெயில் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர்**
**உயிர் முதல் பொருள் திறம்பினும் உரை திறம்பாதோர்**
**மயில் முறைக் குலத்து உரிமையை, மனுமுதல் மரபை**
**செயிர் உறப் புலைச் சிந்தையால் என்சொனாய் தீயோய்** (72)

ஞாயிறு குலத்து வந்த மன்னன் சிபி புறாவிற்காக உடலை அரிந்து கொடுத்தமை முதலான செய்திகளை, இங்கே ஞாயிறு குலத்தவரின் சீரிய பண்புடைமையாகக் கொள்ளலாம். மயில் முட்டைகள் இட்டுப் பல குஞ்சுகள் பொரிக்கினும் முதலில் பொரித்த குஞ்சுக்கே தோகை வளரும். எனவே, இவர்களிலும், மயில் முறை போலவே, முதலில் பிறந்தவனுக்கே பட்டம் அளிப்பது முறை என்றாள் கைகேயி. மற்றும் இந்தக் கருத்து கச்சியப்ப முனிவரின் தணிகைப் புராணத்திலும் சொல்லப் பட்டுள்ளது (களவு—244):—

**பலாவம் பொழிலின் ஒருதாய் உயிர்த்த பலமயிற்கும்**
**கலாவம் புனைந்த களிமயில் மூத்தது**

என்பது பாடல் பகுதி. கலாவம்=தோகை.

## கைகேயி சூழ்வினைப் படலம்

### கங்கை-கன்னி

புதிதாய் முடிசூடிக் கொள்பவர்களும், அறுபதாம் அகவைத் திருமணம் (மணி விழா) செய்து கொள்பவரும் இன்ன பிறரும், பல இடங்களிலிருந்து நீர் கொண்டு வந்து முழுக்காடுவது மரபு. இங்கே இராமனுக்கு முடிசூட்டின

போது நீராட்ட, வடக்கே இமயத்திலிருந்து வரும் கங்கை நீர் முதல் தெற்கே உள்ள கன்னியாகுமரிக் கடல் நீர்வரை உள்ள பல மங்கல நீர்களும் கொணரப்பட்டனவாம். இங்கே கம்பர் தெற்குக் கோடி முதல் வடக்குக் கோடி வரை உள்ள பகுதிகளை இணைத்து இந்திய ஒருமைப்பாட்டைச் சுட்டிக் காட்டுவதுபோல் தோன்றுகிறதல்லவா? மேலும் நாலு வாரியின் நீரும் கொண்டு வந்தனராம். மற்றும், முடி சூட்டற்கு வேண்டிய முன் ஆயத்தங்கள் அனைத்தையும் வசிட்டர் செய்தாராம்.

> கங்கையே முதல ஆகக் கன்னி ஈறு ஆய தீர்த்த
> மங்கலப் புனலும் நாலு வாரியின் நீரும் பூரித்து
> அங்கியின் வினையிற்கு ஏற்ற யாவையும் அமைத்து வீரச்
> சிங்க ஆசனமும் வைத்துச் செய்வன பிறவும் செய்தான் (81)

என்பது பாடல். நாலு வாரி என்பதற்கு, நான்கு திக்குகளிலும் உள்ள கடல் எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. இது குழப்பமாயுள்ளது. நம் நாட்டின் (இந்தியா-தமிழ் நாடு) மூன்று திக்குகளில் கடல் உள்ளது. அவை வங்கக் கடல், அரபிக் கடல், இந்துமா கடல், என்பன. வடக்கே கடல் இல்லை. வடக்கே சீனாவும், இரஷ்யாவும் உள்ளன. இரஷ்யாவுக்கும் வடக்கே உள்ள ஆர்டிக் கடலை நாலாவது கடல் என்று கூறுவதா? ஒரு காலத்தில் இந்தியாவின் வட பகுதி கடலாயிருந்தது; பின்னர்த் தெற்கேயிருந்த குமரிக்கண்டம் (லெமூரியாக் கண்டம்) ஆழ்ந்து கடலில் மூழ்கிவிட்டதாகவும், வடக்கேயிருந்த கடல் பகுதி உயர்ந்து இமயமலை முதலிய பகுதிகள் மேலே எழுந்து விட்டதாகவும் ஓர் ஆய்வுக் கருத்து சொல்லப்பட்டுள்ளது. இது பொருத்தமெனில், இந்தியாவின் நான்கு பக்கமும் கடல் இருந்ததாகக் கொள்ளலாம்.

பூமிக்கு நானிலம் (நால் + நிலம்) என்னும் பெயர் உண்டு. கடல்களின் நடுவே உள்ள நான்கு பக்க நிலப் பகுதியைக் குறிக்கும் இந்தப் பெயர் தெளிவாயுள்ளது.

கடலுக்கு 'முந்நீர்' என்ற பெயர் தமிழில் உள்ளது. ஆற்று நீர், வேற்று நீர் (மழை), ஊற்றுநீர் (அடி ஊற்று) என்னும் மூவகை நீரையுடையது எனவும், படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூவகைத் தொழில் புரிவது எனவும் சிலரால் பெயர்க் காரணம் கூறப்படுகின்றது. இதனினும், கிழக்கு (வங்கக் கடல்), மேற்கு (அரபிக் கடல்) தெற்கு (இந்துமா கடல்) ஆகிய மூன்று திக்கு களிலும் உள்ள நீர்ப் பகுதியாதலின் 'முந்நீர்' என்னும் பெயர் வழங்கப்பட்டுள்ளது என்பதே பொருத்தமான தாகும். எனவே, முந்நீர் என்னும் பெயர் தெளிவானது. ஒருவேளை, இந்த மூன்று பக்கக் கடலுடன், தமிழ் நாட்டிற்கும் இலங்கைக்கும் நடுவே உள்ள கடல் பகுதியையும் சேர்த்து நான்கு கடல் என்பது கூறப் பட்டிருக்குமோ! ஆய்வுக்கு உரியது இது.

### தனி அன்று, பொது

முடிசூட்டிக் கொள்ள வரச் சொன்ன தயரதனின் மாளிகைக்கு இராமன் தேரில் சென்றதைக் கண்ட மக்கள், பல பேசிக் கொண்டனர். அவற்றுள் ஒன்று: இனி உலகில் தீவினைகளும் துயரங்களும் அ்றுப்போகும். இனி இவ்வுலகம் தனித் தனியாய்ப் பலரால் அரசாளப் படாமல், பொதுவாய் இராமன் ஒருவனால் அரசாளப் படும் என்றனர். பாடல் பகுதி:—

**பாவமும் அருந்துயரும் வேர் பறியும் என்பார்;**
**பூவலயம் இன்று தனி அன்று; பொது என்பார்** (*102*)

இந்தப் பாடலுக்கு எதிர் மாறானது போன்ற ஒரு கருத்தைப் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் நக்கீரர் கூறியிருக்கிறார். அதாவது, உலகம் பல அரசர்கள் ஆளக்கூடியதாய்ப் பலருக்கும் பொதுவானதாய் இல்லாமல், தனி ஒருவர்க்கே உரியதாய்த் தனி ஓர் அரசராய்த் தாமே ஆளக் கூடிய பேரரசர்க்கும் சரி— எளிய வேடன் ஒருவனுக்கும் சரி— அனைவருக்குமே

உண்பது நாழி— உடுப்பவை இரண்டே— என்று கூறுகிறார்.

தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்......
உண்பது நாழி உடுப்பவை இரண்டே (189)

என்பது பாடல் பகுதி. நக்கீரர் 'பொதுமை இன்றி' என்கிறார்; கம்பர் 'பொது' என்கிறார். கம்பர் 'தனி அன்று' என்கிறார்; நக்கீரர் 'ஒருமையோர்' என்கிறார்.

உலகம் பலருக்கும் உரியதன்றி ஒருவர்க்கே உரியதாம் கருத்தை நக்கீரரும் ஒத்துக் கொள்ளவில்லை. அப்படி ஒருவர் இருப்பினும் அவருக்கும் உண்பது நாழி— உடுப்பன இரண்டே என்கிறார். நக்கீரர் கருத்துக்குக் கம்பர் கருத்து மாறானது போல் மேலோடு பார்க்கும் போது தோன்றுகிறதே தவிர, உண்மையில் வேறுபாடன்று. 'தனி அன்று பொது' எனக் கம்பர் கூறியதன் கருத்து, இராமன் அனைவருக்கும் உரிமை தந்து அனைவரையும் அணைத்துக் கொண்டு பொதுவான நடு நிலைமையுடன் அரசாள்வான்— என்பதாகும்.

## நகர் நீங்கு படலம்

### மூட்டாத தீ

இந்த உலகம் அழியும் கடைசிக் காலத்து, கடலுக்கு உள்ளே உள்ள 'வடவை முகத்தீ' என்னும் நெருப்பு, யாரும் மூட்டாமலேயே தானே எழுந்து உலகத்தை எரித்து அழிக்குமாம். அது யாரும் மூட்டாத தீயாகும். இராமனுக்குக் காடு என்பதை அறிந்ததும், இலக்குமணன் மூட்டாத தீயைப் போல் கொதித்து எழுந்தானாம். வடவை முக நெருப்புக்கு மூட்டாத தீ எனப் பெயர் தந்திருப்பது சிறப்பாயுள்ளது. பாடல்:

கேட்டான் இளையோன்;...........
முட்டாத காலக் கடைத்தீ என மூண்டெழுந்தான் (111)

## தென் சொல்லும் வட சொல்லும்

இராமன் தென் சொல்லாகிய தமிழைக் கற்றுத் தேர்ந்து கடந்து துறை போகியவன்— வட சொல்லாகிய சமஸ்கிருதக் கலையின் இறுதி எல்லைவரை சென்று கற்றறிந்தவன் என்னும் பொருளில் கம்பர் கூறியுள்ளார்:

தென்சொல் கடந்தான்; வடசொல் கலைக்கு எல்லை தேர்ந்தான் (136)

என்பது பாடல் பகுதி. இச் செய்தி மிகவும் வியப்பளிக்கிறது. இதிலிருந்து பல செய்திகள் புறப்படுகின்றன. நல்ல கருப்பனாகிய இராமனை வெண் மஞ்சள் நிறமுடைய ஆரியனாகக் கூறவியலாது. அவன் தமிழனாகத்தான் இருக்கவேண்டும். ஆரியர்கள் கைபர் கணவாய் வழியாக வட இந்தியாவிற்குள் நுழைந்து, ஆங்கிருந்த தமிழர்களை வென்று தெற்கே துரத்தி விட்டனர். இராமனும் மற்றவரும் தமிழே பேசியிருப்பர். தமிழுடன் சமசுகிருதமும் இக்காலத்தாற்போல் கற்றுக் கொண்டிருப்பர்— முதலிய கருத்துகள் புற்றீசல்கள் போல் புறப்படுகின்றன.

இந்தியாவின் தலைமை அமைச்சராக இருந்த பண்டித ஜவகர்லால் நேரு அவர்களே, திராவிடர்கள் வடக்கேயிருந்து தெற்கே சென்றனர் என்று எழுதியிருப்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. மேலும், அகழ்ந்து கண்டு பிடிக்கப்பட்டுள்ள 'அரப்பா— மொகஞ்சதரா— சிந்து வெளி நாகரிகம்' பழைய திராவிட நாகரிகமாகும் என்னும் ஆராய்ச்சியும் ஈண்டு எண்ணத் தக்கது. மற்றும், கம்ப ராமாயணம்— ஆரணிய காண்டத்தில் தெரிவிக்கப் பட்டுள்ள ஒரு கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

காட்டில் இராமனை அகத்தியர் வரவேற்கிறார். அகத்தியரும் இராமரும் அளவளாவி உரையாடிக்

கொண்டனர். இவர்கள் எம்மொழியில் உரையாடியிருக்கலாம் என்பது வினாக் குறி. அகத்தியரைக் கம்பர் பின்வருமாறு அறிமுகப்படுத்தியுள்ளார்:— சூலப் படையினையும் நெற்றிக் கண்ணையும் உடைய சிவன், நான்கு வேதங்களினும் உயர்ந்து உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் சிறந்துள்ள தமிழை அகத்தியர்க்குத் தந்தார். அந்தத் தமிழை அகத்தியர் உலகில் பரப்பினார். (வட மொழியைப் பாணினிக்கும் தென் தமிழை அகத்தியர்க்கும் சிவன் தந்ததாகக் கூறுதல் மரபு)

வடமொழி போல் வழக்கற்றுப் போகாமல், என்றைக்கும் நின்று நிலவுகின்ற தென் தமிழைப் பேசி எழுதி வளர்த்துப் புகழ் கொண்ட அகத்தியனை இராமன் வணங்கினான். அகத்தியன் அவனைத் தழுவிக் கொண்டு 'நன்று வரவு' (நல்வரவாகுக) என வாழ்த்தி வரவேற்றான். பாடல்கள்:— (ஆரணிய காண்டம்—அகத்தியப் படலம்)

உழக்கும் மறை நாலினும் உயர்ந்து உலகம் ஓதும்
வழக்கினும் மதிக் கவியினும் மரபின் நாடி
நிழல் பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங்கண்
தழல் புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான் (41)

நின்றவனை வந்த நெடியோன் அடி பணிந்தான்
அன்றவனும் அன்பொடு தழீஇ அழுத கண்ணால்
'நன்று வரவு' என்று பல நல்லுரை பகர்ந்தான்
என்றும் உளதென் தமிழ் இயம்பி இசை கொண்டான் (47)

இந்தப் பாடல்களின்படி நோக்கின், அகத்தியரும் இராமரும் தமிழில் பேசிக்கொண்டிருப்பர் என நுனித்துணர (யூகிக்க) இடம் உண்டு. அதனால்தான் இராமன் 'தென் சொல் கடந்தான்' எனச் சிறப்பிக்கப் பட்டுள்ளான்.

இங்கே எழக் கூடிய இன்னொரு சிக்கலை அவிழ்ப்பது கடினமே. அதாவது, இராமன் தமிழ் மரபினன்

என்றால், பெயர்களெல்லாம் தமிழ்ப் பெயராக அல்லவா இருக்க வேண்டும்? வடமொழிப் பெயர்களாக உள்ளனவே!— என்ற வினா எழலாம். வடமொழியில் வடமொழியாளர்கள் எழுதிய ஒரு நெடுங்கதை வடமொழிப் பெயர்களைக் கொண்டுதான் இருக்கும்— என்பதைத் தவிர வேறு என்ன கூற முடியும்? இந்தக் கருத்து முற்ற முடிந்ததன்று. இன்னும் ஆய்தற்கு உரியது.

## சுமந்திரன் மீட்சிப் படலம்

### கல்வி மாட்சி

மாட்டு வண்டி, குதிரை வண்டி, மிதிவண்டி, சிற்றுந்து— பேருந்து— சரக்குந்து, புகை வண்டி, கப்பல், வான ஊர்தி முதலியவற்றை ஓட்டுவதற்கு, அது அதற்கு உரிய முறையில் சிறிய அளவிலோ— பெரிய அளவிலோ முன்கூட்டிக் கற்றுக் கொண்டிருக்க வேண்டும். முற்பயிற்சி இல்லாமல் எதையும் திறம்பட ஓட்ட முடியாது.

தேர் ஓட்டுவதற்கும் நல்ல பயிற்சி வேண்டும். போரில் வெற்றி பெறத் தேரோட்டி மிகவும் வல்லவனாய் இருத்தல் வேண்டும். பார்த்தன் என்னும் அர்ச்சுனனுக்குக் கண்ணன் திறமையாகத் தேரோட்டியதால்தான் அர்ச்சுனன் வெற்றி பெற முடிந்தது. பார்த்தனுக்குச் சாரதியாக (தேரேரட்டியாக) கண்ணன் இருந்ததால் 'பார்த்தசாரதி' என்னும் சிறப்புப் பெயர் பெற்றான். எனவே, தேர் ஓட்டுவதற்கு எனத் தனிப் பயிற்சி பெற வேண்டும். இந்தப் பயிற்சியும் ஒரு கல்வியாகும். சுமந்திரன் இந்தக் கல்வியைச் சிறப்பாகப் பெற்றவனாம்.

நகர் மக்களுடன் இராமனை அழைக்கப் போன சுமந்திரன், இராமன் வரமறுத்ததால், தேரை அயோத்தி நோக்கி ஓட்டினான். அப்போது கானகத்தில் நகர மக்கள்

உறங்கிக் கொண்டிருந்தனர். அவர்கட்குத் தெரியாமல் தேரை ஓட்டினானாம். அதாவது, அவர்கள் விழித்துப் பார்க்கின், தேர் ஓடிய பாதையைப் பார்த்து, இராமன் நகருக்குத் திரும்பி விட்டான் என்று மக்கள் நம்பும்படித் தேரைத் திறமையுடன் ஓட்டினானாம். இராமன் மேற் கொண்டு காடு நோக்கிச் சென்று விட்டதால், இராமனை யும் தேரையும் காணாத மக்கள், இராமன் நகர் திரும்பி விட்டான் என நம்பினர். இதற்குக் காரணம், சுமந்திரன் கற்றிருந்த தேர் ஓட்டும் கல்வி மாட்சியே யாகும். பாடல்:—

**கூட்டினன் தேர்ப்பொறி கூட்டிக் கோள்முறை**
**பூட்டினன் புரவி, அப்புரவி போம்நெறி**
**காட்டினன்; காட்டித் தன் கல்வி மாட்சியால்**
**ஓட்டினன் ஒருவரும் உணர்வுறாமலே** *(46)*

இப்பாடலில் உள்ள 'கல்வி மாட்சியால்' என்பது எண்ணத் தக்கது.

## தயரதன் மோட்சப் படலம்

### அரவும் அன்றிலும்

அகவை முதிர்ந்த பாம்பின் உடலில் மாணிக்கம் உண்டாகும் என்றும், ஆண் அன்றில் பறவையும் பெண் அன்றிலும் எப்போதும் இணைபிரியா என்றும் சொல்லுவர். கணவன் தயரதனை இழந்த கோசலை, மணி பிரிந்த பாம்பு போலவும், துணை பிரிந்த அன்றில் பேடை போலவும் துயருற்றுப் புலம்பினாளாம். பாடல் பகுதி:—

**......மருந்து இழந்தவரின் விம்மி மணி பிரி அரவின் மாழ்கி**
**அருந்துணை இழந்த அன்றில் பெடை என அரற்ற லுற்றாள்** *(15)*

## கங்கைப் படலம்

### கருப்பு எந்திரம்

*அந்தக் காலத்திலேயே கரும்பு பிழிந்து காய்ச்சும் ஏந்திரம் (பொறி) இருந்துள்ளது. காட்டில் சென்ற போது சீதை கருப்பு (கரும்பு) ஏந்திரம் முதலியன கண்டு சென்றாளாம். பாடல் பகுதி:*

**கருப்பு ஏந்திரம் முதலாயின கண்டாள், இடர் காணாள்**
**பொருப்பு ஏந்திய தோளானொடு விளையாடினள், போனாள்**
*(6)*

*மலையனைய தோள் உடைய இராமனோடு பல காட்சி களையும் விளையாட்டாகக் கண்டுகொண்டு சீதை சென்றாளாம்.*

### சொல் மலர்

*இராமனை வரவேற்ற தவசியர், கண்ணீரால் நீராட்டினராம்; இன்சொல்லாகிய மலரைச் சூட்டினராம்; அன்பு என்னும் அமிழ்தத்தை ஊட்டினராம்; வழி நடந்து வந்த வருத்தத்தைப் போக்கினராம். பாடல்:—*

**பொழியும் கண்ணின் புதுப்புனல் ஆட்டினர்**
**மொழியும் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்**
**அழிவில் அன்பெனும் ஆர்அமுது ஊட்டினர்**
**வழியில் வந்த வருத்தத்தை வீட்டினர்** *(14)*

*சொல்லை மலராகச் சொல்வது இலக்கிய மரபு. பூக்களின் தொகுப்பைப் 'பூமாலை' எனல் போல், சொற்களால் ஆன பாக்களின் தொகுப்பைப் 'பாமாலை' என்பர். பிறவி வேண்டா— வீடு வேண்டும் என்று கேட்பவர் கேட்பார்களாக! இறைவனே! யான் உன்மேல் 'தமிழ்ச் சொல் மலர்' புனையும் பிறவியையே வேண்டுவன்— என்று சிவப்பிரகாச அடிகளார் சோண சைல மாலை என்னும் நூலில் தெரிவித்துள்ளார்—*

விரை விடை இவரும் நினைப் பிறவாமை வேண்டுநர் வேண்டுக
மதுரம்
பெருகுறு தமிழ்ச்சொல் மலர் நினக்கு அணியும் பிறவியே
வேண்டுவன் தமியேன் *(39)*

என்பது பாடல் பகுதி. நாயன்மார்கள்— ஆழ்வார்கள் முதலியோரின் பாடல்களிலும் சொல் மலர்— சொல்மாலை என்னும் உருவகத்தைக் காணலாம். கம்பரும் சொல் மலரை விட்டார் இல்லை.

மேலும் இந்தப் பாடலில், பாட்டின் நான்கு அடிகளிலும் முதல் சீர்களில் எதுகை இருப்பதுபோல், ஈற்றுச் சீர்களிலும், ஆட்டினர்— சூட்டினர்— ஊட்டினர்— வாட்டினர் என எதுகை அமைத்திருப்பது சுவையாயுள்ளது. ஆங்கிலப் பாடல்களில் இறுதிச் சீர்களில்தான் எதுகை (Rhyme) இருக்கும் என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

## குகப் படலம்

### பிறவா வெய்யோன்

இராமன் கங்கைக் கரையில் இரவு உறங்கிக் காலையில் விழித்தபோது ஞாயிறு தோன்றினான். மக்கள் இறப்பதுபோல், ஞாயிறு முதல் நாள் மாலை இறந்தானாம் (மறைந்தானாம்); மக்கள் மீண்டும் பிறப்பதுபோல் ஞாயிறு மறுநாள் காலை பிறந்தானாம் (தோன்றினானாம்). ஆனால், உண்மையில் இவன் பிறவாதவனாம். பாடல்:—

இறக்குமாறு இது என்பான்போல் முன்னை நாள் இறந்தான்;
பின்நாள்
பிறக்குமாறு இது என்பான்போல் பிறந்தனன் பிறவா
வெய்யோன் (24)

வெய்யோன்= ஞாயிறு. மக்கள் இறப்பதும் பிறப்பதும் உண்டே தவிர, ஞாயிறு பிறப்பதும் இறப்பதும் இல்லை யாதலின் பிறவா வெய்யோன் என்றார் கம்பர்.

ஞாயிறு தோன்றுவதோ மறைவதோ இல்லை. பூவுலகு (பூமி) தன்னைத் தானே சுற்றிக் கொண்டு ஞாயிற்றையும் சுற்றுவதால், ஞாயிறு தோன்றுவது போலவும் மறைவது போலவும் இருக்கிறது என்பது இந்தக் காலத்தில் அறிந்த உண்மை. கம்பருக்கு இது தெரியுமோ— தெரியாதோ— பிறவா வெய்யோன் என அவர் கூறியிருப்பது இந்தக் காலத்திற்குப் பொருத்தமாயுள்ளது.

**தேவர் ஊன்**

குகன் தன் இடத்திலேயே நிலையாய்த் தங்கியிருக்கும் படி இராமனை வேண்டிக் கூறுகிறான்: இங்கே தேனும் தினையும் உண்ண உள்ளன. தேவரும் உட்கொள்வதற்கு உரிய ஊன் உள்ளது. துணைக்கு நாய் போல் ஊழியம் செய்யும் எங்கள் உயிர்கள் உள்ளன— என்று கூறினான். பாடல் பகுதி:—

**தேன் உள; தினை உண்டால்; தேவரும் நுகர்தற்காம்**
**ஊன் உள; துணை நாயேம் உயிர் உள...... (29)**

'நாயேம் உயிர் உள' என்பதில் உயிரையும் கொடுப்போம் உன்னும் கருத்து உள்ளது. ஆடு மாடுகளை வெட்டி வேள்வித் தீயில் இட்ட இறைச்சியைத் தேவர்கள் தின்பார்கள் என்னும் செய்தி இதில் இலை மறை காயாய் உள்ளது.

## வனம்புகு படலம்

**முக்கூடல்**

காட்டில் ஓரிடத்தில் இராமனை வரவேற்ற பரத்துவாச முனிவர், அங்கேயே தம்முடன் இருந்துவிடும்

படி வேண்டுகின்றார்: ''இராமா! இந்த இடம், கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய மூன்று ஆறுகளும் கூடும் நல்ல— புண்ணிய இடமாகும். அதனால்தான் நான் இவ்விடத்தை விட்டுப் பிரியாமல் இங்கேயே உள்ளேன். நீயும் இங்கேயே இருந்துவிடு'' என்கிறார்.

> **கங்கை யாளொடு கரியவள் நாமகள் கலந்த**
> **சங்கம் ஆதலின் பிரியலன்...** (31)

மூன்று ஆறுகள் கூடும் இடத்தைத் திரிசங்கமம் என வட மொழியிலும் முக்கூடல் எனத் தமிழிலும் கூறுவது மரபு. இந்த இடத்திற்குத் தெய்வத் தன்மை கற்பிப்பதும் உண்டு. இங்கே யமுனை 'கரியவள்' எனவும், சரசுவதி 'கலைமகள்' எனவும் தமிழ்ப் பெயரால் கம்பரால் குறிப் பிடப்பட்டிருப்பது சுவையாயுள்ளது.

## கொன்றை வேய்ங் குழல்

இராமன் முதலிய மூவரும் காட்டில் ஆயர்கள் குழல் ஊதும் முல்லை நிலத்தையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலத் தையும் கடந்து சென்று காளிந்தி ஆற்றைக் கண்டனராம்; அந்த ஆற்றங்கரையில் சிறிய மான் கன்றுகள் நீர் அருந்துமாம். ஞாயிறு அப்போது தலைக்குமேல் உச்சியை அடைந்திருந்தானாம்.

> **கொன்றை வேய்ங் குழல் கோவலர் முல்லையங் குறிஞ்சி**
> **சென்று, செங்கதிர்ச் செல்வனும் நடுஉற, சிறுமான்**
> **கன்று நீர்நுகர் காளிந்தி எனும்நதி கண்டார்** (34)

என்பது பாடல் பகுதி. இதில் உள்ள 'கொன்றை வேய்ங் குழல்' என்னும் பகுதி குறிப்பிடத் தக்கது. குழலுக்குப் 'புல்லாம் குழல்' என்ற பெயர் உண்டு. புல்= புறவயிரம் உடைய மூங்கில். மூங்கிலில் துளைபோட்டுச் செய்த குழல் என்னும் பொருளில் இப்பெயர் வழங்கப்படுகிறது. முதலில், மூங்கில் கழியில் வண்டு துளைத்த துளைகள் வழியாகக் காற்று புகுந்தபோது இயற்கையாக எழுந்த

இன்னிசையைச் சுவைத்த மக்கள், பின்னர், செயற்கையாகத் துளைகள் இட்டு ஊதத் தொடங்கினர். வேய் என்றால் மூங்கில். மூங்கிலால் செய்த குழல் வேய்ங் குழல் எனப்பட்டது— என்பதாகப் பலரும் அறிந்த செய்தி இது.

இந்தப் பாடலிலோ 'கொன்றை வேய்ங்குழல்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் பொருள் யாது? இங்கே வேய் என்பது மூங்கிலைக் குறிக்கவில்லை. வேய் என்பதற்கு, 'உள் துளை உடைய பொருள்' என்னும் பொருளும் உண்டு. கொன்றை மரத்துக் காய் அல்லது பழம், உள் குழை உடையதாய் நீண்டிருக்கும். அதில் நடுநடுவே துளையிட்டுக் குழலாகப் பயன்படுத்தி இசைப் பதும் உண்டு. இதைத்தான், ஈண்டு 'கொன்றை வேய்ங் குழல்' என்பது குறிக்கின்றது.

## சித்திர கூடப் படலம்

### அருந்ததி

காட்டில் சென்று கொண்டிருந்த பொழுது, இராமன் சீதைக்குப் பலவேறு காட்சிகளைக் காண்பித்துக் கொண்டே செல்கிறான். சீதையை விளித்து விளித்துப் பல சொல்கிறான். அருந்ததிக்கு நன்னெறியாகிய கற்பு இன்னது என்று அறிவித்தவளே! என்று ஒரு நேரம் விளித்தான்:

**சீலம் இன்ன தென்று அருந்ததிக்கு அருளிய திருவே!** *(16)*

என்பது பாடல் பகுதி. கற்புடைய மகளிர் முல்லை வளர்ப்பதும் முல்லை மலர் சூடிக் கொள்வதும் மரபு. அதனால், கற்பு என்னும் சொல்லுக்கு முல்லை என்னும் பொருளும், முல்லை என்னும் சொல்லுக்குக் கற்பு என்னும் பொருளும் சொல்லும் அளவிற்கு இந்த அமைப்பு

உள்ளது. ('கற்பு முல்லை' என்னும் தலைப்பில் ஒரு நூலில் ஒரு பகுதி எழுதியுள்ளேன்) சங்க இலக்கியங்களில் 'முல்லையங் கற்பு' என்னும் தொடரைக் காணலாம். இந்த அடிப்படையுடன் அருந்ததியிடம் வருவோம்:

சிவப்பிரகாசர் தம் பிரபுலிங்க லீலை என்னும் நூலின் கைலாச கதியில், ''முல்லையந்தொடை அருந்ததி'' (27) என்று குறிப்பிட்டுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. அத்தகைய அருந்ததிக்கே கூட, சீதை சீலம் கற்றுக் கொடுக்கக் கூடியவள் என்று இராமன் வாயிலாகக் கம்பர் கூறி நம்மை இன்புறுத்தியுள்ளார்.

**உடலுக்கு உயிர்**

உலகில் உள்ள பெண்மை, (பெண்தன்மை) என்னும் உடலுக்குச் சீதை உயிர் போன்றிருக்கிறாளாம்.

**ஒருவில் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே!** (14)

என்பது பாடல் பகுதி. அதாவது, சீதை உயிராய் இருந்து உலகப் பெண்மையைக் காக்கிறாளாம். இது இராமனது விளி.

**அசுணமா**

அசுணத்தை வேட்டையாடுபவர்கள், முதலில் இன்னிசை எழுப்புவார்களாம். அந்த இசை இன்பத்தில் மிகவும் ஈடுபாடுடைய அசுணம் மெய்ம் மறந்து இருக்குமாம். அப்போது வெடிபோன்ற கடினமான பறை ஓசை எழுப்பினால், அதைப் பொறாமல் அசுணம் இறந்து போகுமாம். அசுணம் பறவை என்று சிலரும் விலங்கு என்று சிலரும் கூறுகின்றனர். இந்தக் குழப்பத்திற்குக் கம்பர் முற்றுப் புள்ளி வைத்துள்ளார்:

குறிஞ்சி நில மகளிர் ஊஞ்சல் ஆடிக்கொண்டே இனிய குறிஞ்சிப் பண் பாடுகிறார்களாம். அதைக்

கேட்ட அசுண மாக்கள் இன்புடன் கண் வளர்கின்றனவாம்.

**குனிந்த ஊசலில் கொடிச்சியர் எடுத்த இன் குறிஞ்சி**
**கனிந்த பாடல் கேட்டு அசுணமா வளர்வன காணாய்** (24)

என்பது பாடல் பகுதி. இங்கே அசுணத்தை மா (விலங்கு) எனக் கம்பர் குறிப்பிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

## தமிழ் யாழ்

புல்லாங் குழலை விட, யாழை விட, இனிமையாகச் சொல் பேசும் கிளியே என இராமன் சீதையை விளிக்கின்றான்:

**குழுவு நுண் தொளை வேயினும் குறி நரம்பு எறிவுற்று**
**எழுவு தண் தமிழ் யாழினும் இனிய சொல் கிளியே!** (28)

என்பது பாடல் பகுதி. தமிழ் யாழ் என்பதில் பல கருத்துகள் அடங்கியுள்ளனவாகக் கொள்ள இடம் உண்டு. தமிழ் என்ற சொல்லுக்கு 'இனிமை' என்னும் பொருள் உண்டு என்பதற்குப் பல இலக்கியச் சான்றுகள் உண்டு. ஒன்றே ஒன்று பார்ப்போமே! 'தமிழ் தழீஇய சாயலார்'— அதாவது இனிய நடையையுடைய பெண்டிர்— என்னும் பொருளில் திருத்தக்கதேவர் சீவக சிந்தாமணி என்னும் நூலில் அமைத்துள்ளார். எனவே, இனிய யாழ் என்பது ஒரு கருத்து. வீணை வட நாட்டது; யாழ் தமிழ் நாட்டது என்னும் ஒரு கருத்தும் குறிப்பாகக் கொள்ளப்படலாம். நகர் நீங்கு படலத்தில், இராமனைக் கம்பர்,

**தென்சொல் கடந்தான் வடசொற் கலைக்கு எல்லை தேர்ந்தான்** (136)

எனக் குறிப்பிட்டிருப்பது கொண்டு, இராமன் தமிழ் அறிந்தவனாய் இருக்க வேண்டும் என உய்த்துணர இடம் உண்டு. அதனால்தான், இராமன் வாயால் 'தமிழ் யாழ்' எனக் கம்பர் சொல்லவைத்துள்ளார் போலும்.

மற்றும், 'தமிழ்' என்று மட்டும் கூறாமல், தமிழ் குளிர்ச்சியானது என்னும் பொருளில் 'தண் தமிழ்' எனக் கூறியிருப்பது நமக்குக் குளிர்ச்சியாகவும் இனிமையாகவும் உள்ளது. மேலும், இந்தத் தொடர் ஆட்சியினால், கம்பரது தாய் மொழிப் பற்றும் புலனாகிறது.

### வேய் முத்து

முத்து பிறக்கும் இடங்களுள் மூங்கிலும் ஒன்று என்பர். பாறையில் விழுந்து கிடக்கும் முத்துகள் செக்கர் வானில் மின்னும் உடுக்கள் போன்று இருப்பதை இராமன் சீதைக்குக் காண்பிக்கின்றான்:

தொடர்ந்த பாறையில் வேயினம் சொரி கதிர் முத்தம்
இடந்தொறும் கிடந்திமைப்பன எக்கிளம் செக்கர்
படர்ந்த வானிடை தாரகை நிகர்ப்பன பாராய்! (27)

என்பது பாடல் பகுதி.

### கற்றவர் அடக்கம்

யானையையும் விழுங்கக் கூடிய பெரிய மலைப் பாம்புகள், கற்றறிந்தவர்போல் அடங்கி, முனிவர்கள் உயரமான பகுதிகளில் ஏறப் படிகளாய்க் கிடக்கின்றனவாம்.

இடிகொள் வேழத்தை எயிற்றொடும் எடுத்துடன் விழுங்கும்
கடிய மாசுணம் கற்று அறிந்தவர் என அடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம் மிதித் தேறப்
படிகளாம் எனத் தாழ்வரை கிடப்பன பாராய்! (35)

என்பது பாடல். ஈண்டு, கற்றறிந்தவர்கள் அடக்கமாய் ஒழுகுவதுபோல், மலைப் பாம்புகள் முனிவர்கட்கு அடங்கி ஒழுகுகின்றன— என்று கூறியிருப்பது குறிப்பிடத் தக்கது. இங்கே, சீவக சிந்தாமணியில் உள்ள பாடல் ஒன்று ஒப்பு நோக்கத் தக்கது.

*நெல் பயிர், தொடக்கத்தில், பச்சைப் பாம்பின் தோற்றம் போல் கருக் கொண்டு, இழிந்த செல்வர்போல் தலைநிமிர்ந்து நின்று, கருமுற்றிக் காய்ந்தபின், தேர்ந்த கல்வியாளர்போல் தலைதாழ்த்திக் கிடக்கிறதாம். (சொல்=நெல்)*

சொல்அரும் பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலளார்
செல்வமே போல் தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே *(53)*

*என்பது பாடல்.* "அறிஞர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல்" *என்பது வெற்றி வேற்கை (14)*

## முகத் தாமரை

*ஞாயிறு மறைந்ததும், தடாகங்களில் தாமரைகள் குவிந்தன; வெள்ளாம்பல்கள் மலர்ந்தன. இதைக் கம்பர் நயப்படுத்திக் கூறுகிறார். தாமரை மலர்கள் பெண்கட்குத் தமது தோற்றத்தை அளித்துவிட்டு மறைந்தனவாம். வானம் போன்ற வாவியில் உடுக்களைப் போல் வெள்ளை ஆம்பல்கள் மறைந்தனவாம்:—*

ஆனனம் மகளிருக்கு அளித்த தாமரைப்
பூ நனி முகிழ்த்தன, புலரி போனபின்
மீன் என விளங்கிய வெள்ளி ஆம்பல் வீ
வான் எனும் மணித் தடம் மலர்ந்த எங்குமே *(40)*

*என்பது பாடல். தாமரை மலர்கள் போல் பெண்களின் முகங்கள் உள்ளன என்னும் பழைய கருத்தையே புதுமைப் படுத்திக் காட்டியுள்ளார் கம்பர்.*

*இரவில் மலரும் வெள்ளை ஆம்பல், வெண்மையாய் இருப்பதற்குக் காரணம், வண்டுகளை ஈர்த்துப் பிற மகரந்தச் சேர்க்கை பெறுவதற்கேயாம். இருளில் வெள்ளைதானே கண்ணுக்குப் பளிச்செனத் தெரியும்?*

இது 'இயற்கையின் தேர்வு' (Nautral Selection) எனப் படும்.

## பள்ளி படைப் படலம்

### கிளியும் அன்னமும்

பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்கு வந்தான். அயோத்தி பொலிவற்றுக் கிடக்கிறது. கிளிகள் ஓதவில்லையாம்; காதலியர் காதலர்க்குத் தூது அனுப்பிய அன்னங்கள் போய் ஒன்றும் சொல்லவில்லையாம்.

ஓது கின்றில கிள்ளையும் ஓதிமம்
தூது சென்றன சொல்லல... (23)

என்பது பாடல் பகுதி. 'சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளை' என்பர். கிளி பிறர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்குமாம்; அந்தப் பேச்சை அப்படியே திருப்பிக் கூறுமாம். செயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணி நூலின் கடை திறப்பு என்னும் பகுதியில் இது தொடர்பான சுவையான பாடல் ஒன்றுள்ளது.

வீட்டில் இரவில் தலைவனும் தலைவியும் கலவி மயக்கத்திலே கொஞ்சிய பேச்சை, மறுநாள் பகலில், வேறு வீட்டுப் பெண்கள் வந்திருந்தபோது, அவர்கள் கேட்கும் படி அப்படியே கிளி சொல்லியதாம். நாணம் கொண்ட தலைவி கிளியின் வாயைப் பொத்தினாளாம்:

நேயக் கல்வி மயக்கத்தே நிகழ்ந்த மொழியைக் கிளி உரைப்ப
வாயைப் புதைக்கும் மடநல்லீர் மணிப்பொற் கபாடம் திறமினோ (47)

என்பது கலிங்கத்துப் பரணி பாடல். சிவப்பிரகாச அடிகளார் அருளிய பிரபுலிங்க லீலை என்னும் நூலிலும் கிளியின் பேச்சு குறிப்பிடப்பட்டுள்ளது. உமாதேவியின் கைகளில் நீல மலரும் கிளியும் உள்ளனவாம். சிவன் தேவிக்குக் கூறிய மறைமுடியின் (வேத முடிபின்)

பொருளைக் கேட்டிருந்த கிளி மறக்காமல் கூறுகின்றதாம். பாடல்.—

மறந்திடா மணி வண்டுபடு மலர்
சிறந்த நீல மலரொடு சீர்பெற
மறந் திடாது மறைமுடி யின்பொருள்
அறைந்து பைங்கிளி முன்கை அமர்ந்திட
(கைலாச கதி—23)

என்பது பாடல். இங்கே நைடதத்தில் மணம் புரிபடலத்தில் உள்ள—

கள்ளுலாம் நறிய கூந்தல் கலவியின் உரைத்த யாவும்
கிள்ளைகள் மிழற்று மாறு கேட்டிள நிலவு காலும்
முள்ளெயிறு இயங்கச் செல்வி முகிழ்நகை கோட்டினாளே (54)

என்னும் பகுதியும் ஒப்பு நோக்கத் தக்கது. இதன் கருத்தாவது: தேன் உள்ள மலர் சூடிய கூந்தலையுடைய தமயந்தி, புணர்ச்சியின்போது கணவனும் தானுமாய்ப் பேசிக்கொண்ட இன்ப உரைகளையெல்லாம் கிளிகள் சொல்லக் கேட்டு புன்முறுவல் பூத்தாள்— என்பது.

இத்தகைய பழக்கமுடைய கிளிகள் பரதன் வந்த போது அயோத்தியில் ஒன்றும் பேசவில்லையாம். தூதாக அனுப்பிய அன்னமும் போய்ச் செய்தி சொல்ல வில்லையாம்.

வர்த்தமானன் பதிப்பகப் பதிப்பில் இப்பாடலின் ஒரு பகுதி வேறாயுள்ளது:—

ஓது கின்றில கிள்ளையும்; ஓதியர்
தூது சென்றில வந்தில தோழர்பால்...

என்பது இப்பதிப்பின் பாடல். இங்கே, 'ஓதியர்' என்பதற்குக் கூந்தலழகு உடைய பெண்கள் எனவும், 'தூது சென்றில' என்பதற்குத் தூது போகவேயில்லை எனவும், 'வந்தில' என்பதற்குத் தூது போனவை திரும்பி வரவில்லை எனவும், 'தோழர்பால்' என்பதற்குக்

காதலரிடம்— தலைவரிடம் எனவும் பொருள் கொள்ளல் வேண்டும்.

## நெய்யோடு உண்ணல்

இராமனைக் காட்டுக்கு அனுப்பிய தன் தாய் கைகேயியைப் பரதன் கடிந்து பேசுகிறான்:— இராமனும் இலக்குமணனும் காட்டில் புல் உணவு— இலை உணவு கொள்ள, யான் இங்கே, அமிழ்தம் என்று சொல்லும்படியான சாலி நெல் சோற்றை நெய்யோடு உண்டு கொண்டிருப்பேனேயாயின், மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் தெரியுமா? என்கிறான்:

**உய்யா நின்றேன் இன்னமும்; என்முன் உடன் வந்தோன்**
**கை ஆர் கல்லைப் புல்அடகு உண்ண, கலம் ஏந்தி**
**வெய்யோன்நான் இன் சாலியின் வெண் சோறு அமுது என்ன**
**நெய்யோடு உண்ண நின்றது நின்றார் நினையாரோ** *(81)*

என்பது பாடல். என்முன் = அண்ணன் இராமன். உடன் வந்தோன் = இலக்குமணன். கை ஆர் கல்லை = கையே இலையாக; (கல்லை = இலை); கலம் ஏந்தி = நான் சிறந்த உண்கலம் கொண்டு. சாலியின் வெண் சோறு = சாலி அரிசியால் ஆக்கிய வெண்ணிறச் சோறு. "அப்படியே சோறு வெள்ளை வெளேர் என்று தும்பை மலர் போல் இருந்தது" என்று உலகியலில் கூறப்படுவதுண்டு. இங்கே, நெல் விளையும் தமிழ் நாட்டுக் கம்பன், மிகுதியாகக் கோதுமை விளையும் அயோத்தி நாட்டில் தன் நாட்டுச் சாலிவெண் சோற்றைப் புகுத்தியுள்ளமை நெய்யோடு கூடிய சாலி வெண் சோற்றைப் போல் பாடலைப் படிப்பதற்குச் சுவையாயுள்ளது.

நெய்யோடு உண்ணும் உணவு சிறந்தது என்பதை ஒளவையின் '**நெய்யில்லா உண்டி பாழ்**' என்னும் நல்வழி நூல் (24) பாடல் பகுதியும் அறிவிக்கிறது. இது அந்தக் காலத்து உணவு வளத்தைக் குறிக்கிறது, ஒளவையைப்

போலவே தெலுங்கு மா கவிஞராகிய வேமன்னரும், தமது வேமன்ன பத்தியம் என்னும் நூலில்,

நெய்யி லேனி கூடு நித்திய கனுவதி
பிரியமு லேனி கூடு பிண்டபு கூடையா

என்று கூறியுள்ளார். நெய்யில்லாத உணவு சிறப்பற்ற தாம். அன்பு இல்லாமல் கடமைக்கு இடும் உணவு, செத்த பிணத்திற்குப் படைக்கும் உணவு போன்றதாம். லேனி = இல்லாத. கூடு = கூழ். (தமிழ்)—கூளு (கன்னடம்) —உணவு.

## ஆறு செல் படலம்

### நான்கு யுகங்கள்

முடிசூட்டிக் கொள்ளுமாறு தன்னை வற்புறுத்திய அரசவையோரை நோக்கிப் பரதன் கூறுகின்றான்: என் அன்னை கைகேயி செய்தது சரிதான்— நான் முடிசூடிக் கொள்ளவேண்டும்— என்று கூறுவீர்களே யாயின், இந்த யுகம், நடுவில் உள்ள இன்னும் இரண்டு யுகங்களையும் தாண்டி வந்திட்ட கலியுகமாய் இருக்கும் போலும்! பாடல்:—

அடைவரும் கொடுமை என் அன்னை செய்கையை
நடைவரும் தன்மைநீர் நன்று இது என்றிரேல்,
இடைவரும் காலம் ஈண்டு இரண்டும் நீத்து இது
கடைவரும் தீநெறிக் கலியின் ஆட்சியோ? (15)

இடையில் உள்ள இரண்டு யுகங்களைத் தாண்டிக் கடைசியாக வரும் கலியுகமோ இது— எனில், இப்போது உள்ள யுகம் முதல் யுகம் என்பது பெறப்படும். அதுதான் கிரேத யுகம். நாலாவது யுகம், கலியுகம். நடுவில் உள்ள இரண்டு, என்பன திரேத யுகம், துவாபர யுகம் என்பன வாம். இந்த நான்கனுள் கடைசியான கலியுகம் பொல்லா யுகமாம்.

## செவித்தேன்

பரதன் காட்டிற்குச் சென்று இராமனை அழைத்து வரப் போகிறான்; இராமன் முடிசூடிக் கொள்வான்— என்று கூறிப் பறையறைந்ததும், அச் சொற்களைக் காதால் கேட்டா எல்லா உயிர்களும் மகிழ்ந்தனவாம். இராமன் வந்து முடிசூடிக் கொள்வான் என்ற சொல் செவி வழியாகச் சென்று இனிக்கச் செய்யும் தெய்வத் தேனோ— என்று பாராட்டப்படுகிறது:

**அவித்த ஐம்புலத்தவர் ஆதியாய் உள**
**புவித்தலை உயிரெலாம் இராமன் பொன்முடி**
**கவிக்கும் என்றுரைக்கவே களித்ததால் அது**
**செவிப் புலம் நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம்** *(23)*

என்பது பாடல். வாயால் உண்ணும் தேனின் சுவையையும் மூளைதான் நுகர்கிறது; செவியால் கேட்கும் தேன் போன்ற சொல்லின் இனிமையையும் மூளைதான் நுகர்கிறது. எனவே, மகிழ்ச்சியூட்டும் சொற்களைச் 'செவிப் புலத்தேன்' என்று கூறியிருப்பது சாலப் பொருந்தும்.

## மெல்லியல்

இராமனை அழைத்து வரப் பரதனுடன் படைஞர்களும் பொது மக்களும், திக்குகள் சிறியவாயுள்ளன— நாம் போவதற்குப் போதுமான அகலம் உள்ளவையாயில்லை என்று சொல்லிக் கொண்டு சொல்லொணாத பெருங் கூட்டமாய்ச் சென்றனராம். இவ்வளவு பெரிய சுமையைத் தாங்கிக் கொண்டிருக்கும் மண்ணை (பூமியை) ஒரு பெண் என்று சொல்லியுள்ளனர். பெண்களை 'மெல்லியர்' எனல் மரபு. அங்ஙனமெனில், இவ்வளவு பெரிய சுமையைத் தாங்கும் பூமியையும் ஒரு மெல்லியல் (மென்மைத் தன்மையுடைய பெண்) என்று கூறியவர் வல்லவர் அல்லர்— மெலிந்த தன்மை உடையவரே என்று எண்ணத் தோன்றுகிறதாம்.

செல்லிய செலவினால் சிறிய திக்கு எனச்
சொல்லிய சேனையைச் சுமந்ததே எனில்
ஒல்லொலி வேலை நீர் உடுத்த பாரை ஓர்
மெல்லியல் என்றவர் மெலியரே கொலாம் (36)

## தமிழ்த் தலைவன்

தமிழ்த் தலைவனாகிய அகத்தியன், இந்திரனுக்கு அஞ்சிக் கடலில் ஒளிந்து கொண்ட விருத்திராசுரனை வெளிக் கொணர்வதற்காகக் கடல் நீர் முழுவதையும் குடித்தது போல், பரதனுடன் சென்றவர்கள் வழியில் உள்ள ஆற்று நீர் முழுவதையும் பருகினார்களாம். சிவனது திருமணத்தின்போது கூட்ட மிகுதியால், வண்டி குடை சாய்வது போல் வடபுலம் தாழத் தென்புலம் உயர்ந்து விட, நிலைமையைச் சரி செய்யத் தென்புலம் சென்று சமமாக இரு பகுதிகளையும் நிலை நிறுத்திய அகத்தியன் போல், படைஞர்களும் முதலிலிருந்து இறுதி வரையும் ஒரே கூட்டமாகச் சென்றதால், நிலம் சம நிலையில் இருந்ததாம். அகத்தியன் வழியில் குறுக்கிட்ட விந்திய மலையை அடக்கித் தாழ்த்தியதுபோல், கூட்டமும் வழியிலுள்ள மலைகளைச் சுமை மிகுதியால் கீழே அழுந்தச் செய்தனவாம். பாடல்:—

அலை நெடும் புனல் அறக் குடித்தலால், புவி
நிலைபெற நிலைநெறி நிறுத்தலால், நெடு
மலையினை மண்உற அழுத்தலால், தமிழ்த்
தலைவனை நிகர்த்தது அத்தயங்கு தானையே (44)

என்பது பாடல். இதில் அகத்தியனைத் 'தமிழ்த் தலைவன்' எனக் கம்பர் குறிப்பிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. முன்னம் ஓரிடத்தில், 'என்றும் உளதென் தமிழ் இயம்பி இசை கொண்டான்' என்று கூறியிருக்கும் பகுதி ஈண்டு ஒப்பு நோக்கி மகிழ்தற்கு உரியது.

## கங்கை காண் படலம்

### அறுபதாயிரம்

*பரதனுடன் சென்ற படை அறுபதாயிரம் அக்குரோணி அளவு கொண்டதாம். அக்குரோணி = படையின் ஒரு பேரளவு. அறுபதாயிரம் என்பதைக் கம்பர், மூன்று பத்து (30) ஆயிரத்து (30×2=60) இரட்டி என்று பெருக்கல் கணக்கில் கூறியுள்ளார். கூட்டலின் சுருக்க எண்ணே பெருக்கல் ஆகும். பத்தை (10) ஒன்றின் கீழ் ஒன்றாக மும்முறை போட்டுக் கூட்டினால் முப்பது கிடைக்கும்; ஆயிரத்தை (1000) ஒன்றின் கீழ் ஒன்றாக முப்பது முறை போட்டுக் கூட்டினால் முப்பதாயிரம் கிடைக்கும்; முப்பது ஆயிரத்தை (30, 000) ஒன்றின் கீழ் ஒன்றாக இரண்டுமுறை போட்டுக் கூட்டினால் அறுபது ஆயிரம் (60, 000) கிடைக்கும். எனவே, கூட்டலின் சுருக்கக் குறியீடே பெருக்கல் ஆகும். பாடல்:—*

**ஆன்றவர் உணர்த்திய அக்கு ரோணிகள்**
**மூன்று பத்து ஆயிரத்து இரட்டி முற்றுமே** (5)

### காவிரி நாடு

*கம்பர் கோசல நாட்டைக் குறிக்கும் போது, தமது தாய் நாடாகிய காவிரி நாட்டை மறந்தார் இல்லை. காவிரி நாடு போன்றதாம் கோசல நாடு.* **'காவிரி நாடு அன்ன கழனி நாடு'** *என்பது பாடல் பகுதி (1).*

### உயிர் மருந்தா ?

*பரதன் படையுடன் வருவதைப் பார்த்த குகன், இராமனைக் கொல்லத்தான் வருகிறான் எனத் தவறாக எண்ணிப் பரதனைப் பழித்து மற உரை பகர்கிறான். என் துணைவனாகிய இராமன் தவம் மேற்கொள்ள, இந்தப் பரதன் நாடாள விடுவேனா? உயிர் என்ன— சாவா மருந்தா (தேவ அமிழ்தமா)? பரதனோடு போரிட்டு என் உயிரைக் கொடுத்துப் புகழ் பெறுவேன்—என்கிறான்.*

**அருந்தவம் என் துணை ஆள, இவன் புவி ஆள்வானோ**
**மருந்தெனின் அன்று உயிர்; வண்புகழ் கொண்டு பின் மாயேனோ?**
*(18)*

*என்பது பாடல் பகுதி. உலக வழக்கில், 'உயிர் வெல்லக் கட்டியா என்ன?' என்று கூறும் வழக்காறு ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. மருந்து = தேவாமிழ்தம்!*

## திருவடி சூட்டு படலம்

### தந்தை தாயர்

*தான் திரும்ப முடியாது எனப் பரதனிடம் கூறும் இராமன், கேள்வி— ஞானம்— சீலம்— மேன்மை— தேவர் எல்லாம் குரவரே! அந்தக் குரவர்கள் தந்தை தாயரே! எனவே, அவர்தம் கட்டளையை யான் மீறமுடியாது எனக் கூறுகிறான்:*

**பரவு கேள்வியும் பழுதுஇல் ஞானமும்**
**விரவு சீலமும் வினையின் மேன்மையும்**
**உரவிலோய், தொழற்கு உரிய தேவரும்**
**குரவரே எனப் பெரிது கோடியால்** *(106)*

**அந்த நற்பெருங் குரவர் ஆர்எனச்**
**சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினால்**
**தந்தை தாயர் என்று இவர்கள்தாம் அலால்**
**எந்தை கூற வேறு எவரும் இல்லையால்** *(107)*

*இவண், 'தந்தை தாய்ப் பேண்', 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்', 'தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை', 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்னும் முன்னோர் மொழிகள் ஒப்பு நோக்கத் தக்கன.*

*இவ்வாறு அயோத்தியா காண்டத்தில் சிறப்புறு செய்திகள் பல கூறிக் கம்பர் நம்மை மகிழ்வித்துள்ளார். கல்வியில் பெரியவராயிற்றே கம்பர்!*

# 4. கருத்து வெளியீட்டில் புதுமைப் பொலிவு

## மந்திரப் படலம்

### நால்வர்

ஒரு கருத்தை வெளியிடுவதில் பலர் பல முறைகளைக் கையாளலாம். கம்பர் கருத்தை வெளியிடும் முறையோ புதுமையாய்ப் பொலிவு பெற்றிருக்கும். அவற்றுள் சில காணலாம்:—

தயரதனது அவைக்கு எழுந்தருளிய வசிட்ட முனிவனது பெருமையைக் கம்பர் மிகவும் உச்சிக்குக் கொண்டு சென்றுள்ளார். மற்ற அரசர்கட்குத் தயரதன் ஆணையிடுவானாம். அத்தகைய மன்னனுக்குக் கடவுள் போல் வசிட்டன் ஆணையிடுவானாம். வசிட்டனைத் தேவரும் மற்ற முனிவர்களும் வணங்குவராம். உயர் கடவுளர்கள் மூவர் (மும்மூர்த்திகள்) எனவும், அவர்கள் சிவன், திருமால், நான்முகன் என்பவர்கள் எனவும் கூறுவது ஒரு வகை மரபு. அந்த மூவரை அடுத்து நான்காம் கடவுளாக வசிட்ட முனிவன் உயர்த்தப் பட்டுள்ளான்.

பூவரு பொலன் கழல் பொரு இல் மன்னவன்
காவலின் ஆணைசெய் கடவு ளாம்எனத்
தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள்
மூவரின் நால்வராம் முனிவந்து எய்தினான் (4)

என்பது பாடல். முனிவர்கட்குள் வசிட்டர் சிறந்தவர் என்பதைச் சிவப்பிரகாசரும் தம் பிரபுலிங்க லீலை—கைலாச கதியில் குறிப்பிட்டுள்ளார். கைலையில் கொலு வீற்றிருக்கும் சிவனது அவைக்கு வசிட்டர் முதலான முனிவர்கள் வந்தனர் என வசிட்டனுக்கு முதன்மை கொடுத்துள்ளார் சிவப்பிரகாசர்.

கழியு மாறுமுக் காலமும் உளர்தளை கழன்றார்
பழியிலா வதிட்டாதி மாமுனிவரர் பரந்தார் (38)

என்பது பாடல் பகுதி. வதிட்டர்=வசிட்டர். இந்தக் கடவுளர் மூவரை வைத்து மற்றொருவரைச் சிறப்பிக்கும் பழக்கம் கம்பருக்கு உண்டு. யுத்த காண்டம்— மாயா சீதைப் படலத்தில், முதன்மைக் கடவுளர் மூவர் என எண்ணற்ற பலர் எண்ணுகின்றனர். அனுமனையும் சேர்த்து முதன்மையர் நால்வர் எனக் கூறவேண்டும் என அனுமனைச் சிறப்பித்துள்ளார்:

இறைவர் மூவர் என்பது எண்ணிலார் எண்ணமேதான்
அறைகழல் அனுமனோடும் நால்வரே முதல்வர் அம்மா (5)

கம்பரின் இந்த முறை ஒரு புது முறையாகத் தோன்று கின்றதன்றோ?

## தம் கருமம்

தயரதன் தான் முடி துறந்து இராமனுக்கு முடிசூட்ட விரும்புகிறேன் என அவையோரிடம் கூறியபோது, ''இது வரை உலக உயிர்கட்கு நல்லன செய்தேன்; இனி என் உயிர்க்கு உறுதி தேட விழைகிறேன்''— என்று கூறுகிறான்:

மன் உயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்
என் உயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன் *(14)*

*என்பது பாடல் பகுதி. தயரதன் தன் உயிர்க்கு உறுவது செய்தல் என்பது தவம் செய்தலே. இந்தச் செய்தி, ஒரு திருக்குறளுக்கு நல்ல எடுத்துக் காட்டாய் உள்ளது.*

தவம்செய்வார் தம்கருமம் செய்வார் மற்றல்லார்
அவம்செய்வார் ஆசையுட் பட்டு *(266)*

*என்பதுதான் அந்தக் குறள். இங்ஙனமாக, தான் முடி துறக்கப் போவதை, தவம் செய்யப் போவதாகத் தயரதன் அறிவித்துள்ளான்.*

## மூப்பு வீடு

*உலகப் பற்றிலிருந்து விடுபட (வீடு பெற) வேண்டும் என மாந்தர்க்கு முதுமை அறிவிக்கின்றதாம். இதனை,*

விரும்பிய மூப்பு எனும் வீடு கண்ட யான் *(15)*

*என்னும் பகுதி அறிவிக்கின்றது.*

## ஐந்து தேர்

*கைகேயி கையில் கோல் (சவுக்கு—சாட்டி) கொண்டு குதிரைகளை அதட்டித் தேரைச் செலுத்தியுதவ, சம்பராசுரனுடைய பத்துத் தேர்களை வென்ற யான், மனம் என்னும் பேய் ஏறிச் செலுத்தும் மெய்— வாய்— கண்— மூக்கு— செவி என்னும் ஐம்பொறிகளாகிய— ஐந்து தேர்களை வெல்லுதல் எனக்கு அரிது அன்று— எளியதே எனத் தயரதன் கூறினான்:*

பஞ்சி மென் தளிர் அடிப் பாவை கோல் கொள
வெஞ்சினத்து அவுணர் தேர் பத்தும் வென்றுளேற்கு
எஞ்சலில் மனமெனும் இழுதை ஏறிய
அஞ்சுதேர் வெல்லும் ஈது அருமை ஆவதோ? *(18)*

என்பது பாடல். 'கோல் கொளல்' என்பது சுற்றி வளைத்துத் தேர் ஓட்டுதலைக் குறிக்கிறது. மனத்தை (இழுதை) கழுதை என்றுளார். மனம் ஐம்பொறிகளாகிய ஐந்து தேர்களை ஓட்டுகிறது என்னும் உருவகக் கருத்து, இந்தக் கால அறிவியல் கருத்தோடும் ஒத்திருக்கிறது. மூளையின் இயக்கமே மனம் எனப்படுவது. ஐம்பொறி களின் வாயிலாக, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து புலங்களை மூளையே அறிந்து நுகர்கிறது. எனவே, மனம் என்னும் பேய் ஐம்பொறிகளாகிய ஐந்து தேர்களை ஓட்டுவதாகக் கூறியிருப்பது சாலப் பொருந் தும். மனம் கண்டபடி அலைதலால் அது பேய் எனப் பட்டது.

## இனியது போலும்

அரசாள்வது உண்மையில் இனிது அன்று; ஆனால் மேலோடு பார்க்குங்கால் இனியது போலத் தோன்றும்; மற்றபடி இது துன்பமேயாம்— என்பதாகத் தயரதன் கூறுகிறான்:—

**உள்ளம், இனியது போலும் இவ்வரசை எண்ணுமோ** (22)

என்பது பாடல் பகுதி. ஈண்டு, அரசாள்வது துன்பமே எனச் சேரன் செங்குட்டுவன் கூறுவதாகச் சிலப்பதி காரம்— கட்டுரை காதையில் உள்ள பகுதி ஒப்பு நோக்கத் தக்கது.

மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்
பிழையுயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்... (100-104)

என்பது சிலம்புப் பகுதி.

### எச்சில் நுகர்வு

*பல்லாண்டுகளாக நுகர்ந்து கழித்த எச்சிலை மீண்டும் நுகர்வது (அரசாள்வது) இன்பமானது அன்று என்று தயரதன் கூறுகிறான்:—*

..................நெடிது நாள் உண்ட
எச்சிலை நுகர்வது இன்பம் ஆகுமோ? (25)

*என்பது பாடல் பகுதி. இதேபோல் புத்தரும் கூறியது ஈண்டு நினைவைத் தூண்டுகிறது. காட்டிற்கு வந்துவிட்ட புத்தரை, அமைச்சரும் அரசவைப் புலவரும் அடைந்து, மீண்டும் வந்து அரசேற்கும்படி வேண்டினர். அதற்குப் புத்தர் கூறியது:—*

* எறிந்து விட்ட எச்சிலை மீண்டும்
அருந்தி நுகர்வது அளவிலா மடமையாம் (64,65)

### பூமகள் திருமணம்

*அடுத்து, தயரதன் கூறுகின்றான்: இராமன் முடி சூடிக் கொள்வதைக் கண்டு யான் மகிழ வேண்டும் என்னும் கருத்தை வேறு உருவத்தில் உரைக்கிறான். இராமன் சீதேவியை (சீதையை) மணந்து கொண்ட திருமணத்தைக் கண்டு மகிழ்ந்தேன்; அவன் பூதேவியையும் மணந்து கொள்ளும் திருமணத்தைக் காண விழைகின்றேன்— என்கிறான். பூதேவியை மணப்பது என்றால், முடிசூடிக் கொண்டு நிலத்தை (பூமியை) ஆள்வதாகும். இராமனாக வந்து பிறந்திருக்கும் திருமால் திருமகள், நிலமகள் (பூமாதேவி) ஆகிய மனைவியரை உடையவர் என்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது.*

---

* *கவுதமப் புத்தர் காப்பியம்— அமைச்சரும் புலவரும் அழைத்த காதை— சுந்தர சண்முகனார்.*

பெருமகன் என்வயின் பிறக்கச் சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்
அருமகன் நிறை குணத்து அவனிமாது எனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன் (28)

என்பது பாடல். இந்தக் கருத்து வெளியீடு புதுமையாய்ச் சுவை பயக்கின்றதன்றோ?

## உயிர்க்கெலாம் நல்லன்

இராமனுக்கு முடி சூட்டுவதற்கு உடன்பட்டு வசிட்டன் பேசும்போது பின்வருமாறு இராமனைப்பற்றி ஒரு கருத்து கூறுகிறான்: மன்னா, இராமன் உன் உயிர்க்கு மட்டும் நல்லது செய்பவன் என்று கூறுதல் தக்கதன்று; உன் உயிர்க்குப் போலவே உலகத்து உயிர்க்கெல்லாம் நன்மை செய்பவன் இராமன்:

தன் உயிர்க்கு என்கை புல்லிது; தற்பயந்து எடுத்த
உன் உயிர்க்கு என, நல்லன் மன் உயிர்க்கு எலாம் உரவோய்
(37)

இங்கே, தம் மக்களின் அறிவுடைமை, தம்மைக் காட்டிலும் (அல்லது தம்மைப் போலவே) உலகத்து உயிர்கட்கு எல்லாம் இனிமையாய்த் தோன்றும்— என்னும் கருத்துடைய

தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது (68)

என்னும் திருக்குறட் பாடல் ஒப்புநோக்கி மகிழ்தற்கு உரியது.

## அகமும் முகமும்

இராமனுக்கு முடிசூட்டலாம் என்று வசிட்டன் அறிவித்தபின், அமைச்சர்கள் அனைவரும் வாயால் ஒன்றும் சொல்லலர். ஆனால் அவர்களின் முகமாகிய ஓலையில், இராமனுக்கு முடிசூட்டலாம் என்பது எழுதப்

பட்டிருந்ததாம்— என்று சுமந்திரன் கூறினான். அதாவது, அவர்களின் முகக் குறிப்பு உடன்பாட்டை அறிவித்ததாம். 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்னும் முன்னோர் மொழியும்,

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம் (706)

என்னும் குறட்பாவும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன. மற்றும், உலகியலில், ஒருவர் மற்றொருவரை நோக்கி 'நீ இப்பேர்ப்பட்டவன் என்று உன் முகத்தில்— நெற்றியில் எழுதி ஒட்டியிருக்கிறதே என்று கூறும் வழக்காறும் ஈண்டு எண்ணி மகிழ்தற்கு உரியது. பாடல்:

பழுதில் மாதவன் பின் ஒன்றும் பணித்திலன் இருந்தான்
முழுதும் எண்ணுறும் மந்திரக் கிழவர் தம் முகத்தால்
எழுதி நீட்டிய இங்கிதம் இறை மகற்கு ஏற்கத்
தொழுத கையினன் சுமந்திரன்முன் நின்று சொல்லும் (44)

## கொடிய அறம்

சில நேரங்களில் அறம் கொடியதாய்த் தோன்றுமாம். சுமந்திரன் கூறுகிறான்: இராமனுக்கு முடிசூட்டு என்ற செய்தியால் உண்டாகும் குளிர்ச்சியை, தயரதனைப் பிரிதல் என்னும் நெருப்பு சுடுகின்றதாம். என் செய்வது! 'தந்தைக்குப் பின் மைந்தன்' என்பது தொன்று தொட்டு வரும் அறமாயிற்றே. அங்ஙனமெனில், இத்தகைய அறத்தைவிடக் கொடியது வேறொன்றும் இருக்க முடியாது என்கிறான். உண்மையில் அறம் கொடியதன்று. ஈண்டு அவ்வாறு கூறியிருப்பது ஒருவகை எதிர்மறைப் புது நோக்காகும் பாடல்:

உறத்தகும் அரசு இராமற்கு என்று உவக்கின்ற மனத்தை
துறத்தி நீ எனும் சொல் சுடும்; நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கு அன்று;
அறத்தி னூங்கு இனிக் கொடிது எனல் ஆவது ஒன்று யாதோ? (45)

**அளக்கும் முறை**

காவல் (போலீசு) துறைக்கும் போர்த்துறைக்கும் தேர்ந்தெடுக்கும் ஆட்களின் உடம்பை அளப்பது வழக்கம். இங்கே, தயரதன், தம் மகன் இராமனுக்கு நாடாளும் உடல் வலிமை இருக்கிறதா என அளக்கிறான். ஏதாவது அளவுக் கருவி கொண்டு அளந்தானா? இல்லை. இராமனைக் கட்டித் தழுவிக்கொண்டு, தன் தோள்களால் இராமனின் தோள்களையும், தனது மார்பால் இராமனது மார்பையும் அளந்தானாம்— இயற்கையாகத் தழுவியதை அளப்பதற்காகத் தழுவியதாகக் கம்பர் தற்குறிப்பேற்றம் செய்துள்ளார். பாடல்:—

**நலங்கொள் மைந்தனைத் தழுவினன் என்பதென் நனிநீர்**
**நிலங்கள் தாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்**
**விலங்கல் அன்ன திண்தோளையும் மெய்த்திரு இருக்கும்**
**அலங்கல் மார்பையும் தனது தோள் மார்புகொண்டு அளந்தான்** *(59)*

சொல் மறா மக

மறுக்காமல் முடிசூடிக் கொள்ளுமாறு இராமனிடம் தயரதன் கூறுகிறான்: அரசரோ— தேவரோ— இந்திரன் போன்றவரோ— தவசியரோ— துன்பம் நீங்கியவர் அல்லர்; ஆனால், பெற்றோர் சொல்லை மறுக்காத பிள்ளையைப் பெற்றவரே துன்பம் இல்லாதவராவர்.

மன்னர் வானவர் அல்லர்; மேல் வானவர்க் கரசாம்
பொன்னின் வார்கழல் புரந்தரன் போலியர் அல்லர்;
பின்னும் மாதவம் தொடங்கி நோன்பு இழைத்தவ ரல்லர்;
சொல் மறா மகப் பெற்றவரே துயர் துறந்தார் (67)

என்பது பாடல். ஈண்டு, ஏவாமலே குறிப்பறிந்து பணிபுரியும் மக்களே, இறப்பைத் தராத அமிழ்தம் போன்றவராவர் என்னும் கருத்துடைய "ஏவா மக்கள் மூவா மருந்து" என்னும் ஔவையின் கொன்றை வேந்தன் மொழி (8) ஒப்பு நோக்கத் தக்கது

### கடனும் நீதியும்

முடிசூடிக் கொள்வதற்கு இராமன் உடன்பட்டான் என்பதைக் கூறவந்த கம்பர் ஒரு தொடரில் அதைச் சொல்லிவிட்டுப் போயிருக்கலாம். ஆனால் அவர் அதை எவ்வாறு கூறுகிறார்?:— முடிசூடிக்கொள் என்று சொன்னதும், இராமன், விருப்போ வெறுப்போ கொள்ள வில்லை; இது தனது கடமை என்றும், தந்தையும் அரசனு மாகியவர் கூறுவதை ஏற்பதே அறம் என்றும் கருதி உடன்பட்டானாம்.

**தாதை அப்பரிசு உறை செயத் தாமரைக் கண்ணன்**
**காதல் உற்றிலன் இகழ்ந்திலன்; கடன் இது என்று உணர்ந்தும்,**
**யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ**
**நீதி எற்கு என நினைந்தும் அப்பணி தலைநின்றான்** (69)

### சீதையின் சிறந்தன

தன்னிடம் வந்த சிற்றரசர்களை நோக்கித் தயரதன், இராமனுக்கு முடிசூட்டப் போகிறேன் என்று நேரில்— வெளிப்படையாய் அறிவிக்கவில்லை. ''இராமனுக்கு அரசச் செல்வமும் நாடும் சீதையைப் போலவே சிறந்தன வாகப் போகின்றன என்கிறான். சீதையை அடைந்தது போலவே, திருவும் பூமியும் அடையப் போகிறானாம். பாடல்:—

**நிருபர் கேண் மின்கள் இராமற்கு நெறி முறைமையினால்**
**திருவும் பூமியும் சீதையின் சிறந்தன என்றான்** (73)

இராமனுக்கு முடிசூட்டுவதற்கு உடன்படுகின்றோம் என்று மன்னர்கள் கூறியதைக் கம்பர் நயம்படப் பின்வருமாறு கூறியுள்ளார்: ஊரார் நீர் உண்ணும் ஊருணி நிறைவதையும், பயன் மரம் பழுப்பதையும், முகில் மழை பெய்வதையும், கழனிக்கு நீர் பாய்ச்சும் ஆற்றில் தண்ணீர் நிறைவதையும் கூடா என மறுப்பவர் யார்? யாரும் இலர். அதுபோலவே இராமனது முடிசூட்டை,

*மறுப்பவர் யாரும் இல்லை; அனைவரும் உடன்படு கிறோம். பாடல்:—*

ஊருணி நிறையவும், உதவும் மாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்,
கார்மழை பொழியவும், கழனிபாய் நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் யார்? (81

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### பூண்ட காதலர்

*இராமனுக்கு முடிசூட்டு என்பதால் மகிழ்ந்த மங்கையர் நால்வர் விரைந்து ஓடிக் கோசலைக்கு இதைக் கூறினராம். இப்பெண்டிரின் மகிழ்ச்சி மிகுதியையும் அவர்களின் ஓட்டத்தின் விரைவு மிகுதியையும் பின் வருமாறு கம்பர் கூறியுள்ளார். மகிழ்ச்சி கொண்ட பெண்டிர் நால்வரும் விரைந்து ஓடியபோது, மார்புக் கச்சு அவிழ்ந்து தெரியும் கொங்கையினராகவும், அவிழ்ந்து தொங்கும் நீண்ட கூந்தலராகவும், அவிழ்ந்த— கலைந்த உடையினராகவும் ஓடினராம். ஆனால், துள்ளித் துள்ளி ஓடும் ஓட்டத்தின் விரைவினால், சிறிய இடுப்பு இன்னும் ஒடியவில்லையாம். ஆடுகின்றனராம்; பண்ணோடு பொருந்தாமல் கண்டபடி பாடுகின்றனராம்; பார்த்தவர்களை எல்லாம் கைகூப்பிக் கும்பிடுகின்றனராம்; என்ன சொல்வதென்று அறியாமல் தவிக்கின்றனராம்.*

ஆண்ட அந்நிலை ஆக அறிந்தவர்
பூண்ட காதலர் பூட்டு அவிழ் கொங்கையர்
நீண்ட கூந்தலர் நீள் கலை தாங்கலர்
ஈண்ட ஓடினர் இட்டு இடை இற்றிலர் (1)

ஆடு கின்றனர் பண் அடைவு இன்றியே
பாடு கின்றனர் பார்த்தவர்க்கே கரம்

சூடு கின்றனர் சொல்லுவது ஓர்கிலர்
மாடு சென்றனர் மங்கையர் நால்வரே (2)

என்பன பாடல்கள். நால்வர் பெண்டிரின் உவகை மிகுதியையும் ஓட்டத்தின் விரைவு மிகுதியையும் இதனினும் இன்னும் எவ்வாறு அணிந்துரைக்க முடியும்? கருத்து வெளியீட்டுச் சிறப்பில் கம்பர் உயர் எல்லைக்குப் போய்விட்டிருக்கிறார்!

### முந்துவான்

தயரதனின் வேண்டுகோள்படி, முடிசூட்டலை அறிவிப்பதற்காக, வசிட்டன் இராமன் மாளிகைக்கு மிக்க மகிழ்ச்சியுடன் விரைந்து சென்றானாம்.

முனிவனும், உவகையும் தானும் முந்துவான்
மனுகுல நாயகன் வாயில் முன்னினான் (12)

என்பது பாடல் பகுதி. 'உவகையும் தானும் முந்துவான்' என்ற தொடர் மிகவும் சுவைக்கத் தக்கது. ஓட்டப் பந்தயத்தில், சில நேரங்களில், ஒருவரை ஒருவர் மாறி மாறி முந்திக் கொண்டு ஓடுவது வழக்கம். அதுபோல இங்கே, மகிழ்ச்சியும் தானும் மாறி மாறி முந்திக்கொண்டு விரைகின்றனராம். அதாவது, மிக்க மகிழ்ச்சியோடு விரைந்து சென்றான் என்பது இதன் உட்பொருள்.

### நோற்ற தாமரை

கைகேயிக்கு இராமனது முடி சூட்டு பற்றிச் சொல்லக் கூனி சென்று, உறங்கிக் கொண்டிருந்த கைகேயியின் காலைத் தொட்டு எழுப்பினாளாம். முகம், கண், கை, கால் ஆகிய உறுப்புகட்குத் தாமரையை உவமிப்பது இலக்கிய மரபு. கைகேயியின் காலுக்கு ஒப்புமையாவதற்குத் தாமரை தவம் கிடந்ததாம். அத்தகைய காலைத் தொட்டு எழுப்பினாளாம் கூனி.

எய்தி அக்கேகயன் மடந்தை ஏடு அவிழ்
நொய்து அலர் தாமரை நோற்ற நோன்பினால்

செய்தபேர் உவமை சால் செம்பொன் சீறடி
கைகளின் தீண்டினள் காலக் கோள் அனாள் (51)

சிலர் தண்ணீரில் இருந்துகொண்டு தவம் புரிவர்; சிலர் ஒற்றைக் காலில் நின்று தவம் புரிவர். ஆனால் தாமரை ஒன்றே இந்த இரண்டு செயல்களையும் செய்கிறதாம். தண்ணீரில் ஒற்றைக் காலுடன் (ஒரு தண்டுடன்) நின்று பெரிய தவம் புரிகிறதாம் எனவே தான், 'தாமரை நோற்ற நோன்பு' எனப் பொருத்தமாகக் கம்பர் அணிந்துரைத்துள்ளார். இதனால் தாமரைக்கு "மாதவம் புரிவாள்" என்னும் பெயரும்* உண்டு.

## இரக்கம் இன்மையின் நன்மை

தயரதன் எவ்வளவு கெஞ்சிக் கேட்டும் கைகேயிக்கு இரக்கம் இல்லாது போனதால், இராமன் காட்டுக்குப் போக நேர்ந்தது. இதை அறிவிப்பதில் கம்பர் ஒரு புதுமையைக் கையாண்டுள்ளார். அதாவது:— கைகேயிக்கு இரக்கம் இல்லாததால் ஒரு பெரிய நன்மை ஏற்பட்டதாம். அதாவது, கைகேயிக்கு இரக்கம் இல்லாததால் இராமன் காட்டிற்குப் போக நேர்ந்தது. அதனால் இராமனது சிறந்த பண்புகள் வெளிப்பட்டன. அதனால் பெரும் புகழ் உண்டாயிற்று. அந்தப் புகழ் என்னும் அமிழ்தத்தை உலகம் பருகுகின்றது— என்று கம்பர் பாடியுள்ளார். பாடல்:—

அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்
இரக்கம் இன்மை அன்றோ இன்று இவ்வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல் புகழ் அமுதினைப் பருகுகின் றதுவே (86)

---

* "மாதவம் புரிவாள்" என்பதன் விரிவான விளக்கத்தை எனது "மாதவம் புரிவாள்" என்னும் நூலில் காணலாம்.

*இந்தப் பாடலில் மற்றும் ஒரு புதுமை உள்ளது: கைகேயி தூய இனிய மொழி பேசக் கூடியவள்; இளைய மான் போன்றவள்; அத்தகையவள் அருள் துறந்து கடுமொழி பேசியதற்குக் காரணம், அரக்கர்கள் செய்த தீவினையும் மற்றவர்கள் செய்த நல்வினையுமேயாகும்— என்பது தான் அந்தப் புதுமை!*

## கைகேயி சூழ்வினைப் படலம்

### பேயும் தரும்

*தயரதன் இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டா எனக் கைகேயியிடம் கெஞ்சுகிறான். தன்னிடம் ஒருவர் ஓர் உதவி கேட்டு வந்தால் பேயும் தாய்போல அவ்வுதவியைச் செய்யும். எனவே, கைகேயீ! நீ இந்த உதவியைச் செய்தால் எந்தப் பிழையும் வராது என்று கெஞ்சுகிறான்:*

**தாய்தந் தென்ன தன்னை இரந்தால் தழல் வெங் கண்**
**பேய்தந் தீயும் நீ இது தந்தால் பிழை ஆமோ** *(33)*

### நா அம்பு

*தயரதன் கைகேயியை நொந்து திட்டுகிறான். நீ (கைகேயி) உன் நாக்காகிய அம்பால் என் உயிரை உண்டுவிட்டாய். இனி உலகம் 'பெண் பாவம்' என்றும் பாராமல் உனது உயிரை மாய்க்கும்.*

**நா அம்பால் என் ஆருயிர் உண்டாய்; இனி ஞாலம்**
**பாவம் பாராது இன் உயிர் கொள்ளப் படுகின்றாய்** *(42)*

*இப்பாடலில் நாக்கு அம்பாக உருவகிக்கப்பட்டுள்ளது. ஒருவர் நாவால் கெடு சொல் கூற, அதனால் மற்றொருவர் துன்பம் உறுதலைக் கண்டவர், அவன் நாக்கு என்ன நாக்கோ, என்று பழிப்பதை உலகியலில் காணலாம். மற்றும் ஒரு நயம் இதில் உள்ளது. சுவைத்து உண்பது*

நாக்கு; எனவே, நாக்கால் உயிர் உண்டாய் என்று கூறியிருப்பது பொருத்தம். குடும்பத்தில் ஒருவர் மற்றொருவரை நாணும்படி நாவால் வைதுவிட்டால், வையப்பட்டவர், மானம் தாளாது, நஞ்சு அருந்தியோ— தூக்குப் போட்டுக் கொண்டோ தற்கொலை செய்து கொள்ளும் உலகியல் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

## பிரித்த பந்தர்

இராமனது முடிசூட்டு விழாவிற்காக முத்துப் பந்தர் போடப்பட்டதுபோல் இரவில் வானில் விண்மீன்கள் பளிச்சு— பளிச்சு என மின்னிக்கொண்டிருந்தன. பொழுது புலர்ந்ததும், முத்துப் பந்தரைப் பிரித்ததுபோல் விண் மீன்கள் கண்கட்குப் புலப்படாமல் மறைந்தன.

**வரித்த தண்கதிர் முத்த தாகி இம்மண் அனைத்தும் நிழற்றமேல்**
**விரித்த பந்தர் பிரித்த தாம்என மீன் ஒளித்தது வானமே (54)**

என்பது பாடல் பகுதி. வானில் இரவில் உள்ளது போலவே பகலிலும் விண்மீன்கள் உள்ளன. ஆனால், ஞாயிற்றொளி மிக்கதாய் இருப்பதால் விண்மீன்கள் பகலில் தெரியவில்லை. இதைக் கம்பர், வானம் விண் மீன்களை ஒளித்து வைத்துக்கொண்டிருக்கிறது என்னும்— மிகவும் நயமான பொருளில் 'மீன் ஒளித்தது வானமே' எனக் கூறியுள்ளார். இதே பாடலின் முதல் அடியில், 'சிரித்த பங்கயம் ஒத்த செங்கண் இராமனை' என, இராமனின் கண்ணுக்குச் சிரித்த பங்கயம் ஒப்புமையாக்கப் பட்டுள்ளது. மலர்ந்த தாமரை என்னும் பொருளில் 'சிரித்த பங்கயம்' என— பங்கயம் சிரிப்பதாகக் கூறியிருப்பது புதியதொரு சுவையாகும்.

## நஞ்சினை இடுவார்

இராமனுக்கு முடி சூட்டு விழா நடக்கப்போகிறது என்ற மகிழ்ச்சியால், ஆடவரின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் மடந்தையர், காலுக்குச் செம்பஞ்சுக் குழம்பு

பூசுகின்றனர்; கைகளில் வெள்ளை வளையல்களை நல்லனவாகத் தேர்ந்தெடுத்து அணிகின்றனர்; கண்கட்கு மை தீட்டுகின்றனர்; கூந்தலில் அன்றலர்ந்த மலரைச் சூடுகின்றனர்.

**குஞ்சரம் அனையார் சிந்தைகொள் இளையார்**
**பஞ்சினை அணிவார் பால்வளை தெரிவார்**
**அஞ்சனம் என வாள் அம்புகள் இடையே**
**நஞ்சினை இடுவார் நாள்மலர் புனைவார்** (68)

குஞ்சரம் அனையார் = யானை போன்ற ஆடவர். இளையார் = இளம் பெண்கள். பால்வளை = வெள்ளை வளையல்கள். மங்கல விழாவில் வெள்ளை வளையல் அணிவது மரபு. வாள் அம்புகள் = ஒளி பொருந்திய அம்புகள் போன்ற கண்கள். அம்புகள் கண்களைக் குறிப்பது. இலக்கணத்தில் ஆகுபெயர் எனப்படும். அம்புகள் தைத்து வருத்துவதுபோல், அரிவையரின் கண் பார்வை ஆடவரின் உள்ளத்தைத் தைத்து வருத்துவதால், கண்கள் அம்புகள் எனப்பட்டன. அம்புகள் போன்ற கண்களில் அஞ்சனம் (மை) பூசினர் என வாளா கம்பர் கூறிவிடவில்லை; கண்களில் அஞ்சனம் (மை) பூசும் பெயரில் நஞ்சைப் பூசுகின்றனர் என்பது சுவைக்கத் தக்கது. ஏனெனில், அரிவை மார்களின் பார்வை ஆடவர்களை நஞ்சுபோல் துன்புறுத்துகிறதாம். இதில் இன்னொரு சுவையும் உள்ளது. போர்க்களத்தில் பயன் படுத்தும் அம்புகளின் நுனியில் நஞ்சைச் சேர்த்திருப்பார் களாம். அம்பு தைத்ததும், புண் உண்டாக, அந்தப் புண் வழியாக நஞ்சு உடலுக்குள் புகுந்து கொன்றுவிடுமாம்.

எனவேதான், கண்களாகிய அம்புகளில், அஞ்சன மாகிய நஞ்சை இடுகின்றார்களாம். இதில் மேலும் ஒரு சுவை உள்ளது! கண்களைச் சுற்றி மை தீட்டினால், முகம் மிகவும் கவர்ச்சியாயிருப்பதை யாரும் அறிவர். அதனால் தான் அஞ்சனம் நஞ்சின் இடத்தை இலக்கியத்தில் பெற்று விட்டது.

'இலக்கிய ஒப்புமை காண்டல்' என்னும் முறையில், பெண்களின் கண்கள் ஆண்களை வருத்துவதாகத் திருக்குறள்— காமத்துப் பாலில் உள்ள கருத்தையும் காண்போமே! ஒருத்தியைக் காதலிக்கும் ஒருவன் கூறுகிறான்: இவளுடைய கொடிய— வளைந்த புருவங்கள், கண்களைச் சுற்றி வளைத்துச் செல்லாமல், கண்களின் குறுக்கே, நேர் கோட்டில் சென்று கண்களை— கண்பார்வையை மறைத்திருக்குமாயின், இவள் கண்கள் நடுங்கத்தக்க துன்பத்தைக் கொடுத்திரா— என்ற கருத்துடைய குறள் வருமாறு:—

**கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்**
**செய்யல மன்இவள் கண்** (1086)

மற்றும்,

**இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு**
**நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து** (1091)

என்னும் குறளும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

**எங்கள் வாழ்க்கை**

முனிவர் முதலியோர் பல கூறி இராமனை வாழ்த்துகின்றனர். அவற்றுள் ஒரு புது முறையான வாழ்த்தும் உள்ளது. ''மைந்தனே (இராமனே)! யாங்கள் எத்தனை யாண்டு காலம் வாழவேண்டும் என அமைப்பு உள்ளதோ. அத்தனை யாண்டு காலங்களையும் உன் வாழ்நாளுடன் கூட்டி மிகவும் பல ஆண்டுகள் வாழ்வாயாக!— என்பது அது.

**மைந்த நீ கோடி எங்கள் வாழ்க்கைநாள் யாவும் என்பார்** (92)

என்பது பாடல் பகுதி. இது போன்ற ஒரு வாழ்த்து புறநானூற்றுப் பாடல் ஒன்றில் உள்ளது. சிறு குடி கிழான் பண்ணன் என்பவனைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் வாழ்த்துகிறான்: யான் வாழும் ஆண்டு காலம் எவ்வளவோ, அவ்வளவு ஆண்டு காலமும் கூட்டிப் பண்ணன் வாழ்க என்னும் பொருளில்,

யான் வாழு நாளும் பண்ணன் வாழிய (173)

என்று கூறி வாழ்த்தியுள்ளான். 'கல்வியில் பெரியராகிய கம்பர், இந்தப் புறநானூற்றுப் பாடலைப் படித்து இருக்கலாமோ!

### புகழ் தழுவல்

மேலும் பெரியோர்கள் இராமனை வாழ்த்திப் புகழ்கின்றனர்:— கடலைத் தோண்டி உண்டாக்கிய சகரர் புகழும், கங்கையை நிலத்திற்குக் கொண்டு வந்த பகீரதன் புகழும், தேவர்களைக் காப்பதற்காக அரக்கர்களைக் கொன்று வென்ற முசுகுந்தன் முதலியோரின் புகழும் இராமனது புகழுக்குப் பிற்பட்டனவேயாம்— எனப் புகழ்கின்றனர்:—

**ஆர்கலி அகழ்ந்தோர், கங்கை அவனியில் கொணர்ந்தோர், முந்தைப்**
**போர்கெழு புலவர்க் காகி அசுரரைப் பொருது வென்றோர்,**
**பேர்கெழு சிறப்பின் வந்த பெரும் புகழ் நிற்பது ஐயன்**
**தார்கெழு திரள் தோள் தந்த புகழினைத் தழுவி என்பார்** (96)

ஆர்கலி= கடல். புலவர் = தேவர். சகரர் என்பார் கடலைத் தோண்டி உண்டாக்கியதால்தான் கடலுக்குச் 'சாகரம்' என்ற பெயர் உண்டாயிற்று. பகீரதனால் நிலத்திற்குக் கொண்டு வரப்பட்டதால் கங்கை 'பாகீரதி' என்னும் பெயர் பெற்றது. முசுகுந்தன், ககுத்தன் முதலியோர் அசுரரை வென்று தேவரைக் காத்தனர். இவர்கள் அனைவரும், இராமனது ஞாயிறு குலத்தவர்— இராமன் குடியின் முன்னோர்கள். ககுத்தனது குடிவழி வந்ததால் இராமன் 'காகுத்தன்' எனப்படுகிறான்.

இவர்களின் புகழ்கள் இராமனது புகழுக்கு அடுத்தபடியான சிறப்புடையனவே யாம். இராமனுக்குப் புகழ் எப்படி வந்தது? இளமையிலேயே தன் தோள் வலிமையால் மறச் செயல்கள் புரிந்துள்ளான். அவை:— யாராலும் தகர்த்தவும் முடியாத வில்லை ஒடித்தமை; தங்கள் குல

எதிரியாகிய பரசுராமனை வென்றமை; விசுவாமித்திரனது வேள்வி காக்க அரக்கர்களைக் கொன்றமை; தாடகை வதம்— முதலியன. மற்றும், கல்லை மிதித்து அகலிகையை எழுப்பிய அறச் செயல்— இன்ன பிறவற்றால் இராமனது புகழ் மிகுதியாகும்.

மற்றவரின் புகழ்ச் செயல்கள் இராமன் புகழுக்குப் பிற்பட்டவை என்று கூறாமல், இராமனது 'புகழைத் தழுவி' என்று கூறியிருப்பதன் பொருத்தம் என்ன? ஒருவர் எழுதிய சிறந்த நூல் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு மற்றொருவர் எழுதிய நூலை முன்னதின் தழுவல் என்று கூறுதல் மரபு. தழுவலாகிய பின்னதை விட முன்னதே சிறப்புடையதாகக் கொள்ளலும் ஒருவகை மரபு. எனவே, தழுவல் என்பதற்கு, சிறப்பிலே மற்றதற்கு அடுத்தபடி யானது என்று பொருள் கொள்ளலாம். இந்த அடிப்படை யில் நோக்குங்கால், இராமனது புகழை நோக்க மற்றவர் புகழ் அடுத்தபடியேயாகும் எனக் கொள்ளலாம்.

மற்றும், 'தழுவல்' என்பதற்கு 'உள் அடக்குதல்' என்ற பொருளும் உண்டு. முருகன் அன்பர் எதிரில் தனது பேருருவை உள்ளடக்கிக் கொண்டிருப்பான் என்ற கருத்தில், நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் "**அணங்கு சால் உயர் நிலை தழீஇ**" (289ஆம் அடி) என்று பாடி யுள்ளார். தழீஇ என்றால் தழுவி என்பதாம். தழீஇ (தழுவி) என்பதற்கு 'உள்ளடக்கிக் கொண்டு' என்று பொருள் எழுதியுள்ளார் நச்சினார்க்கினியர். சகரர் முதலியோர் புகழ் நிலைத்து நிற்பது— அதாவது, அழியாமல் நிலைத்திருப்பது என்னும் பொருளில் 'பெரும் புகழ் நிற்பது' எனக் கம்பர் பாடியுள்ளார். இராமனது புகழை உள் அடக்கிக் கொண்டிருப்பதால்தான் அவர் களின் புகழ் நிலைத்திருப்பதாகப் பொருள் கொண்டு 'புகழினைத் தழுவி' என்னும் தொடரைச் சுவைக்கலாம்.

# நகர் நீங்கு படலம்

## இராமர் இருக்கும் இடம் அயோத்தி

இராமன் பிரிகிறானே என் வருந்தும் சுமித்திரைக்கு இராமன் ஆறுதல் கூறுகிறான். அன்னையே! யான் காடு செல்லினும், கடல் (கடலிடைத் தீவு) செல்லினும், வான் செல்லினும் அயோத்திக்கு யான் செல்வதைப் போன்றதே. எல்லாம் எனக்கு அயோத்தி போன்றனவே. எவரும் என்னை வெல்லமாட்டார். நீ உடலும் உயிரும் உணர்வும் நலிய வருந்தாதே— என்கிறான்.

**கான்புக் கிடினும் கடல்புக் கிடினும் கலிப்பேர்**
**வான்புக் கிடினும், எனக்கு அன்னவை மாண் அயோத்தி**
**யான்புக்க தொக்கும் எனையார் நலிகிற்கு மீட்டார்**
**ஊன்புக்கு உயிர் புக்கு உணர் புக்கு உலையற்க என்றான்** *(141)*

'இராமர் இருக்கும் இடம் அயோத்தி' என்னும் வழக்காற்றின் 'தொடக்கப் புள்ளி' (Starting Point) இப்பாடலாய் இருக்குமோ! கானைத் தாண்டிப் பின் கடல் தாண்டி இலங்கைக்குச் செல்வதால், 'கான் புக்கிடினும் கடல் புக்கிடினும்' என்று கூறியது இயற்கையான பொருத்தமாயுள்ளது.

## தோற்றல்

இராமன் பிரிவான் என்ற வருத்தத்தால், விளக்கம் குறைந்த மங்கையரின் முகங்கள் திங்களுக்குத் தோற்றனவாம்.

**நந்தினர் நகை ஒளி விளக்கம் நங்கைமார்**
**சுந்தர வதனமும் மதிக்குத் தோற்றவே** *(173)*

என்பது பாடல் பகுதி. உவமிக்கும் (உவமைப்) பொருள்கள் எல்லாம் பெண்களின் உறுப்புகட்குத் தோற்றன என்று கூறலே பெரும்பான்மையான வழக்கம். இங்கே, திங்களை வென்றிருந்த பெண்களின் அழகிய முகங்கள்

இப்போது திங்களுக்குத் தோற்றுவிட்டனவாம். ஒரு சுவை இது.

முகம் திங்களுக்குத் தோற்றது போலவே, பெண்டிரின் அமிழ்தினும் இனிமையாய் இருந்து குழலையும் யாழையும் வென்றிருந்த இனிய சொற்கள் இப்போது குழலுக்கும் யாழுக்கும் தோற்றுவிட்டனவாம். அதாவது, வருத்தத்தால் சொற்கள் நிலை தடுமாறுகின்றன. பாடல்:—

கிளையினும் நரம்பினும் நிரம்பும் கேழன
அளவிறந்து உயிர்க்க விட்டு அரற்றும் தன்மையால்
தொளைபடு குழலினோடு யாழ்க்குத் தோற்றன
இளையவர் அமுதினும் இனிய சொற்களே (176)

கிளை=மூங்கில்; மூங்கிலில் தொளை போட்டது புல்லாங்குழல். நரம்பினும் என்பது யாழ் நரம்பைக் குறிக்கிறது.

**ஆம்பல் பழனம்**

அரண்மனையில் தயரதனின் முப்பெருந்தேவியரோடு, அறுபதினாயிரம் வேறு மனைவியரும் உள்ளனர். மகன் இராமன் காடு செல்வான் என்ற துயரத்தால் இப் பெண்டிர் அனைவரும் வாய் விட்டு— வாய் திறந்து அழுதனராம். இதனால், அரண்மனைப் பகுதிகள், பகலிலே செவ்வாம்பல் பூத்த பழனம் போல் இருந்தன வாம்.

புகலிடம் கொடுவனம் போலும் என்று தம்
மகன்வயின் இரங்குறும் மகளிர் வாய்களால்
அகல்மதில் நெடுமனை அரத்த ஆம்பல்கள்
பகலிடை மலர்ந்ததோர் பழனம் போன்றவே (177)

ஆம்பல் இரவிலே மலர்வது. இம் மலர் பெண்களின் வாய்க்கு உவமையாக உரைக்கப்படுவது. எனவே, பெண்களின் சிவந்த வாய்கள் திறக்கப்பட்டதால், அரண்மனைப் பகுதிகள் பகலிலே ஆம்பல் மலர்ந்த பழனமாகத் தோற்றம் அளித்தனவாம்.

### இரும்பு மனம்

உலகில் தமக்குப் பல பிள்ளைகள் இருப்பினும், அவர்களுள் கண்— கை— கால் ஆகியவற்றுள் ஒன்று குறைந்து ஊனம் உற்ற ஒரு பிள்ளை பிரிந்தாலும் பெற்றோர் தம் உயிரை விட்டு விடுவர். தயரதனோ, முடிசூட்டுக்கு உரிமை உடைய உயரிய ஒரு மகனைப் பிரியச் செய்ததால் அவன் மனம் இரும்போ என்கின்றனர் மக்கள்:

நிறைமக உடையவர் நெறிசெல் ஐம்பொறி
குறைமகக் குறையினும் கொடுப்பராம் உயிர்
முறைமகன் வனம்புக மொழியைக் காக்கின்ற
இறைமகன் திருமனம் இரும்பு என்றார் சிலர் *(191)*

மக்கள் வருத்தத்தால் தயரதன் மனம் இரும்பு எனினும், பல பிள்ளைகளுள் ஊனமுற்ற ஒரு பிள்ளை பிரியினும் உயிர் விடுபவர் போலவே, இராமன் பிரிந்ததும் தயரதன் உயிர் பிரிந்தான் என்பது ஈண்டு எண்ணத் தக்கது.

### செவி சுடல்

கணவன் இராமன் முடியிழந்தான் என்பதற்காகவும் காடு செல்வான் என்பதற்காகவும் சீதை வருந்தவில்லை யாம்; நான் சென்று வருகிறேன்— நீ அயோத்தியிலேயே இரு என்று சொன்ன கொடிய வெப்பமான சொல் சீதையின் செவியைச் சுட்டதால் தேம்பி அழுதாளாம்:

நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்
மேய மண் இழந்தான் என்றும் விம்மலள்
'நீ வருந்தலை நீங்குவென் யான்' என்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள் *(218)*

சொல் செவியைச் சுட்டதாம். அங்ஙனமெனில், தீய சொல் நெருப்பினும் கொடியது போலும். திருவள்ளுவரும் ''நாவினால் சுட்ட வடு'' என— நாக்கி

னால் பேசும் சொல் சுடும் எனவும், 'ஆறாது' என— அச் சொல்லால் சுட்ட புண் ஆறாது எனவும் கூறியுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

> தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே
> நாவினால் சுட்ட வடு (129)

என்பது குறள். தீப் புண் ஆறிவிடுமாம்; நாப் புண் ஆறாதாம்.

## குகப் படலம்

### கண் ஈர்கிலாக் கள்வன்

இராமனை விட்டுப் பிரிய குகனுக்கு மனம் இல்லை. ஐயனே, உங்களை இந்தக் கோலத்தில் கண்ட கண்களைத் தோண்டி எடுக்காத திருட்டு மனம் உடையவன் யான் எனக் கூறுகிறான்.

> பார்குலாம் செல்வ! நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
> ஈர்கிலாக் கள்வனேன் யான்...... (17)

குகன் கூறுவது, ஒரு புது முறைத் திருட்டாக உள்ளது. நீக்கவேண்டிய கண்களைக் கள்ளத்தனமாக வைத்துக் கொண்டிருக்கிறானாம்.

### துன்பமும் இன்பமும்

பிரிய மனம் இல்லாத குகனை நோக்கி இராமன் ஆறுதல் கூறுகிறான். அன்பனே! இன்பத்திற்கு இடையிடையே துன்பம் வரும்போதுதான் இன்பத்தின் அருமை தெரிகிறது. இப்போது நாம் பிரியாமல் இங்கே உள்ளோம். இது உனக்கு இன்பமாய்த் தோன்றலாம். நான் இவ்விடத்தைப் பிரியின் உனக்குத் துன்பம் ஏற்படும். நான் மீண்டும் வந்து உன்னைக் காணுங்கால் அந்த இன்பம் மிகவும் சுவையாய் இருக்கும். அதனால்

*வருந்தற்க. நாங்கள் உடன் பிறந்தவர்கள் நால்வராயிருந் தோம் இப்போது உன்னையும் சேர்த்து ஐவரானோம்— என்பது ஆறுதல் மொழி.*

துன்புளது எனின் அன்றோ சுகம் உளது? அது அன்றிப்
பின்புளது இடை மன்னும் பிரிவுஉளது என உன்னேல்
முன்புளேம் ஒரு நால்வேம் முடிவுளது என உண்ணா
அன்புள இனி நாமோர் ஐவர்கள் உளர் ஆனோம் (43)

*பிரிவினால் வருந்தல் கூடாது என்பதை, இராமன் சுற்றி வளைத்துக் குகனுக்குக் கூறுவது சுவையாயுள்ளது.*

## சித்திர கூடப் படலம்

### கமலம் போன்றன

*காட்டில் இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் சென்று கொண்டிருந்தபோது பகல் போய் அந்தி நேரம் வந்தது. அப்போது தாமரை மலர்கள் குவிந்தன; ஆம்பல் முதலியவை மலர்ந்தன. ஆனால், இம் மூவரின் கைகளும் கண்களும் தாமரை மலர்போன்றிருந்தனவாம்.*

மொய்யுறு நறுமலர் முகிழ்த்த வாம்சில
மையறு நறுமலர் மலர்ந்த வாம்சில
ஐயனோடு இளவற்கும் அமுது அனாளுக்கும்
கைகளும் கண்களும் கமலம் போன்றவே (42)

*இதன் கருத்து என்ன? அந்தி மாலைப் பொழுது வந்ததும், மூவரும் தாமரை போன்ற கைகளைக் குவித்துக் கொண்டும் தாமரை போன்ற கண்களை மூடிக்கொண்டும் இறையை உன்னிக் கும்பிட்டுத் தொழுதனராம். கைகளுக்கும் கண்களுக்கும் தாமரையை உவமிப்பது ஒரு மரபு. இங்கே, மூடிய தாமரை மலர்களைப் போலவே, மூவரின் கைகளும் கண்களும் வழிபாட்டின்போது மூடிக் கொண்டனவாம்.*

## பள்ளி படைப் படலம்

### கொடியின் கானம்

கேகய நாட்டிலிருந்து அயோத்திக்கு வந்த பரதன் நகரில், காடுபோல் அடர்ந்து பறந்து கொண்டிருக்கும் கொடிகளைக் காணவில்லையாம். இங்கே வானளாவிய கொடிகள், ஞாயிறை நோக்கி, நீ உலகமெல்லாம் திரிந்து சோர்வுற்றிருக்கிறாய்! அதனால் இவண் தங்கி உணவு கொண்டு சோர்வு தெளிந்து செல்வாய் எனக் கூறுதல் போல் ஞாயிறைத் தடுக்குமாம். அத்தகைய காட்சியைப் பரதன் பார்க்கவில்லை. இராமன் நீங்கியதால் கொடிகள் பறக்கவில்லை.

**அண்டம் முற்றும் திரிந்து அயர்ந்ததால், அமுது**
**உண்டு போதி என்று ஒண்கதிர்ச் செல்வனை**
**விண் தொடர்ந்து விலக்குவ போல்வன**
**கண்டிலன் கொடியின் நெடுங் கானமே** (30)

கொடிகள் மிகுந்த உயரமாக இருப்பதாலும் நெடுகிலும் கட்டப்பட்டு இருப்பதாலும், ஞாயிறைத் தொடர்ந்து சென்று தடுக்க முடிந்ததாம்.

### ஏன் சென்றாய்?

தந்தையை எண்ணிப் பரதன் புலம்புகின்றான்: தந்தையே! உன்னிடம் பலரும் வந்து பலவித உதவி வேண்டி இரப்பர்; எனவே, இல்லாதவர்கள் வானுலகத்திலும் உளரோ? அவர்கட்கு உதவுவதற்காக அங்கே சென்று விட்டாயோ?

நினது குடை நிழலில் குளிர்ச்சியாய் வாழ்ந்த உயிர்கள் வெந்து வாடிக் கொண்டிருக்க, நீ கற்பகமர நிழலைக் காதலித்து விண் சென்றனையோ?

முன்பு உன்னால் வெல்லப்பட்ட சம்மரன் போன்ற அரக்கர்கள் இன்னும் உளரோ? அவர்களை அழித்துத்

*தேவர்களைக் காப்பதற்காகச் சென்றனையோ? நீ சென்று விட்டது எதற்காக?— எனப் பரதன் புலம்புகிறான்.*

செவ்வழி உருட்டிய திகிரி மன்னவ
எவ்வழி மருங்கினும் இரவ லாளர்தாம்
இவ்வழி உலகினில் இன்மை நண்ணினோர்
அவ்வழி உலகினும் உளர்கொலோ ஐயா! (51)

பல்பகல் நிழற்றும் நின்கவிகைப் பாய் நிழல்
நிற்பன பல் உயிர் உணங்க, நீ நெடுங்
கற்பக நறுநிழல் காத லித்தியோ?
மல்பக மலர்ந்ததோள் மன்னர் மன்னனே (52)

இம்பர் நின்று ஏகினை இருக்கும் சார்பிழந்து
உம்பர் வந்து உன்கழல் ஒதுங்கி னார்களோ?
சம்பரன் அனைய அத் தானைத் தானவர்
அம்பரத்து இன்னமும் உளர்கொலோ ஐயா? (53)

**பிறந்தாய் ஆதி**

*பரதன் வருத்தத்துடன் கைகேயியிடம் கூறுகிறான்: போகாத உனது உயிரைப் போக்கிக் கொள்வாயானால், உன் கெட்ட பெயர் மறையும்; அதாவது, நீ வேண்டு மென்றே பழி செய்யவில்லை; ஏதோ மறந்து தப்பித் தவறி செய்து விட்டாய் என உலகம் எண்ணும். இதனால், நீ உலகில் பிறந்த பயனும் அடைவாய். இது தவிர இப்போது உனக்கு வேறு வழியில்லை. நல்லோர் சொல்லும் உரையை நான் உனக்குச் சொல்கிறேன்— என்கிறான் பரதன்:*

சிறந்தார் சொல்லும் நல்லுரை சொன்னேன் செயல் எல்லாம்
மறந்தாய் செய்தாய் ஆகுதி; மாயா உயிர் தன்னைத்
துறந்தா யாகின் தூயையும் ஆதி உலகத்தே
பிறந்தாய் ஆதி ஈதுஅலது இல்லைப் பிறிது என்றான் (87)

*இந்தப் பாடலில் உள்ள ''தூயையும் ஆதி உலகத்தே பிறந்தாய் ஆதி'' என்னும் பகுதி, குறிப்பாக,*

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று (236)

என்னும் குறள் கருத்தை நினைவுறுத்துகின்றது அல்லவா?

## கங்கை காண் படலம்

### மேல் ஏறினான்

உலகத்தை யாண்ட மற்ற மன்னர்களையெல்லாம் (பண்பினால்) கீழ்ப்படுத்தி, அவர்களினும் பண்பினால் மேலே உயர்ந்தவனாகிய பரதன், தன்னுடன் வந்தவர்கள் எல்லாரும் படகில் ஏறிக் கங்கையைக் கடந்தபின், தானும் படகில் ஏறினான்:—

சுழித்து நீர்வரு துறை ஆற்றைச் சூழ்படை
கழித்து நீங்கியது என, கள்ள ஆசையை
அழித்து, வேறு அவனி பண்டு ஆண்ட வேந்தரை
இழித்து மேல் ஏறினான் தானும் ஏறினான் (63)

உலகில் மன்னர்கள் பெரும்பாலார் தாம் அரசாள வேண்டும் என்றே விரும்பினர்; அதற்காகப் பங்காளி அரசர்களுடனோ— உடன் பிறந்தவர்களுடனோ போட்டி போட்டும் போர் புரிந்தும் ஆட்சியைப் பிடித்தவர் பலர். கள்ள ஆசையினால், தந்தையையோ— உடன் பிறந்தவர் களையோ— சிறையில் இட்டோ— அல்லது கொன்றோ அரசு கட்டில் ஏறியவரும் உண்டு. இந்தக் காலத்திலும், ஆட்சித் தலைமையைக் கைப்பற்றப் பலர் செய்யும் சூழ்ச்சிகளை உலகம் அறியும். உலகியல் இங்ஙனம் இருக்க, எளிதில் கிடைத்த ஆட்சியைப் பரதன் ஏற்க வில்லை எனில், அவன் எல்லாரினும் மேல் ஏறியவன் தானே!

மற்றும், 'தானும் ஏறினான்' என்ற தொடரிலும் ஒரு சுவை காத்திருக்கிறது. தலைவர்கள் சிலர் உண்ணும்

பந்தியில் தாங்கள் முதலில் அமர்ந்து விடுவார்கள். ஆனால், உயர்ந்த பண்பாளர்களோ, மற்றவர்களை உண்ணச் செய்து மேற்பார்வையிட்டுப் பிறகே தாம் உண்ணுவார்கள். குழுவாகப் பயணம் மேற்கொண்டவர் கட்குள் உயர்ந்த பண்பாளர்கள், மற்றவர்களையெல்லாம் வண்டியில் ஏறச் செய்த பிறகே தாம் ஏறுவர்; அந்த வண்டியில் இடம் போதாதெனின், தாம் அடுத்த வண்டியில் ஏறி வருவர். இவ்வாறே, பண்பாளனாகிய பரதனும், எல்லாரையும் ஏற்றிக் கங்கையைக் கடக்கச் செய்த பின்னரே, தான் படகில் ஏறினான். தாங்கள் முதலில் உண்டுவிட்டுப் படுக்கையை விரித்துப் படுத்து விடுபவர்கள் போன்றவன் அல்லன் பரதன். அதனால் தான் அவன் 'மேல் ஏறினான்' எனப் பாராட்டப்படு கிறான்.

## திருவடி சூட்டு படலம்

### அவலத்தின் படிவம்

காட்டிலிருந்து தன்னை அயோத்திக்கு அழைத்துப் போக வந்த பரதனை இராமன் கூர்ந்து நோக்கினான். அப்போது பரதன் இருந்த தோற்றமாவது:—

கைகளைத் தலைமேல் உயர்த்திக் கும்பிட்டுத் தொழுது கொண்டிருந்தான்; உடம்பு துவண்டுபோயிருந்தது; கண்கள் அழுததால் நீரைச் சொரிந்தன; அவலம் (அழுகைத் துயர்) என்பது என்ன என்பதை அவனது உருவத்தைக் கொண்டு அறிந்து கொள்ளலாம். 'அதாவது, அவலம் என்பது என்ன என்பதை அறிவிக்கும் வகையில் எழுதப்பட்ட படிவம் போன்றிருந்தான்:

**தொழுதுயர் கையினன் துவண்ட மேனியன்**
**அழுதழி கண்ணினன் அவலம் ஈது என**

எழுதிய படிவம் ஒத்து எய்து வான்தனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான் (49)

என்பது பாடல். அவலம் (அழுகை) என்பது எட்டு மெய்ப் பாடுகளுள் ஒன்று— ஒன்பது சுவைகளுள் (நவரசங்களுள்) ஒன்று. எனவே, பரதன், அழுகை என்னும் மெய்ப் பாட்டின் மொத்த உருவமாகக் காணப்பட்டான்— அதாவது, துயரின் எல்லைக் கோட்டின் இறுதியில் இருந்தான் என்பது கருத்தாகும்.

தொல்காப்பியர் அவலத்தை 'அழுகை' என்றே மெய்ப்பாட்டியலில் கூறியுள்ளார்.

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப (3)

என்பது தொல்காப்பிய நூற்பா. தொல்காப்பிய உரை யாசிரியராகிய பேராசிரியர் 'அழுகை என்பது அவலம்' என உரை வரைந்துள்ளார். தண்டியலங்கார ஆசிரியர், தண்டியலங்காரம்— பொருளணியியலில், அழுகையை அவலம் என்று கூறியுள்ளார்.

வீரம் அச்சம் இழிப்பொடு வியப்பே
காமம் அவலம் உருத்திரம் நகையே (44)

என்பது நூற்பா. எனவே, அழுகை எனினும் அவலம் எனினும் ஒன்றே. தொல்காப்பியர், நான்கு காரணங் களால் அழுகை வரும் என்று கூறியுள்ளார் :

இளிவே இழவே அசைவே வறுமைஎன
விளிவில் கொள்கை அழுகை நான்கே (5)

என்பது நூற்பா. இந்த நான்கனுள் 'இழவு' என்பதற்கு, "இழவு என்பது, தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலிய வற்றையும் இழத்தல்" எனப் பேராசிரியர் விளக்கம் தந்துள்ளார்.

இங்கே பரதனுக்கு ஏற்பட்ட அழுகை (அவலம்) என்பது, தந்தையை உலகினின்றும் இழத்தல், கொடுமை செய்தவள் ஆகையால் தாயை உயிர் இருக்கும் போதே இழத்தல், தமையனாகிய இராமனைப் பிரிவினால் இழத்தல், உள்ளம் நன்றாயில்லையாதலால் எல்லா இன்ப நுகர்வுகளையும் இழத்தல் ஆகிய அவலமாகும். இதனால் தான், கம்பர், 'அவலம் ஈது என எழுதிய படிவம் ஒத்து எய்துவான்'' எனப் பரதனைக் குறிப்பிட்டுள்ளார்.

## திருவடி சூட்டு படலம்

### புகழினும் பெரியது

பாதுகையைப் பரதனுக்குத் தரவும் பதினான்கு ஆண்டு முடிந்ததும் மீண்டு வரவும் ஒத்துக் கொண்ட இராமன், மிகவும் உயர்ந்த பண்பாளன் அல்லவா? இதைக் கம்பர் குறிப்பிடுங்கால், ''தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையான்'' என்று கூறியுள்ளார். உலகில் புகழ் பெரியது. அதிலும் இராமன் புகழ் மிகப் பெரியது. அந்தத் தன் புகழைவிட இராமன் உயர்ந்தவனாம். ஒரு புதுமைக் கருத்தல்லவா இது!

இவ்வாறு முத்தான புதுமைகள் பல, பொலிவுற்றிருப் பதைக் கம்பன் பாடல்களில் கண்டு சுவைத்து மகிழலாம்.

# 5. கம்பனின் சொல் ஆட்சிக் கலை

தக்க இடத்தில் தக்க சொல்லைப் பெய்து பேசுவதும் எழுதுவதும் ஒருவிதக் கலையாகும். பேச்சினும், என்றும் நிலைத்திருக்கும் எழுத்து வடிவத்திற்கு இந்தக் கலை மிகவும் இன்றியமையாததாகும்.

பேச்சு நடையும் எழுத்து நடையும் காலப் போக்கில் மாறுவதுண்டு. மாறுதலுக்கு மிகுந்த இடம் தந்தால், முற்கால நடை ஒரு மொழி போலவும் பிற்கால நடை மற்றொரு மொழி போலவும் தோன்றக் கூடும். அதனால் மாறுதலிலும் ஓரளவு கட்டுப்பாடு வேண்டும்.

எழுத்தால் ஆனது சொல்— சொல்லால் ஆனது சொற்றொடர் (வாக்கியம்)—என்ற அடிப்படையில் ஆய்வது 'காரண காரிய முறை' (Logic Method) ஆகும். முதலில் சொற்றொடர்— பின் சொல்— பின் எழுத்து என்ற முறையில் ஆய்வது 'உளவியல் முறை' (Psychological Method) ஆகும்.

மனிதன் முதலில் சொற்றொடராகத்தான் பேசினான்— பின்பே சொற்றொடரிலிருந்து சொல் பிரிக்கப் பட்டது— அதற்குப்பின் சொல்லிலிருந்து எழுத்து பிரிக்கப் பட்டது. தனி எழுத்துக்கோ— தனிச் சொல்லுக்கோ— பொருள் இலை. ஓரெழுத்து ஒரு மொழியாயினும்— தனிச் சொல்லாயினும் ஒரு சொற்றொடரில் வைத்துப்

பயன்படுத்தும்போதே அவற்றிற்கு மதிப்பும் பொருளும் உண்டு. இதனால்தான், மொழியாசிரியர்கள், தனித்தனிச் சொற்களைத் தந்து சொந்த வாக்கியத்தில் வைத்துப் பயன்படுத்தக் கற்றுத் தருகிறார்கள். பொருள் தெளிவாக விளங்காத ஒரு சொல்லை ஒரு வாக்கியத்தில் வைத்துச் சொன்னால், அகராதியின்றியே பொருள் ஓரளவாயினும் புரியும். 'இத்தகைய வாக்கியத்திற்குத் தன் பொருளைத் தானே விளக்கும் வாக்கியம்' என்று பெயராம்.

இந்த அடிப்படையில், கம்பர் தக்க சொற்களைத் தக்க சொற்றொடர்களில் வைத்து ஆண்டிருக்கும் கலை யழகைச் சிறிது காண்போம்:

## மந்திரப் படலம்

### மந்திரக் கிழவர்

தயரதன் இராமனுக்கு முடிசூட்டுதல் தொடர்பாக சூழ்வு (ஆலோசனை) செய்வதற்காக மந்திரக் கிழவர் களை அவைக்கு அழைத்தானாம். மந்திரக் கிழவர் என்பவர் மந்திரிகள். இவர்கள் சூழ்வு (ஆலோசனை) சொல்வதற்கு உரியவர்கள். கிழமை என்பதன் பொருள்— உரிமை. தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் கிழவன், கிழவி என்னும் சொற்கள் உரிமை உடையவர் கள்— தலைவர்— தலைவியர்— என்னும் பொருளில் ஆளப்பட்டிருப்பதைக் காணலாம். முருகாற்றுப்படை யில், முருகன் 'மலை கிழவோன்' எனப்படுகிறான். புறப்பாட்டில் குமணன் 'முதிரத்துக் கிழவன்' எனப் பட்டுள்ளான். 'நின்னயந்து' என்று தொடங்கும் குமணனைப் பற்றிய அதே (163) புறப்பாட்டில், பெருஞ் சித்திரனார் தம் மனைவியை 'மனை கிழவோய்' என்று விளித்துள்ளார்.

ஒரு மனையின் உரிமையாளர்கள்— தலைவர்கள் கிழவன்— கிழவி எனக் குறிப்பிடப்பட்டனர். இவர்கள் அகவை (வயது) முதிர முதிர உடல் தளர்ந்தனர். அப்போதும் இவர்கள் கிழவன்— கிழவி எனப்பட்டனர். நாளடைவில் அகவை முதிர்ந்தவர்கள் எல்லாரும் கிழவன்— கிழவி எனப்பட்டனர். இந்தச் சொற் பொருள் மாற்றத்தால், கிழவன்— கிழவி என்னும் சொல்லாட்சி இந்தக் காலத்தில் அகவை முதிர்ந்தவர் களையே குறிக்கலாயிற்று. எனவே, 'மந்திரக் கிழவர்' என்பதற்கு, சூழ்வுரைக்கும் உரிமையுடைய தலைவர்கள் என்றே பொருள் கொள்ளவேண்டும். இவர்கள் அகவை முதிர்ந்தவர்களாயிருப்பினும் அப் பொருளில் இவர்கள் குறிப்பிடப்படவில்லை என்பது ஈண்டு கருதத் தக்கது.

**இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த தன்**
**மந்திரக் கிழவரை வருக என்று ஏவினான்** *(3)*

என்பது பாடல் பகுதி.

**பிறத்து**

உயர் பெருந் தேவர் மூவருள், நான்முகன் பிறக்க வைப்பவன் (படைப்பவன்); திருமாலுக்குக் காத்தல் தொழிலும் சிவனுக்குத் துடைக்கும் (அழிக்கும்) தொழிலும் உடையன. இங்கே, 'பிறக்க வைத்து' என்னும் பொருளில் 'பிறத்து' என்னும் சொல் ஆளப் பட்டிருப்பது ஒரு புதுமை. பாடல் பகுதி:—

**பிறத்து யாவையும் காத்து அவை பின்னுறத் துடைக்கும்**
**திறத்து மூவரும் திருந்திடத் திருத்தும் அத்திறலோன்** *(36)*

என்பது பாடல் பகுதி:

**வாள் உழவன்**

தயரதன் வாள் உழவன் எனக் குறிப்பிடப்பட் டுள்ளான். வாளாகிய கலப்பையால் மார்பாகிய— உடலாகிய வயலில் உழுபவன் என்பது இதன் விளக்கம்.

வில்லாகிய ஏர் கலப்பையால் பகைவரது உடலாகிய வயலில் உழுகின்ற போர் மறவரின் பகையைக் கொண்டாலும், சொல்லாகிய ஏரால் உழுகின்ற புலவர்களின் பகையைக் கொள்ளாதே என்னும் கருத்தில்,

வில்ஏர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்ஏர் உழவர் பகை (872)

என்னும் குறட்பாவைத் திருக்குறளில் காணலாம். திருவள்ளுவர் போர் மறவரை 'வில் ஏர் உழவர்' என்று குறிப்பிட்டிருப்பதுபோல், கம்பர், போர் மறவனாகிய தயரதனை 'வாள் உழவன்' என்று குறிப்பிட்டுள்ளார்.

**அலசினேன்**

தயரதன் இராமனை நோக்கி, உனக்கு முடிசூட்டக் கருதியுள்ளேன். சூழ்நிலை முழுவதையும் அலசிப் பார்த்தே இந்த முடிவுக்கு வந்தேன் என்று கூறினான். இங்கே 'அலசுதல்' என்னும் எளிய சொல்லாட்சி இடம் பெற்று ஒரு வகைச் சுவை பயக்கிறது. "ஐய சாலவும் அலசினென்" (61) என்பது பாடல் பகுதி.

**கணிதர்**

தயரதன் இராமனுக்கு முடிசூட்டுவதற்கு உரிய நல்ல நாளைக் கணிதரோடு சூழ்ந்து தேர்ந்தெடுத்தானாம். சோதிடர் என்னும் வட சொல்லுக்கு நேரானது 'கணிதர்' என்னும் சொல்.

உரைதெரி கணிதரை ஒருங்கு கொண்டு ஒரு
வரை பொரு மண்டபம் மருங்கு போயினான் (85)

என்பது பாடல் பகுதி.

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

**மாற்றவள்**

சக களத்தி என்னும் வட சொல்லுக்கு நேரானது 'மாற்றவள்' என்பது. கூனி கைகேயியை நோக்கி உன்

மாற்றாளின் பணிப் பெண்கட்கு நான் பணி செய்ய இயலாது என்று கூறினாள்.

மாதுயர் படுக; நான் நெடிது உன் மாற்றவள்
தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன என்றாள் *(62)*

என்பது பாடல் பகுதி. ஈண்டு, 'மாற்றாந்தாய்' என்னும் உலக வழக்குச் சொல்லாட்சி ஒப்பு நோக்கத் தக்கது.

## நகர் நீங்கு படலம்

### இன்றிய; ஓட்டந்து

இருகண்களும் இல்லாத தாய் தந்தை என்பதற்கு, ''இரு கண்களும் இன்றிய தாய் தந்தை (77) என்று கம்பர் எழுதியுள்ளார். 'இன்றிய' என்பதற்கு இல்லாத என்பது பொருள். ஓடி என்பதற்கு 'ஓட்டந்து' என்று கூறியுள்ளார்— யானை என்று கருதித் தான் கொன்று விட்ட இளைஞனின் உடலைச் சுமந்து கொண்டு அவனுடைய பொற்றோர்களிடம் தயரதன் ஓடினானாம். பாடல் பகுதி:—

வீட்டுண்டு அலறும் குரலால் வேழக் குரல் அன்றெனவே
ஓட்டந்து எதிரா, நீ யார் என, உற்ற எலாம் உரையா... *(81)*

### 'அ' உருபு

ஆறாம் வேற்றுமை உருபு 'அது' எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார்— வேற்றுமையியல்:

..................................ஆறாகுவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி *(18)*

என்பது நூற்பா. நன்னூலார் அது, ஆது, அ என்பன ஆறாம் வேற்றுமை உருபு என்று கூறி, உடைமைப் பொருள் ஒருமையாயிருந்தால் அது, ஆது உருபுகளும்,

உடைமைப் பொருள் பன்மையாயிருந்தால் 'அ' உருபும் இடவேண்டும் என்று கூறியுள்ளார்— பெயரியல்:

**ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்**
**பன்மைக்கு அ வ்வும் உருபாம்...** *(43)*

என்பது நூற்பா. இந்த உருபுகள், உடைமைப் பொருள் அஃறிணையாயிருந்தால்தான் பயன்படுத்தப்பட வேண்டும். உயர்திணைக்கு 'உடைய' என்னும் சொல் உருபைப் பயன்படுத்த வேண்டும் என உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். எடுத்துக்காட்டுகள்: எனது கை, எனாது கை, என கைகள், என்னுடைய மகன்.

ஆனால் கம்பர், உடைமைப் பொருள் உயர் திணையாயும் ஒருமையாயும் இருக்குமிடத்திலும் 'அ' உருபைப் பயன்படுத்தியுள்ளார்:

**தானும் தன தம்முனும் அல்லது ஞாலத்து**
**ஊனும் உயிரும் உடையார்கள் உளைந்து ஒதுங்க** *(116)*

என்னும் பாடலில் உள்ள 'தானும்' என்பதற்கு 'இலக்குமணனும்' எனப் பொருள் கொள்ளவேண்டும். 'தன தம்முனும்' என்பதற்குத் தன்னுடைய அண்ணனும் எனப் பொருள் கொள்ள வேண்டும். 'தம்முன்' என்றால் தனக்கு முன் பிறந்த தமையன் என்று பொருளாம். இங்கே 'தம்முன்' என்பது இராமனைக் குறிக்கிறது. 'தன' என்பது தன்னுடைய (இலக்குமணனுடைய) என்னும் பொருள் உடையது. உயர்திணை ஒருமையாகிய இராமனை 'தன தம்முன்' என 'அ' உருபு போட்டுக் குறிப்பிட்டுள்ளார் கம்பர். இது நன்னூல் கொள்கைக்கு மாறானது. நன்னூல் ஆசிரியராகிய பவணந்தி முனிவர் பதின்மூன்றாம் நூற்றாண்டினர். எனவே, பவணந்திக்கு முற்பட்ட காலத்தவராகிய கம்பரை நன்னூல் விதி கட்டுப் படுத்த முடியாது என்பதை எளிதில் உணரலாம்.

**காமரம்**

பெண்டிரின் மொழியைப் பற்றிக் கூறவந்த கம்பர்,

காமரம் கனிந்தெனக் கனிந்த மென் மொழி *(197)*

என்று குறிப்பிட்டுள்ளார். கா= சோலை. காமரம்= சோலையில் உள்ள மரங்கள். சோலை மரங்களின் கனிந்த பழம் போலும் இனிய மெல்லிய மொழி என்பது பொருள்.

இதற்கு மற்றும் ஒரு பொருள் கூறலாம். காமரம் என்பதற்கு ஆலமரம் என்னும் பொருளும் உண்டு. ''தனி (ஒரு) மரம் தோப்பாகாது'' என்பது பழமொழி. ஆனால் தனி மரம் தோப்பாவதும் உண்டு. அந்தத் தனிமரம் ஆலமரமே. நால்வகைப் படையுடன் மன்னர்க் கிருக்க நிழல் தரும் தனியொரு ஆலமரம் என்பதை வெற்றிவேற்கை என்னும் நூலில் அதிவீர ராமபாண்டியன் கூறியுள்ளார். பாடல்:

தெள்ளிய ஆலின் சிறுபழத்து ஒரு விதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும், அண்ணல் யானை
அணிதேர்ப் புரவி ஆள்பெரும் படையுடன்
மன்னர்க்கு இருக்க நிழலா கும்மே *(17—21)*

என்பது பாடல் பகுதி. ஒரு தோப்புபோல்— சோலை போல் உள்ள மரம் 'காமரம்' என்று பொருள் கொள்ளல் வேண்டும். அந்த அளவுக்குப் பரந்து விரிந்து அகன்று உயர்ந்தது ஆல மரம். இதற்குச் சான்றாக, சில ஆல மரங்களின் தோப்புத் தோற்றத்தின் விளக்கம் தமிழ்க் கலைக் களஞ்சியத்தில் உள்ளவாறு வருமாறு:—

''கல்கத்தா தாவரவியல் தோட்டத்திலுள்ள ஆலமரம், 1782— இல் ஓர் ஈச்சமரத்தின் முடியில் விழுந்த வித்திலிருந்து முளைத்தது. அதன் மிக நீண்ட விட்டம், கிழக்கு மேற்கில் 300 அடி, தெற்கு வடக்கில் 288 அடி, அடி மரத்தின் சுற்றளவு 57 அடி, முடியின் சுற்றளவு 938 அடி,

உயரம் 85 அடி. நிலத்தில் வேர் ஊன்றிய விழுதுகள் 464. அது நிற்கும் நிலப்பரப்பு $1\frac{1}{2}$ ஏக்கர். சத்தாரா (மகாராட்டிரம்) மாவட்டத்தில் வைசத்கர் கிராமத்தில் ஒரு மரம் கி—மே 442 அடி, தெ—வ 595 அடி, முடியின் சுற்றளவு 1587 அடி இருந்ததென்றும், ஏழாயிரம் மக்கள் தங்கக்கூடிய ஒரு மரம் நருமதையாற்றுத் திட்டு ஒன்றில் இருந்ததென்றும், இருபதினாயிரம் மக்களுக்கு நிழல் தரக் கூடிய மரம் ஆந்திரப் பள்ளத்தாக்கில் இருந்ததென்றும் அறியப்படுகின்றன.''

இது, 1954— இல் வெளியான தமிழ்க் கலைக் களஞ்சியம்— முதல் தொகுதியில் உள்ளது. கல்கத்தாவில் உள்ள ஆலமரம் இப்போது இன்னும் விரிவடைந்திருக்கலாம் அல்லவா? தமிழ் நாட்டில் சென்னை— அடையாறில் உள்ள ஆலமரமும் இங்கே குறிப்பிடத் தக்கது. ஓரளவு மிகவும் பெரியதாகிய இந்த ஆலமரம் பலரும் சென்று பார்க்கும் காட்சிப் பொருளாக உள்ளது. அண்மையில் இதில் சிதைவு ஏற்பட, பின்னர் ஓரளவு சரி செய்யப் பட்டுள்ளது.

## சுமந்திரன் மீட்சிப் படலம்

### முதலிய

தன்னை அழைத்துச் செல்ல வந்த சுமந்திரனிடம் இராமன் பின்வருமாறு ஆறுதல் மொழி கூறி அனுப்பு கிறான்:

> முந்தினை முனிவனைக் குறுகி முற்றும் என்
> வந்தனை முதலிய மாற்றம் கூறி... (32)

என்பது பாடல் பகுதி. இங்கே, பலரும் எளிமையாகப் பயன்படுத்துகிற 'முதலிய' என்னும் சொல்லாட்சியைக் காணலாம்.

**வணக்கம்**

ஒருவரை ஒருவர் காணும்போது, நமஸ்தே—நமஸ்காரம் எனச் சமசுகிருதத்திலும் Good Morning—Good Evening என ஆங்கிலத்திலும், Bon Jour—Bon Soir எனப் பிரெஞ்சிலும், 'அஸ்ஸலாமு அலைக்கும்' என அரபு மொழியிலும் கூறிக் கொள்வது நீண்ட காலமாகத் தமிழகத்தில் ஒரு மரபாக இருந்து வந்தது. இந்தக் காலத்தில் தமிழர்க்கு ஓரளவு மான உணர்வு ஏற்பட்டதன் விளைவாக 'வணக்கம்' என்று கூறும் மரபு பெரும்பான்மையாக உள்ளது. இந்தச் சொல்லைக் கம்பர் பயன்படுத்தியுள்ளார். சுமந்திரனிடம் சீதை சொல்வதாக உள்ளது இது. அரசர்க்கும் (தயரதனுக்கும்) அத்தைமார்க்கும் தனது வணக்கத்தைத் தெரிவிக்கும்படி சீதை கூறினாள்:

> அன்னவள் கூறுவாள் அரசர்க்கு அத்தையர்க்கு
> என்னுடை 'வணக்கம்' முன் இயம்பி... (39)

என்பது பாடல் பகுதி.

## குகப் படலம்

**நாள் முதல்**

ஒரு நாளின் தொடக்கப் பகுதியாகிய— முதல் பகுதியாகிய காலை நேரத்தை 'நாள் முதல்' என்னும் தொடரால் கம்பர் குறிப்பிட்டுள்ளார். நாள் முதலில் இராமன் (காலைக்) கடனை முடித்தானாம்:

> நாள் முதற்கு அமைந்த யாவும் நயந்தனன் இயற்றி நாமத்
> தோள் முதற்கு அமைந்த வில்லான் மறையவர் தொடரப் போனான் (26)

என்பது பாடல் பகுதி.

## வனம் புகு படலம்

**வருவான்**

*பவணந்தி தமது நன்னூல்— வினையியலில் வினையெச்சங்கள் பற்றி,*

**செய்து செய்பு செய்யாச் செய்யூச்**
**செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்**
**வான் பான் பாக்கு இன வினையெச்சம் பிற**
**ஐந்தொன் நூறுமுக் காலமும் முறைதரும்** (24)

*என்று கூறியுள்ளார். வான், பான் என்பன வினையெச்ச விகுதிகளாம். வருவதற்காக என்னும் பொருளில் உள்ள 'வருவான்' என்பது 'வான்' விகுதிபெற்ற வினையெச்சம், உண்பதற்காக என்னும் பொருளில் உள்ள 'உண்பான்' என்பது 'பான்' விகுதி பெற்ற வினையெச்சம்.*

*ஆனால், கம்பர், 'வருதல்' என்னும் 'தல்' விகுதி ஏற்ற தொழிற்பெயர் போல 'வருவான்' என்பதைக் குறிப்பிட்டுள்ளார். காட்டில் பாரத்துவாச முனிவர் இராமனை நோக்கி, நீ தவக்கோலம் பூண்டு வந்தது— வருதல் ஏன்? என்று வினவுகிறார்:*

**தகவில் தவவேடம் தழுவினை வருவான் ஏன்**
**இகல் அடு சிலை வீர இளையவனொடும் என்றான்** (24)

*என்பது பாடல் பகுதி. இங்கே 'வருவான்' என்பதில் உள்ள வான் என்பது, வினையெச்ச விகுதியாயில்லாமல், தொழிற்பெயர் விகுதியாயுள்ளது. பேச்சு வழக்கிலும், வருவானேன்— கொடுப்பானேன்— என்ற வழக்காறு உண்டு.*

## சித்திர கூடப் படலம்

**கட்டளை**

*பெண்கள் இப்படித்தான் இருக்கவேண்டும் என அறிவுறுத்துவதுபோல், பெண்கட்கெல்லாம் ஒரு மாதிரிப்*

பெண்ணாக— ஓர் எடுத்துக்காட்டுப் பெண்ணாகச் சீதை விளங்குகிறாள் என்னும் பொருளில் 'கட்டளை' என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தெரிவைமார்க்கு ஒரு கட்டளை எனச் செய்த திருவே** (33)

என்று இராமன் சீதையை விளிக்கிறான்.

**மிதிலை நாடியர்**

நாடன் என்னும் ஆண்பால் பெயருக்கு நேரான பெண்பாலாக 'நாடி' என்னும் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. சீதை 'மிதிலை நாட்டாள்' என்னும் பொருளில் 'மிதிலை நாடி' என்று குறிப்பிடப் பட்டுள்ளாள்:

**வேறிடம் வீரற்கும் மிதிலை நாடிக்கும்**
**கூறின நெறிமுறை குயிற்றி** (46)

என்பது பாடல் பகுதி. இலக்குவன் இராமனுக்கும், சீதைக்கும் தனியிடம் அமைத்துக் குடில் காட்டினானாம்.

## பள்ளி படைப் படலம்

**திருமுகம்**

கடிதம் 'திருமுகம்' என்னும் அழகிய— மங்கலமான பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது. தயரதனது மடலைத் தூதர்கள் பரதனிடம் தந்தார்களாம்.

**கொற்றவன் திருமுகம் கொள்க என்றார்** (4)

என்பது பாடல் பகுதி.

**வில்லின் வேதியர்**

பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்குப் புறப் பட்டபோது, வில்லின் வேதியர் முதலான படைஞர்களும்

உடன் வந்தனராம். வேதியர் என்றால் வேதம் கற்றவர் என்று பொருளாம். வில்லின் வேதியர் என்றால், வில்வேதம் அதாவது வில்கலை பற்றிய நூல் கற்றவர் என்று பொருளாகும். இந்தப் பெயர் சுவையாயுள்ளது.

வில்லின் வேதியர் வாள்செறி வித்தகர்...
தொல்லை வாரணப் பாகரும் சுற்றினார் (13)

**பகல் நீந்தி**

பரதன் கேகய நாட்டிலிருந்து ஏழு பகல் நீந்தி அயோத்தியை அடைந்தானாம். கடந்து என்பதற்கு நீந்தி என்று கம்பர் கூறியுள்ளார். அந்தக் காலத்துப் பயணங்கள் நீரில் நீந்துவதுபோல் பாடுபட்டுச் செய்ய வேண்டிய ஒன்றாகும் என்பது இதனால் புலனாகிறது.

ஆறும் கானும் அகல் மலையும் கடந்து
ஏறி ஏழ் பகல் நீந்தி (18)

என்பது பாடல் பகுதி. இங்கே, 'ஆறும் கானும் அகல் மலையும் கடந்து' என்பது குறிப்பிடத் தக்கது.

## ஆறு செல் படலம்

**உடுபதி**

பரதன் இராமனை அழைத்துவரப் போகிறான்; எல்லாரும் புறப்படுங்கள் என்ற செய்தியைக் கேட்டதும், திங்கள் (சந்திரன்) தோன்றின் கடல் பொங்குதல் போல, நகர மக்கள் மகிழ்ச்சி எய்தினராம்:

முடுகுக என்ற சொல் முரி மாநகர்
உடுபதி வேலையின் உதயம் போன்றதே (24)

என்பது பாடல் பகுதி. இங்கே திங்கள் 'உடுபதி' எனக் குறிப்பிடப்பட்டுள்ளான். உடு = விண்மீன்; பதி = கணவன்;

உடுபதி = அசுவனி, பரணி முதல் இரேவதி முடிய உள்ள இருபத்தேழு விண்மீன்களும் பெண்களாம்; இவை இருபத்தேழும் சோமனின் (திங்களின்) மனைவிமார்களாம்.

ஏழைப் புலவர் ஒருவர் கூறியுள்ளார்: வானில் உலவும் சோமனுக்குத் (திங்களுக்குத்) தையல் (மனைவியர்) இருபத்தெழுவர் (27 பேர்); ஆனால் என் இடையில் (இடுப்பில்) உலாவும் சோமனுக்கோ (உடைக்கோ) தையல் (கிழிசல்களை மூட்டித் தைத்த தையல்) எண்ணித் தொலைக்க முடியாது— என்னும் பொருளில் ஒரு வேடிக்கைத் தனிப் பாடல் கூறியுள்ளார்.

**வான் உலாவும் சோமனுக்கோ தையல் இருபத்தேழு—**
**என் இடை உலாவும் சோமனுக்கோ தையல் எண்ணித் தொலையாது**

என்பது பாடல் பகுதி. சில விண்மீன்களின் கணவன் திங்கள் என்னும் பொருளில் திங்களை 'உடுபதி' எனக் கம்பர் குறிப்பிட்டுள்ளார் என்பது இதனாலும் புலனாகும்.

**கடல்கள்**

சமுத்திரத்தைக் குறிக்கப் பரவை, உவரி, கடல், பௌவம் என்னும் சொற்கள் உள்ளன. பரதனுடன் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாள் படை என்னும் கடல் போன்ற நான்கு பெரும் படைகளும் சென்றனவாம். ஒவ்வொரு படையையும் முறையே பரவை, உவரி, கடல், பௌவம் என்னும் சொற்களால் கம்பர் குறிப்பிட்டிருப்பது சுவையாயுள்ளது. பாடல்:

**தேர்மிசைச் சென்றது ஓர் பரவை; செம்முகக்**
**கார்மிசைச் சென்றது ஓர் உவரி; கார்க் கடல்**
**ஏர்முகப் பரிமிசை ஏகிற்று; எங்கணும்**
**பார்மிசைப் படர்ந்தது பதாதிப் பௌவமே** (32)

## கங்கை காண் படலம்

### வில்லின் கல்வியான்

குகன் வில் பயிற்சிக் கல்வியில் வல்லவனாம். வில் பயிற்சியாகிய படைப் பயிற்சியும் ஒருவகைக் கல்வியாகும். படைப் பயிற்சிக் கல்லூரி இப்போது இராணுவக் கல்லூரி எனப்படுகிறது. எனவேதான்,

மெய்உறு தானையான் வில்லின் கல்வியான் *(8)*

என்று குகனைக் கம்பர் குறிப்பிட்டுள்ளார். இந்தக் கங்கை வேடனாகிய குகனைப் போலவே, காளத்தி வேடனாகிய கண்ணப்பனும் படைப் பயிற்சிக் கலை முதலியவற்றில் இளம் பருவத்திலேயே வல்லவனாயிருந்தான். இதனால், சுந்தரர் தமது தேவாரம்— திருத்தொண்டத் தொகை— என்னும் பகுதியில்,

கலை மலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கு அடியேன்

என்று கண்ணப்பனைக் குறிப்பிட்டுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

### குறி

சுமந்திரன் பரதனுக்குக் குகனைப் பற்றி அறிமுகம் செய்கையில், அவன் குகன் என்னும் 'குறி' உடையான் எனக் கூறினான். 'குறி' என்பது, ஈண்டு ஒருவகை அடையாளமாகிய பெயரைக் குறிக்கிறது.

கொங்கலரும் நறுந்தண் தார்க்கு
குகன் என்னும் குறி உடையான் *(25)*

என்பது பாடல் பகுதி. குறி என்னும் சொல்லாட்சி சுவை பயக்கிறது

### பூவில் பூட்டிய கையன்

குகன் பரதனின் காலில் விழுந்து கையால் காலைக் கட்டிக்கொண்டு வணக்கம் செய்தானாம். பரதனின்

காலாகிய தாமரைப் பூவில் கையைப் இறுகப் பூட்டிக் கொண்டானாம்.

தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன் பொய்யில் உள்ளத்தன் புகல லுற்றான் *(34)*

என்பது பாடல் பகுதி. 'பூட்டிய' என்பது, இறுகப் பிடித்துக் கொண்டதான பொருளைத் தந்து சுவையூட்டு கிறது.

**மண்ணு நீர் ஆட்டல்**

காட்டில் இராமன் படுத்திருந்த மண் பகுதியை அறிந்து நோக்கிப் பரதன் அழுதானாம். அதாவது, அவன் கண்களிலிருந்து நீர் அந்த மண் பகுதியின் மேல் கொட்டிற்றாம். கடவுள் வழிபாட்டில் நீராட்டுதல் (அபிஷேகம் செய்தல்) என்பது ஒரு பகுதி. இங்கே, இராமன் படுத்திருந்த மண் பகுதியை, பூசனை செய்வது போல் கண்ணீரால் நீராட்டினானாம்.

வார்மணிப் புனலால் மண்ணை
மண்ணுநீர் ஆட்டும் கண்ணான் *(39)*

என்பது பாடல் பகுதி. மண்ணு நீர் என்பது நீராட்டும் (அபிஷேக) நீர் எனப் பொருள்படும். மண்ணுதல் என்பதற்குக் குளித்தல்— தூய்மை செய்தல் என்னும் பொருள் உண்டு.

மடல் பெரிது தாழை மகிழ்இனிது கந்தம்
உடல் சிறியர் என்றிருக்கவேண்டா— கடல்பெரிது
மண்ணீரும் ஆகாது அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகிவிடும் *(12)*

என்னும் ஔவையின் மூதுரை நூல் பாடலிலே உள்ள 'மண்ணீர்' என்பது, தூய்மை செய்யக் குளிக்கும் நீர் என்னும் பொருள் தருவது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. 'மண்ணை மண்ணு நீர் ஆட்டும்' என்னும் கம்பரின் சொற்றொடர் ஆட்சி சுவையானது.

# திருவடி சூட்டு படலம்

## சிறுமை செய்தல்

கடலினும் பெரிய வில்படையுடன் வரும் பரதனை இலக்குமணன் நோக்கினான். பரதனது பெரும்படை, கடலைச் சிறுமை செய்து விட்டதாம். அதாவது, அந்தப் படையை நோக்கக் கடல் சிறியதாகத் தோன்றுகிறதாம்:

**செழுந்திரைப் பரவையைச் சிறுமை செய்த அக்**
**கழுந்துடை வரி சிலைக் கடலை நோக்கினான்** *(26)*

என்பது பாடல் பகுதி. கடலினும் பெரிய படை என்று கூறுவதற்குப் பதிலாகக் கடலைச் சிறுமை செய்த படை என்னும் சொற்றொடர் ஆட்சி இன்பூட்டுகிறது.

## ஒருமை

பரதன்மேல் சினம் கொண்ட இலக்குமணன் இராமனிடம் கூறுகிறான்:— பரதனது தோளின் பருமையையும் அவன் சேனையின் பெருமையையும் எனது ஒருமையையும் காண்— என்கிறான். அதாவது, பருத்த தோள் வலிமை உடைய பரதனையும் அவனுடைய பெரிய சேனையையும் யான் ஒருவனே வெல்வேன் என்னும் பொருளில் இலக்குமணன் முழங்குகின்றான்.

**இருமையும் இகழ்ந்தஅப் பரதன் ஏந்துதோள்**
**பருமையும் அன்னவன் படைத்த சேனையின்**
**பெருமையும் நின்ஒரு பின்பு வந்த என்**
**ஒருமையும் கண்டு இனி உவத்தி உள்ளம்நீ** *(30)*

என்பது பாடல். ஈண்டு 'ஒருமை' என்பது, தான் ஒருவனே வெல்ல முடியும்— என்னும் பொருளில் உவகை ஊட்டுகிறது.

**வலியனோ?**

தன்னை வணங்கிய பரதனை நோக்கி, நம் தந்தை வலிமையுடன்— நலமுடன் உள்ளாரா என இராமன் வினவினான்:

**மல்உயர் தோளினான் வலியனோ என்றான்** (56)

என்பது பாடல் பகுதி. நலமோ என்னும் பொருளில் உள்ள 'வலியனோ' என்னும் சொல்லாட்சியில் புதுமை பூத்துள்ளது.

இவ்வாறு இன்னும் பல முத்தான சொல்லாட்சி களையும் சொற்றொடர் ஆட்சி முத்துகளையும் கம்பர் தம் நூலில் பெய்து, கற்போரின் உள்ளங் கவர்ந்துள்ளார்.

# 6. உரையாடல் திறன்

திருவள்ளுவர் திருக்குறளில் சொல் வன்மை என்னும் தலைப்பில், கேட்டார்ப் பிணிக்கும்படிப் பேசல் வேண்டும்; திறனான சொற்களைச் சொல்ல வேண்டும்; தம் சொல்லைப் பிறிதொரு சொல் வெல்லாதபடிப் பேசல் வேண்டும்; சோர்வு இன்றி அஞ்சாமல் உரையாடல் வேண்டும்; பிறர் கேட்டு விரைந்து ஒழுகும்படி நிரந்து இனிது பேசல் வேண்டும்— என்றெல்லாம் சொல் வன்மையுடன் உரையாடும் திறன் பற்றிக் கூறியுள்ளார். இத்தகைய திறமையான உரையாடல்கள் சிலவற்றைக் கம்பராமாயணம்— அயோத்தியா காண்டத்தில் காண்போம்:—

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### கூனியின் உரைத் திறன்

தனது உரைவன்மையால் எண்ணியது முடித்ததில் முதல் பரிசுக்கு உரியவள் மந்தரை என்னும் கூனியே யாவாள். தன் மகன் பரதனினும் இராமனையே மிகவும் பேணி வந்த கைகேயியின் மாற்ற முடியா மனத்தையும் கூனி மாற்றிவிட்டாள் அல்லவா?

*உறங்கிய கைகேயியைக் கூனி எழுப்பிக் கூறுகிறாள். திங்களைப் (கிரகண காலத்தில்) பாம்பு பிடிப்பதற்குச் சிறிது முன்புகூடத் திங்கள் ஒளி வீசிக் கொண்டிருப்பது போன்று, உனக்குப் பெரிய துன்பம் நெருங்கியுள்ள இப்போதும் வருந்தாது உறங்கிக் கொண்டிருக்கிறாயே என்றாள்:*

**அணங்கு வாள்விட அரா அணுகும் எல்லையும்**
**குணங் கெடாது ஒளிவிரி குளிர்வெண் திங்கள்போல்**
**பிணங்கு வான் பேரிடர் பிணிக்க நண்ணவும்**
**உணங்குவாய் அல்லை நீ உறங்குவாய் என்றாள்** *(53)*

*ஒரு கதை நினைவுக்கு வருகிறது. பெரிய சோம்பேறி ஒருவன் வீட்டின் முன் கட்டில் தூங்கிக் கொண்டிருந்த போது பின் கட்டில் தீ பற்றிக் கொண்டதாம். சிலர் வந்து— பின் கட்டில் தீ பற்றிக் கொண்டது— விரைவில் எழுக என எழுப்பினராம். அதற்கு அவன், பின் கட்டு தானே எரிகிறது? முன் கட்டிற்குத் தீ பரவியதும் எழுப்புங்கள் என்று கூறித் தூங்கினானாம். கைகேயியும் துன்பம் வந்த போதும் தூங்கினாளாம்.*

## கோசலை மைந்தன் பரதன்

*கோசலை பெரு வாழ்வு வாழப் போகிறாள்— அதை அறியாது கிடக்கிறாய் நீ— என்று கூனி கைகேயியிடம் கூறியபோது, கைகேயி பதில் உரைக்கிறாள். நீ என்னவோ, கோசலை வாழ்ந்து விடப் போகிறாள் என்கிறாயே— கோசலை வாழ்வுக்கு இப்போது மட்டும் யாது குறைவு? கோசலையின் கணவனோ, மன்னர்கட் கெல்லாம் மன்னன்— கோசலையின் மைந்தனோ, சொல்ல முடியாத அளவுக்குப் பெரும் புகழ் படைத்துள்ள பரதன்— எனவே, இந்த வாழ்வினும் கோசலைக்கு இன்னும் வேறு என்ன பெரிய வாழ்வு வேண்டியிருக்கிறது?— என்றாள் கைகேயி.*

அன்ன சொல் அனையவள் உரைப்ப ஆயிலை
மன்னவர் மன்னனேல் கணவன்; மைந்தனேல்
பன்னரும் பெரும்புகழ்ப் பரதன்; பார்தனில்
என்னிதன்மேல் அவட்கு எய்தும் வாழ்வு என்றாள் (57)

*கைகேயி தன் மகனைக் கோசலையின் மகனாகக் கூறிக் கூனியின் முரண்பட்ட உணர்வை மாற்ற முயன்றுளாள்.*

*தொடர்ந்து கூனி பேசுகிறாள்: ஆடவர்கள் எள்ளி நகையாடவும் ஆண்மைக்கே மாசு உண்டாகவும் தாடகை என்னும் ஒரு பெண்ணைக் கொன்ற— முறை தவறிய (அந்தப் பையன்) இராமனுக்கு நாளை முடி சூட்டப் போகிறார்களாம்.*

ஆடவர் நகையுற ஆண்மை மாசு உற
தாடகை எனும்பெயர்த் தையலாள் படக்
கோடிய வரிசிலை இராமன் கோமுடி
சூடுவன் நாளை வாழ்வு இது எனச் சொல்லினாள் (58)

*கைகேயி மனம் மாறாததைக் கண்டு மேலும் கூனி கூறுகிறாள்: பைத்தியமே! நீயும் உன் மகனும் எப்படியாவது துன்புற்றுக் கொண்டு இருங்கள். ஆனால், உன் மாற்றாளாகிய கோசலையின் பணிப் பெண்கட்குப் பணிப் பெண்ணாய் நான் பணி செய்ய முடியாது. சீதையும் இராமனும் அரியணையில் அமர்ந்திருக்க, பரதன் கீழே கிடக்க வேண்டுமா?— என்றாள்.*

வேதனைக் கூனி பின் வெகுண்டு நோக்கியே,
பேதை நீ பித்தி நிற் பிறந்த சேயொடும்
மாதுயர் படுக; நான் நெடிது உன் மாற்றவள்
தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன் என்றாள் (62)

சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்
நிவந்த ஆசனத்து இனிது இருப்ப நின்மகன்
அவந்தனாய் வெறு நிலத்து இருக்க லானபோது
உவந்தவாறு என் இதற்கு உறுதியாது என்றாள் (63)

மேலும் கூனி :— பரதன் ஏழுநாள் பயணம் செய்து அடையக் கூடிய நெடுந்தொலைவில் உள்ள கேகய நாடு சென்றுள்ளான். இங்கே இராமனுக்கு நாளைக்கு முடிசூட்டு என்கின்றனர். இதைப் பரதனுக்கும் அறிவிக்க வேண்டுமல்லவா? அவனும் விழாவில் கலந்து கொள்ள வேண்டுமல்லவா? அவனுக்கு ஆள் அனுப்பினால், ஆள் போக ஏழு நாளாகும்; உடனே பரதன் புறப்படினும் அவன் வந்து சேர ஏழு நாள் ஆகும். பதினான்கு நாள்கள் கடந்த பின்னரே பரதனைக் காண முடியும். நிலைமை இவ்வாறிருக்க, இராமனுக்கு விரைந்து விரைந்து நாளைக்கு முடிசூட்டப் போகின்றார்களாம்— என்பதை உள்ளத்தில் கொண்டு கூனி கூறுகிறாள்: நற்பேறு இல்லாத பரதனை, நெடுந்தொலைவில் உள்ள கேகய நாட்டிற்கு அரசன் ஆணையால் அனுப்பியதில் உள்ள சூழ்ச்சி இப்போதுதான் புரிகிறது— என்கிறாள்.

பாக்கியம் புரிந்திலாப் பரதன்தன்னைப் பண்டு
ஆக்கிய பொலங் கழல் அரசன் ஆணையால்
தேக்குயர் கல்லதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருள் எனக்கு இன்று போந்ததால் (67)

என் மகள் கைகேயி வயிற்றில் பிறக்கும் பிள்ளைக்குப் பட்டம் சூட்டுவதென்றால், கைகேயியை உனக்கு மணம் முடித்துத் தருவேன் எனக் கேகயன் கேட்டபோது, அவ்வாறே செய்வதாகத் தயரதன் கூறியதாக ஒரு செய்தி உள்ளதால், பரதன் இங்கே இருப்பின் அவனுக்கு முடிசூட்ட வேண்டும் என வற்புறுத்தப் பட்டாலும் படலாம் என எண்ணிப் பரதனை நெடுந்தொலைவு அனுப்பிவிட்டதாகக் கூனி எண்ணிக் கூறியிருக்கிறாள்.

**தயரதன் சூழ்ச்சியா?**

பதினான்கு நாள் சென்றால்தான் பரதனைக் காண முடியும் என்ற நிலைமை இருக்க, இராமனுக்கே நாளைக்கே பட்டம் சூட்டுவதாகத் தயரதன் தெரிவித்து

தற்கு உரிய காரணம் வான்மீகியால் அவரது இராமாயண நூலில் கூறப்பட்டுள்ளது. அதாவது:— எனக்கு அகவை முதிர்ந்து விட்டது— உடல் தளர்ந்து விட்டது— இறுதி நேரும்போல் தெரிகிறது. கணியரும் (சோதிடரும்) உங்கட்கு நாள் முடியும் காலம் வந்து விட்டது என்று கூறுகின்றனர்— அதனால் நாளைக்கே இராமனுக்குப் பட்டம் கட்டிவிட வேண்டும் என்று தயரதன் அவையோரிடம் கூறினானாம். இந்தக் கருத்தமையக் கூறி வான்மீகி தயரதனை ஓரளவு பழியினின்றும் காக்க முற்பட்டிருக்கிறார். கம்பரோ, இத்தகைய (சாக்குப் போக்கு) சூழ்ச்சியான உரையைச் சொன்னதாகக் கூறாமல், உண்மை எது என்பதை நூலைப் படிப்பவர்களே தீர்மானித்துக் கொள்ளட்டும் என, எந்தக் காரணமும் கூறாமல் விட்டுவிட்டார்.

## மன்னனின் இளையன்

கூனி என்ன சொல்லியும் கைகேயி ஏற்கவில்லை. அகவையில் (வயதில்) மூத்தவன் இருக்க, அகவையில் இளையவன் ஆட்சி புரிதல் பொருந்தாது என்ற கைகேயிக் குக் கூனி சரியான பதிலடி (சொல்லடி) கொடுக்கிறாள்! அகவையில் மூத்தவன் இருக்கும்போது சிறியவன் நாடாளலாகாது எனில், அகவையில் மிகவும் பெரியவ னான தயரதன் சாகாமல் உயிருடன் இருக்கும்போதே, அகவையில் சிறியவனான இராமன் நாடாள்வது பொருத்தமா? அங்ஙனமெனில், மூத்தவனான இராமனை விலக்கி, இளையவனான பரதன் அரசாள்வதில் தவறு என்ன! என்று 'கார சாரமாக' விடுத்தாள் பதில்:

> முத்தவற்கு உரித்து அரசெனின் முறைமையின் உலகம்
> காத்த மன்னனின் இளைய னன்றோ கடல் வண்ணன்?
> ஏத்து நீள்முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால்
> மீத்தரும் செல்வம் பரதனை விலக்குமாறு எவனோ? (77)

## பழிபடப் பிறந்தாய்

மேலும் கூனி கூறுகிறாள்: பேதையே! சீதையின் தந்தையாகிய சனக மன்னன், உன் தந்தை நாட்டின் மேல் படையெடுத்து அழிக்காதிருப்பதற்குக் காரணம், உன் கணவனாகிய தயரதன் தடுப்பான் என்ற அச்சமே. இந்த நிலையில், தயரதன் இறந்தபின் பட்டத்தில் இருக்கப் போகிறவன் இராமன்; அந்த இராமனுடைய மாமனார் சனகன். பிற்காலத்தில் சனகன் உன் தந்தையின் கேகய நாட்டின் மேல் படை எடுத்தால், இராமன் தன் மாமனாகிய சனகனுக்குத் தானே துணை செய்வான்? அப்போது உன் தந்தையின் நிலை (கதி) என்ன? தன் குலம் அழியப் பழிபடப் பிறந்தவர்கள் உனக்குத் துணையாக— இணையாக யாரும் இருக்க முடியாது. எனவே, பரதனுக்குப் பட்டம் கிடைக்க ஆவன செய்க— என்று தூண்டினாள்:

> காதல் உன் பெருங் கணவனை அஞ்சி அக் கனிவாய்ச்
> சீதை தந்தை உன் தாதையைத் தெறுகிலன்; இராமன்
> மாதுலன் அவன்; நுந்தை வாழ்வு இனி உண்டோ?
> பேதை உன் துணை யார் உளர் பழிபடப் பிறந்தார்? (82)

இவ்வாறு தன் சொல் திறமையால் கூனி கைகேயியின் நல்ல உள்ளத்தை நஞ்சாக்கி விட்டாள்.

# கைகேயி சூழ்வினைப் படலம்

## இயம்பினன் அரசன்

தயரதன் சொன்னதாக இராமனிடம் கைகேயி கூறுகிறாள்: உலகத்தைப் பரதன் ஆள வேண்டும் எனவும், நீ காடு சென்று தவம் புரிந்தும் நற்பயன் நல்கும் புனல்கள் ஆடியும் பதினான்கு ஆண்டு கழிந்தபின் வரவேண்டும் எனவும் அரசன் கூறினான்— என்று அரசன் ஆணையிட்டது போல் கூறினாள்:

ஆழி சூழ் உலக மெல்லாம் பரதனே ஆள, நீ போய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவம் மேற் கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியப் புனல்கள் ஆடி
ஏழிரண் டாண்டின்வா என்று இயம்பினன் அரசன் என்றாள் *(111)*

மன்னன் இராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டா என்று எவ்வளவு மன்றாடியும் கேளாமல் அவனை வலிய ஒத்துக் கொள்ளச் செய்த கைகேயி அரசன் ஆணை யிட்டது போலவும், தன் மேல் பழி இல்லாதது போலவும் (குடும்பங்களில் பெண்கள் சிலர் கூறுவது போல்) கூறினாள். இப்பாடலில் 'நீ போய்... வா' என்ற சொல் அமைப்பு இருப்பது சுவையாயிருக்கிறது. (சுவை இராம னுக்கு அன்று; பாடலைப் படிப்பவர்க்கு)

## இன்றே போகின்றேன்

காட்டுக்குத் துரத்துகின்ற கைகேயியிடம் இராமன் கூறுகிறான்: அன்னையே! மன்னவன் கட்டளையிடா விடினும் காட்டிற்கு ஏகுமாறு நீங்கள் பணித்தால் தான் மறுப்பேனோ? மறுக்க மாட்டேனே. என் பின்னவனாகிய (தம்பியாகிய) பரதன் அரசச் செல்வம் பெற்றதை யான் பெற்றதாகவே கருதி மகிழ்கிறேன். தம்பிக்கு நாடு தந்து யான் காடு சென்று தவம் புரியும் இந்த வாய்ப்பினும்வேறு நல்ல வாய்ப்பு இருக்க முடியுமா? இந்த நல்ல பணியைத் தலைமேல் கொள்கின்றேன். காட்டிற்கு இன்றே இப்பொழுதே போகிறேன்; விடையும் பெற்றுக் கொண்டேன்— என்று கூறுகிறான்.

மன்னவன் பணியன்றாகின் நும்பணி மறுப்பனோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ
என்இனி உறுதி அப்பால் இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்ஒளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்
*(114)*

இராமனது உயரிய பண்பாட்டின் எவரெஸ்ட் கொடுமுடியை அறிவிக்கும் பாடலாகும் இது. இப்படியும்

ஒரு பிள்ளை உலகில் இருக்க முடியுமா? அரசன் ஆணையிட வேண்டும் என்பதில்லையாம்— சிற்றன்னை ஆணையிட்டாலே போதுமாம். தம்பியின் நன்மை தனது நன்மையாம். இது பெரிய நன்மையாம். ஆணையைத் தலைமேல் ஏந்துகிறானாம். உடனேயே புறப்படுகின்றானாம். கைகேயி விடை கொடுக்கும் முன்பே— தானாகவே விடைபெற்றுக் கொண்டானாம். எத்தனை முறை திரும்பத் திரும்பப் படித்தாலும் தெவிட்டாதது இப்பாடல்.

இந்தப் பாடலுக்கு உள்ளுறைப் பொருள் ஒன்று கூறுவதும் உண்டு: 'மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ' என்பதற்கு, இது மன்னவன் பணி (அன்று) அல்ல; ஆனால் உன் பணிதான்— நான் மறுக்க மாட்டேன்— என்று பொருள் கூறுவதுண்டு. மேலும், 'என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ' என்பதற்கு, என் பின்னவன் பெற்ற செல்வம் என்பதும், நான் இப்போது பெற்றுள்ள மரவுரியணிந்த வாழ்க்கைதான்— என்றும் பொருள் கூறுவதுண்டு. பின்னால், பரதனும் பதினான்காண்டு காலம் மரவுரி பூண்டு நகருக்கு வெளியே நந்தியம் பதியில் தவக் கோலத்துடன், இராமனது பாதுகையை வைத்துக் கொண்டு வழிபடப் போகின்றவனே. இந்த உள்ளுறைப் பொருள் குறிப்பாய் இந்தப் பாடலுக்குள் அமைந்துள்ளது.

## நகர் நீங்கு படலம்

### காதல் திருமகன்

இராமனது எளிய தோற்றத்தைக் கண்ட கோசலை, முடிசூட்டற்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டதா என்று கேட்க, இராமன் கை குவித்து வணங்கிக் கூறுகிறான்: உன் அன்பிற்கு உரிய திருமகனும் குறைவில்லாத உயர்

*பண்பாளனும் என் தம்பியும் ஆகிய பரதனே முடிசூடிக் கொள்ளப் போகிறான்— என்று கூறிக் கோசலையை ஒத்துக் கொள்ளச் செய்கிறான்:*

**மங்கை அம்மொழி கூறலும் மானவன்**
**செங்கை கூப்பி நின்காதல் திருமகன்**
**பங்கமில் குணத்து எம்பி பரதனே**
**துங்க மாமுடி சூடுகின்றான் என்றான்** *(3)*

*இப்பாடலில் உள்ள காதல், திருமகன், பங்கம்இல் குணத்து எம்பி என்னும் சொற்கள் எண்ணத் தக்கன.*

## நின்னினும் நல்லன்

*இராமன் இவ்வாறு நயமாக அறிவித்ததும், கோசலை இராமனுக்கு ஆறுதல் உண்டாக்கும் முறையில் நயமாக மொழிகிறாள்: மூத்தவன் இருக்க இளையவனுக்கு முடி சூட்டுதல் முறை இல்லை என்ற ஒன்றைத் தவிர, மற்றபடி, பரதன் உன்னிலும் மூன்று மடங்கு உயரிய நல்ல பண்பாளன்— முடிசூடிக் கொள்வதற்கு எவ்வகையிலும் குறைந்தவன் அல்லன்— என்று கூறினாள்:*

**முறைமை அன்று என்ப தொன்றுண்டு; மும்மையின்**
**நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்;**
**குறைவிலன் எனக் கூறினள் நால்வர்க்கும்**
**மறு இல் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்** *(4)*

*பிள்ளைகள் நால்வரிடத்தும் குற்றம் இல்லாத அன்பு உடையவள்— வேற்றுமை பாராட்டாதவள்— என்று கோசலை இப்பாடலில் பாராட்டப் பெற்றுள்ளாள்.*

## பிறந்த பேறு

*மகன் காடேகப் போகிறான் என்பதை அறிந்து வருந்தும் அன்னை கோசலைக்கு இராமன் நயமொழி கூறி ஆறுதல் உண்டாக்குகிறான். அன்னையே! முடிசூடிக் கொள்ள இருப்பவனோ சிறந்த தம்பி. யான் முடி துறந்து*

காடு ஏகுவதால், தந்தை சிறிதும் பொய்க்கவில்லை—சொன்னபடி வரங்களை ஈந்து விட்டார்— மறந்தும் தவறு செய்யாதவர்— என்னும் நற்பெயர் தந்தைக்கு உண்டாகின்றதன்றோ? மற்றும், யான் காடு சென்று தவம் மேற்கொள்வதால் எனக்குச் சிறந்த நற்பயன் கிடைக்கும்—இதனினும், யான் பிறந்ததனால் பெறக்கூடிய நற்பேறு யாதாய் இருக்க முடியும்?— என்று நயமொழி கூறி அன்னையைத் தேற்றுகிறான்:

சிறந்த தம்பி திருஉற, எந்தையை
மறந்தும் பொய்யிலன் ஆக்கி, வனத்திடை
உறைந்து பேரும் உறுதி பெற்றேன்; இதின்
பிறந்து யான்பெறும் பேறு என்பது யாவதோ? *(16)*

உறைந்து=வசித்து; பேரும்=திரும்பப் பெயர்ந்து வரும்.

**பத்து நாலு பகல்**

இராமன் காடு செல்வதற்கு வருந்தித் தன்னையும் உடன் அழைத்துக் கொண்டு போகும்படி வேண்டிய தாய் கோசலைக்கு இராமன் கூறுகிறான்: உலகில் மிகப் பலர் காட்டில் தவம் இயற்றிப் பெரிய நன்மைகள் பெற்றுள்ளனர். எனவே, நீ திகைக்க வேண்டா. பதினான்கு ஆண்டு என்பது என்னளவில் பதினான்கு நாள்களே. பதினான்கு ஆண்டு காலத்தைப் பதினான்கு நாள்கள் போலக் கழித்து வந்து விடுவேன்— வருந்தற்க— என்கிறான்.

சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்
ஒத்த மாதவம் செய்து உயர்ந்தார் அன்றே!
எத்தனைக்கு உள ஆண்டுகள் ஈண்டு அவை
பத்து நாலு பகல் அலவோ என்றான் *(21)*

**உயிரை மாய்க்கும் வள்ளன்மை**

இராமன் பிரிவுக்காக வருந்தும் தயரதனின் உரை மிகவும் உள்ளத்தை ஈர்க்க வல்லது. பெரிய நாட்டையும்

அரசையும் கொள்ளக் கொள்ளக் குறையாத பல்வேறு செல்வங்களையும் இன்ன பிறவற்றையும் இராமன் கைகேயிக்குக் கொடுத்துவிட்டு பெரும் புகழ் பெற்ற அவனது வள்ளல் தன்மை என் உயிரை மாய்க்கப் பார்க்கிறதே!

**அள்ளல் பள்ளப் புனல்சூழ் அகல் மாநிலமும் அரசும்**
**கொள்ளக் குறையா நிதியின் குவையும் முதலா எவையும்**
**கள்ளக் கைகேசிக்கே உதவிப் புகழ்கைக் கொண்ட**
**வள்ளல்தனம் என் உயிரை மாய்க்கும் மாய்க்கும் என்றான்** (61)

ஒருவர்க்கு ஒன்று உதவுவதே மற்ற புகழ்ச் செயல்களினும் பெரிய புகழ்ச் செயலாகும்.

**உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்குஒன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்** (232)

ஈபவரின் புகழையே உலகம் உயர்த்திப் பேசும் என்னும் கருத்துடைய இந்தக் குறட்பா ஈண்டு எண்ணத் தக்கது. அதே நேரத்தில், புகழ் பெற்ற வள்ளல் தன்மை இன்னொருவரின் உயிரை மாய்ப்பது வருந்தத்தக்கது. இந்தச் செயலைத் தயரதனின் உரை வியக்கும்படி அறிவிக்கிறது.

## ஒரு சொல் விளையாட்டு

ஜனகன் மகள் ஜானகி என்பது போல், கேகயன் மகள் கைகேயி. இந்தக் கைகேயி என்பது கைகேசி என இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கே ஒரு சொல் விளையாட்டு நினைவைத் தூண்டுகிறது. கரிசலாங் கண்ணிக்குப் 'பொற்றலைக் கையாந்தகரை' என்னும் பெயர் உண்டு. (பொற்றலை= பொன்தலை), கேசி என்பது தலை முடியைக் குறிக்கிறது. கையாந்தகரை என்பதில் 'கை' என்பது உள்ளது; எனவே, கை+கேசி= என்னும் இரண்டையும் இணைத்துக் கரிசலாங் கண்ணிக்குக் 'கைகேசி' என்னும் மறைமுகப் பெயரை

மருத்துவச் சித்தர்கள் சூட்டியுள்ளனர். இது ஒரு சொல் விளையாட்டாகும். தசரதனைத் தயரதன் என்பது போல் கைகேயி என்று கூறுவதல்லாமல் கைகேசி என்றும் கூறலாம். ஈண்டு சகரமும் யகரமும் ஒத்து ஒலிக்கின்றன.

## விதியின் பிழை

பரதன்மேல் சினங்கொண்டு போர் தொடுக்கத் துடித்த இலக்குமணனுக்கு இராமன் கூறுகிறான்: ஆற்றில் தண்ணீர் இல்லாவிடின் அது அவ்வாற்றின் பிழை ஆகாது. அது போலவே, இப்போது நிகழ்ந்துள்ளது யார் பிழையாலும் அன்று. அதாவது:— மன்னன் பிழையும் அன்று— நம்மை வளர்த்த தாயாகிய கைகேயியின் பிழையும் அன்று— அவள் மகனான பரதன் பிழையும் அன்று— இது விதியின் பிழை— எனவே, இதற்காக நாம் வெகுளலாகாது— என்கிறான்.

உலகியலில், எதையாவது இழந்து வருந்துபவர்கட்கு, இது விதியின் பிழை— இது நடந்தே தீரும்— எனவே வருந்தலாகாது என விதியின் தலைமேல் பழியைப் போட்டு ஆறுதல் கொள்ளச் செய்வது வழக்கம். அந்த உள்வழியை (உபாயத்தை) இராமனும் இங்கே பின்பற்றியுள்ளான்.

**நதியின் பிழை அன்று நறும்புனல் இன்மை; அற்றே**
**பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்**
**மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்த!**
**விதியின் பிழை; நீ இதற்கு என்சொல் வெகுண்டது என்றான்**

(129)

## தன் குற்றம்

தயரதன் குற்றமும் இல்லை, கைகேயியின் குற்றமும் இல்லை, பரதனது குற்றமும் இல்லை, விதியின் பிழை— என்று ஒரு போக்குக் காட்டிய இராமன், இது தன் குற்றம்

என்று கூறியிருப்பது, உயர் பண்பாட்டின் பேரெல்லை யாகும்!

**முன் கொற்ற மன்னன் முடிகொள்க எனக் கொள்ள மூண்டது**
**என் குற்றம் அன்றோ இகல் மன்னன் குற்றம் யாதோ** *(128)*

தந்தை தயரதன் முடிசூடிக்கொள் என்றதும், நீங்கள் இருக்கும்போது நான் முடிசூடிக் கொள்வது ததாது என்று கூறித் தடுக்காதது என் குற்றம் அல்லவா— என்று கூறினான் இராமன்.

**கதம் தீர்வது**

மேலும் இராமன் இலக்குமணனுக்குச் சொல்கிறான்: தம்பி! உன் கதம் (சினம்) தீரவேண்டுமெனில், உன் அண்ணன் பரதனைப் போர் செய்து தொலைக்க வேண்டுமா? தந்தை சொல்லையும் தாய் சொல்லையும் தட்டிக் கழித்து வெல்ல வேண்டுமா?— என்கிறான்:

**ஆன்றான் பகர்வான் பினும் ஐய இவ்வைய மையல்**
**தோன்றா நெறிவாழ் துணைத் தம்முனைப் போர் தொலைத்தோ**
**சான்றோர் புகழும் தனித் தாதையை வாகை கொண்டோ**
**ஈன்றாளை வென்றோ இனி இக்கதம் தீர்வது என்றான்** *(134)*

**முன்னம் முடி**

இலக்குமணனைப் பெற்ற சுமித்திரை, இராமனுடன் காடேக உள்ள இலக்குமணனிடம் நயமாகக் கூறிய உரை சிறந்த அறிவுரையாகும். இலக்குமணா! காடுதான் உனக்கு அயோத்தி; இராமன்தான் தயரத மன்னன். சீதையே உனக்குத் தாய். இனிக் காலம் தாழ்க்காதே! அவர்களுடன் காடு செல்வாயாக. மேலும் சொல்கிறேன்: நீ இராமனிடம் தம்பி என்ற உறவு முறையில் நடந்து கொள்ளலாகாது; அடியவன் (தொண்டன்) என்ற முறையில் இட்ட ஏவலைச் செய்ய வேண்டும். இராமன் அயோத்திக்குத் திரும்ப முடியும் எனில் அவனுடன் நீயும்

*திரும்பி வா; இல்லையேல், இராமனுக்கு முன் நீ முடிந்திட வேண்டும்.*

ஆகாதது அன்றால் உனக்கு; அவ்வனம் இவ்வயோத்தி;
மாகாதல் இராமன் அம்மன்னன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம்பூங் குழல்சீதை என்றே
ஏகாய் இனி இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள் *(146)*

பின்னும் பகர்வாள் மகனே இவன்பின் செல்; தம்பி
என்னும்படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி;
மண்ணும் நகர்க்கே இவன் வந்திடின் வா! அது அன்றேல்
முன்னம் முடி என்றனள் வார்விழி சோர நின்றாள் *(147)*

## சான்று நீ

*காடு செல்லாமல் முடிசூட்டிக் கொள் என்று வற்புறுத்திய வசிட்ட முனிவனை நோக்கி இராமன் சொல்கின்றான். என் தந்தை இரண்டு வரங்களையும் ஒத்துக் கொண்டு தந்துள்ளார்— ஈன்ற தாயாகிய கைகேயி அவ்வரங்களின்படிக் காடு செல்லச் சொன்னாள். யானும் அவர்களின் கட்டளையைத் தலைமேற் கொண்டேன்— இவற்றையெல்லாம் உடனிருந்து அறிந்த நீ இதற்கு நல்ல சான்று ஆவாய். எனவே, சான்றாகிய நீயே என்னைத் தடுக்கலாமா— என்று இராமன் வசிட்டனை மடக்கினான்.*

ஏன்றனன் எந்தை இவ்வரங்கள்; ஏவினாள்
ஈன்றவள்; யான்அது சென்னி ஏந்தினேன்;
சான்று என நின்ற நீ தடுத்தியோ என்றான்
தோன்றிய நல்லறம் நிறுத்தத் தோன்றினான் *(164)*

## பிரிவினும் சுடுமோ?

*உடன் வருவதாக வற்புறுத்திய சீதையை நோக்கி, மிகவும் வெப்பம் நிறைந்த காட்டு வழியில் உன் கால்கள் நடக்கமுடியாது என்ற இராமனை நோக்கிச் சீதை உரைக்கின்றாள்: என்னிடம் பரிவு இன்றி— மனத்திலே பற்று*

இன்றி என்னைத் தடுக்கின்றீர். உலகம் அழியும் ஊழிக் காலத்து ஞாயிறும் என்னைச் சுடமுடியாது; உமது பிரிவால் ஏற்படும் உள்ளத்து வெப்பத்தைவிடக் காட்டு வழி வெப்பம் கொடியதோ— என்கிறாள்:

பரிவு இகந்த மனத்து ஒருபற்று இலாது
ஒருவு கின்றனை ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது ஈண்டுநின்
பிரிவினும் சுடுமோ பெருங் காடு என்றாள் (222)

ஈண்டு குறுந்தொகைப் பாடல் ஒன்று ஒப்பு நோக்கத் தக்கது. தலைவியை உடன் கொண்டு செல்ல ஒவ்வாத தலைவன், பாழூர் போன்று தோற்றமளிக்கும் ஓமை மரங்கள் நிறைந்த பாலைவனத்தில் தலைவியால் நடக்க முடியாது என்ற தலைவனிடம் தோழி கூறுகின்றாள்: உம்மைப் பிரிந்து மனையிலே தனித்துக் கிடக்கும் துன்பத்தைவிட, காட்டுவழி துன்பம் தரத்தக்கதோ— என்கிறாள். இதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய குறுந்தொகைப் பாடலால் அறியலாம்.

ஊர் பாழ்த்தன்ன ஓமையம் பெருங்காடு
இன்னா என்றீ ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே (124)

என்பது அந்தப் பாடல். தலைவனைப் பிரிந்திருத்தலினும் கொடிய துன்பம் வேறில்லை என்னும் கருத்தால் இவ்விரு பாடல்களும் ஒத்துள்ளன.

## இது ஒன்றுமோ

உடல் வரலாகாது என்று கூறிய இராமனை நோக்கி, குயில் மொழிச் சீதை சீறிக் கொதிக்கிறாள். ஐய! இப்போது புரிகிறது உம் எண்ணம். உமக்கு உள்ள துன்பம் எல்லாம் நான் உடனிருக்கும் ஒன்று மட்டுமே யாகும். என்னை விட்டுப் பிரிந்தபின் உமக்கு எல்லாம் இன்பமாகும் போலும்:

கொற்றவன் அது கூறலும் கோகிலம்
செற்ற தன்ன குதலையள் சீறுவாள்
உற்று நின்ற துயரம் இது ஒன்றுமோ?
எற்றுறந்தபின் இன்பம் கொலாம் என்றாள் (228)

*எற்றுறந்தபின் என்பதை என் துறந்தபின் என்று பிரித்துப் பொருள் காணல் வேண்டும். சீதை தன் உரை வன்மையால் எண்ணியதை முடித்துக் கொண்டாள்.*

*உலகியலில் கூடச் சில நேரம் மனைவி கணவனை நோக்கி, நான் இருப்பது உங்கட்கு இடையூறாய் இருக்கிறது, நான் போய்விட்டால் நீங்கள் நிம்மதியாய் இருப்பீர்கள்— என்று கூறுவதைக் கேட்டிருக்கலாம்.*

## ஆறு செல் படலம்

### ஈன்றவள் செய்கை

*நீ தான் முடி சூடிக் கொள்ள வேண்டும் என வற்புறுத்திய முனிவர் முதலான அவையோர்க்குப் பரதன் ஆணித்தரமான பதில் இறுக்கிறான்: மூன்று உலகிற்கும் முதல்வன் போன்ற இராமன் இருக்க, இளையவனாகிய என்னை முடி சூடிக்கொள்ளும்படிச் சான்றோர்கள் சொல்வது அறநெறி எனில், என்னை ஈன்ற கைகேயியின் செயலும் அறநெறி என்று சொன்னால் தவறு ஏது?*

மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வனாய் முதல்
தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்
சான்றவர் உரை செயத் தருமம் ஆயதேல்
ஈன்றவள் செய்கையில் இழுக்கு உண்டாகுமோ? (14)

*எனக்கு முடி சூட்ட முயன்ற கைகேயியின் செயல் எவ்வாறு முறையில்லையோ— அவ்வாறே நீங்கள் என்னை வற்புறுத்துவதும் முறையன்று— என்கிறான்.*

# திருவடி சூட்டு படலம்

## யான் தந்தனென்

இராமன் பரதனை நோக்கி, தாய் தந்தையர் ஆணைப்படி அரசு நின்னதே! நீ ஆள்க— என்று கூறிய இராமனிடம் பரதன் கூறுகிறான். ஐயனே— சரி— அரசு எனதே யாகுக! யான் உனக்கு என் அரசைத் தருகிறேன்— நீயே ஆள்க. ஏனெனில், இந்த உலகம் மூன்றிலும் உனக்கு ஒப்பு நீயே. மற்றும் என்னிலும் மூத்துளாய்; எனவே ஏற்றருள்க— என்கிறான்:

முன்னர் வந்து உதித்து உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பிலா நீ பிறந்த பார்
என்னது ஆகில், யான் இன்று தந்தனென்;
மன்ன போந்து நீ மகுடம் சூடு எனா (112)

## இன்றொடு ஏறுமோ

பரதனே! நீ அரசை என்னிடம் அளித்தல் முறை யாகாது. யான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் தங்குவ தாக அரசர் ஆணைப்படி ஏற்றுக் கொண்டுள்ளேன். அதன் பின்னரே யான் அரசு ஏற்கமுடியும். நீயோ இன்றே ஆட்சியை ஏற்கச் சொல்கிறாய். இன்று ஒரு நாள் பதினான்கு ஆண்டுகள் ஆகுமோ?— ஒரு நாள் கழிந்தால் பதினான்கு ஆண்டுகள் கழிந்ததாகுமோ?

பசைந்த சிந்தை நீ பரிவின் வையம் என்
வசம் செய்தால் அது முறைமையோ வசைக்கு
அசைந்த எந்தையார் அருள அன்று நான்
இசைந்த ஆண்டெலாம் இன்றொடு ஏறுமோ (114)

மேலும் இராமன் மொழிகிறான் பரதனுக்கு:— பெரியவராகிய நம் தந்தை மன்னவர் இருக்கும்போதே எனக்கு அரசைத் தந்தார். நான் அதை முதலில் ஏற்றுக் கொண்டது எதற்காக எனில், பெரியவர் சொல்வதை

*மறுக்கக்கூடாது என்ற மதிப்போடு கூடிய அச்சத்தினாலே யாகும். அது போலவே, உன்னைக் காட்டிலும் பெரிய வனாகிய யான் சொல்கிறேன்— நீ என் ஆணையை மறுக்கலாமோ? சொன்னதைச் செய்! வருந்தாதே— என்பது இராமனது திறமையான உரையாகும்.*

மன்னவன் இருக்கவேயும் மணி அணி மகுடம் சூடுக
என்ன யான் இயைந்தது அன்னான் ஏயது மறுக்க அஞ்சி;
அன்னது நினைந்தும் நீ என் ஆணையை மறுக்க லாமோ
சொன்னது செய்தி ஐய! துயர் உழந்து அயரல் என்றான்
(117)

எனது ஆணை

*வசிட்ட முனிவனும் பரதனை நோக்கி அரசு ஏற்கும்படி நெருக்கி வற்புறுத்துகிறான்: பரதனே! ஐம்பெருங் குரவர்கட்குள் உயர்ந்த குரவர், இம்மை நலனும் மறுமை நலமும் எய்தும்படிப் பலவிதக் கலை களையும் பயிற்று வித்தவரேயாவார். இதன்படி, யான், உன்னை மாணாக்கனாக ஏற்றுப் பல்வேறு கலைகளையும் பயிற்றுவித்த பெரிய குரவனாவேன். எனவே, என் சொல்லை நீ தட்டாமல்— என் ஆணையை ஏற்று, உனக்குரிய அரசை ஒப்புக்கொண்டு ஆண்டே தீர வேண்டும்— என வற்புறுத்தினான்.*

இதஇயல் இயற்றிய குரவர் யாரினும்
மதஇயல் களிற்றினாய் மறுஇல் விஞ்சைகள்
பதவிய இருமையும் பயக்கப் பண்பினால்
உதவிய ஒருவனே உயரும் என்பரால் (123)

என்றலால் யான் உனை எடுத்து விஞ்சைகள்
ஒன்றலாதன பல உதவிற்று உண்மையால்,
அன்று எனாது, இன்று எனது ஆணை, ஐயநீ
நன்று போந்து அளி உனக்கு உரியநாடு என்றான் (124)

*இவ்வாறு பலரும் எடுத்துரைக்க, அரசு ஏற்கப் பரதன் உடன்பட்டான்.*

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின் (648)

என்னும் திருக்குறளின் கருத்து, பரதன் அளவில் உண்மை யானதை எண்ணுங்கால் உவகை பூக்கின்றது. இப்பகுதியில் உள்ள எல்லாமே முத்தான உரையாடல்களாம்.

# 7. சத்துருக்கனன் பங்கு

தயரதன் மைந்தர்கள் நால்வருள் சத்துருக்கனனைத் தவிர்த்த மற்ற மூவர்க்கே இராமாயணத்தில் நிறைந்த பங்கு உண்டு; சத்துருக்கனனுக்கு இரண்டோரிடத்தில் மட்டுமே உரை வாய்ப்பு தரப்பட்டுள்ளது— என்றெல்லாம் சத்துருக்கன் சொல்லப்படுகிறான். ஆனால், இந்த அயோத்தியா காண்டத்தில் சத்துருக்கனன் இடம் பெற்றுள்ள சில பகுதிகளைக் காண்போம்:—

## ஆறு செல் படலம்

**நம்பி கூறல்**

இராமனை அழைத்துவரப் படைகளுடன் செல்ல வேண்டும் என எண்ணிய பரதன், தன் தம்பி சத்துருக்கனனை அழைத்து, இராமனை அழைத்துவரப் படைகள் புறப்பட வேண்டும் என முரசறைந்து தெரிவிக்க ஏற்பாடு செய்க என்றான் பரதன்.

பரதன் சொல்லியபடி நம்பி சத்துருக்கனன் படை புறப்பட முரசறையுங்கள் என்று அதற்கு உரியவரிடம் கூறினான். உயிர் நீத்த உடல் அமிழ்தத்தால் மீண்டும் உயிர்த்து எழுவதுபோல, இராமனை அழைத்து வரவேண்டும் என்னும் சொல்லாகிய அமிழ்தத்தைச்

*செவி மடுத்து, நகரில் வருந்திக் கொண்டிருந்த அனைவரும் ஆரவாரித்துக் கொண்டு புறப்பட்டனராம்.*

குரிசிலும் தம்பியைக் கூவிக் கொண்டலின்
முரசறைந்து இந்நகர் முறைமை வேந்தனைத்
தருதும் ஈண்டு என்பது சாற்றித் தானையை
விரைவினில் எழுக என விளம்புவாய் என்றான் *(21)*

நல்லவன் உரை செய நம்பி கூறலும்
அல்லலின் அழுங்கிய அன்பின் மாநகர்
ஒல்லென இரைத்ததால் உயிர்இல் யாக்கை அச்
சொல்லெனும் அமிழ்தினால் துளிர்த்தது என்னவே *(22)*

*நல்லவன் பரதன்; நம்பி சத்துருக்கனன். நம்பி வாய் திறந்து பேசியதாக இப்பாடலால் தெரிகிறது.*

## அந்தரத்து ஏற்றுவான்

*பரதன், சத்துருக்கனன், உறவினர் முதலியோர் இராமனை அழைத்து வரப் புறப்பட்ட போது, கூட்டத்தோடு தானும் கலந்து சென்ற மந்தரைக் கூனியைச் சத்துருக்கனன் கண்டு, அவளை அப்படியே தூக்கி விண்ணிலே எறிவதற்காகப் போய்ப் பிடித்தான். உடனே பரதன் தடுத்து விட்டான்:*

மந்தரைக் கூற்றமும் வழிச்செல் வாரொடும்
உந்தியே போதல் கண்டு இளவல் ஓடிப்போய்
அந்தரத்து ஏற்றுவான் அழன்று பற்றலும்
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான் *(54)*

*மந்தரை கூற்றமாம்— எமனாம்; ஆம் தயரதனைக் கொன்று விட்டாள் அல்லவா? இளவல்=நால்வருள் மிகவும் இளைய சத்துருக்கனன். அந்தரத்து ஏற்றுதல்= விண்ணில் தூக்கி எறிதல்.*

*அயோத்தியா காண்டத்தில், சத்துருக்கனன் பேசியதாகவும் செயலில் ஈடுபட்டதாகவும் கூறப்பட்டுள்ளான். இறுதியிலும் இவன் பங்கு இடம் பெற்றுள்ளது.*

# 8. திருக்குறள் ஆட்சி

*திருக்குறளை எடுத்தாளாத புலவர்கள் இல்லை எனலாம். ஒரு நூல் திருக்குறள்களை எடுத்தாளுவதால் பெருமை பெறுகிறது. கம்பரும் இந்தக் கலையைத் தம் நூலில் கையாண்டுள்ளார். அவற்றுள், அயோத்தியா கண்டாத்தில் வந்துள்ள சில காண்பாம்:*

## மந்திரப் படலம்

### கவரிமா அனைய நீரார்

*தயரதனின் அமைச்சர்களின் சிறப்பைக் கூற வந்த கம்பர்,*

**கற்றவர் மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்** *(6)*

*என்று கூறியுள்ளார். இது, உடலிலிருந்து ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாப் போன்றவர், உயிர் விடுவதால் மானம் நிலைக்குமென்றால் உயிரை விட்டு விடுவர்— என்னும் கருத்தமைந்த*

**மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின்** *(969)*

*என்னும் திருக்குறளை அடியொற்றி அறிவிக்கப்பட்டு உள்ளது.*

## பிறப்பெனும் பெருங்கடல்

*தயரதன் அமைச்சர்களிடம் சொல்கிறான். யான் அரசைத் துறக்கப் போகிறேன். இந்தத் துறப்பு என்னும் தெப்பம் துணை செய்யாவிடின், பிறப்பு என்னும் பெருங்கடலை நீந்த முடியாது— என்கிறான். வள்ளுவர் பிறப்பைப் பெருங்கடலாகக் கூறி அதை நீந்திக் கடக்கும் வழிமுறையும் கூறியுள்ளார்.*

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார் (10)

*என்பது குறள். இதை அடியொற்றி, பிறப்பைக் கடலாகக் கம்பர் உருவகித்து, கடக்கும் முறையும் அறிவித்திருப்பது ஓரளவு ஒப்பு நோக்கத் தக்கது.*

## பிறந்திலென்

*தயரதன் அமைச்சர்களிடம் அறிவிக்கின்றான். யான் போர்க்களத்தில் இறக்கவும் இல்லை. அது கிடக்க—யான் மூப்பு வந்த பின்னும் அரசைத் துறக்கவில்லை எனில், யான் பிறந்ததனால் என்ன பயன் உள்ளது?— என்று வினவுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்— என்கிறான்.*

இறந்திலன் செருக் களத்து இராமன் தாதை தான்
அறந்தலை நிரம்ப மூப்பு அடைந்த பின்னரும்
துறந்திலன் என்பதோர் சொல் உண்டானபின்
பிறந்திலென் என்பதின் பிறிது உண்டாகுமோ? (27)

*என்பது பாடல். இந்தப் பாடலில்,*

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று (236)

*என்னும் குறள் கருத்து இழையோடுகிறதல்லவா?*

### பெற்ற அன்றினும்

*தயரதன் முடி துறக்கவும் இராமனுக்குப் பட்டம் கட்டவும் வசிட்டன் ஒத்துக் கொண்டபின், தயரதன் மிகவும் பெரு மகிழ்வு பெற்றானாம். அதாவது— மகனைப் பெற்ற நாளினும்— சீதையை மணக்க வில்லை ஒடித்த நாளினும், தம் குல எதிரியாகிய பரசுராமனை இராமன் வென்ற நாளினும்— இந்நாளில் பெரிதும் உவகை உற்றானாம்:*

மற்றவன் சொன்ன வாசகம் கேட்டலும் மகனைப்
பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்த அப் பெருவில்
இற்ற அன்றினும், எறி மழுவாளவன் இழுக்கம்
உற்ற அன்றினும் பெரியதோர் உவகையன் ஆனான் *(41)*

*என்பது பாடல். இதில் உள்ள 'மகனைப் பெற்ற அன்றினும்' என்னும் பகுதி,*

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய் *(69)*

*என்னும் குறளை அடிப்படையாகக் கொண்டுள்ளது.*

### ஊருணி—பயன் மரம்

*தயரதன் இராமனுக்கு முடிசூட்டுதல் பற்றி அவையோரின் கருத்தைக் கேட்டான். அவையோர் அனைவரும் உடன்பட்டுக் கூறியதாவது: ஊருணி நீர் நிறைதலையும், பயன் மரம் பழுத்தலையும், மழை பொழிதலையும், வயலுக்கு நீர் தரும் ஆறு நீர் பெருகுதலையும் மறுப்பவர்கள் யார்? ஒருவரும் இலர். இராமனுக்கு முடி சூட்டுதல் இவை போல் பயனுள்ள செயலாகும். எனவே மறுப்பு இல்லை— என்பதாகும். பாடல்:*

ஊருணி நிறையவும் உதவும் மாடுஉயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்
கார்மழை பொழியவும் கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் யார்? *(81)*

*என்பது பாடல். இப்பாடலின் முதல் இரண்டடிகளில்,*

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு (215)

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின் (216)

**என்னும்** *குறள்கள் இரண்டும் மறைந்திருப்பதைக் காணலாம்.*

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

*இன்சொல்லும் ஈகையும் உடைய மன்னனுக்கு அழிவு இல்லை என வசிட்டன் இராமனுக்கு அறிவுறுத்துகிறான்:*

இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்......
அனைய மன்னற்கு அழிவும் உண்டாங் கொலோ? (26)

*என்பது பாடல் பகுதி. இது, இன்சொல்லுடன் வேண்டிய தைக் கொடுத்துக் காக்கும் மன்னனுக்கு உலகம் ஒத்து வரும் என்னும் கருத்துடைய*

இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு (387)

*என்னும் குறள் கருத்தைத் தன்னுள் கொண்டுள்ளது.*

**படைக்கலம்**

*வசிட்டன் இராமனுக்கு மேலும் அறிவுரை தருகிறான் சான்றோரின் ஆர்வமே (அன்பே— ஆசியே) அரசனுக்குப் படைக்கலமாகும்— என்கிறான்.*

தீர்வில் அன்பு செலுத்தலின் செவ்வியோர்
ஆர்வம் மன்னவற்கு ஆயுதம் ஆவதே (28)

*என்பது பாடல் பகுதி. இது,*

ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை (985)

என்னும் குறள் கருத்தோடு ஒப்பு நோக்கத் தக்கது.

## நகர் நீங்கு படலம்

### குழலும் யாழும்

தயரதனின் இளைய மனைவிமார்களின் சொற்கள் இதற்கு முன், அமிழ்தினும் இனியவாகிக் குழலையும் யாழையும் வென்றன. இராமன் பிரிந்த போதோ, அழுது புலம்பியதால், அவர்தம் சொற்கள் குழலுக்கும் யாழுக்கும் தோற்றனவாம்:

கிளையினும் நரம்பினும் நிரம்பும் கேழன
அளவிறந் துயிர்க்கவிட் டரற்றும் தன்மையால்
தொளைபடு குழலினோடு யாழ்க்குத் தோற்றன
இளையவர் அமுதினும் இனிய சொற்களே (176)

என்னும் பாடலில் வெற்றி பெற்ற குழலும் யாழும்,

குழலினிது யாழினிது என்ப தம்மக்கள்
மழலைச்சொல் கேளா தவர் (66)

என்னும் குறளில் அடைந்த தோல்விக்கு ஈடுகொடுக்கின்றன. மக்களின் மழலைச் சொல்லுக்குத் தோற்றவையல்லவா இவை?

## சுமந்திரன் மீட்சிப் படலம்

### இன்பமும் துன்பமும்

திரும்ப அயோத்திக்கு வரமுடியாது என்று இராமன் அறிவித்து விட்டதால் சோர்ந்து வருந்தும் சுமந்திரனுக்கு இராமன் ஆறுதல் கூறுகிறான்: இன்பம் வந்தபோது இன்

*புறுபவர்கள், துன்பம் வந்தபோது துவளுவது பொருந்தாது என்கிறான்.*

**இன்பம் வந்துறும் எனின் இனியதாய் இடைத்**
**துன்பம் வந்துறும் எனின் துறக்கல் ஆகுமோ?** *(28)*

*என்பது பாடல் பகுதி. இது, நன்மை வருங்கால் இன்பமாய் நுகர்பவர், தீமை வருங்கால் துன்புறுவது ஏன்? (இரண்டிற்கும் ஈடு கொடுக்கத்தானே வேண்டும்?) என்னும் கருத்துடைய*

**நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்**
**அல்லல் படுவ தெவன்** *(379)*

*என்னும் திருக்குறளின் மறு பதிப்புபோல் உள்ளதல்லவா?*

## தயரதன் மோட்சப் படலம்

### என்பு இலா உயிர்

*கணவன் இறந்ததை அறிந்த கோசலை, கோடைக் காலத்தில் வெயில் சுடுகின்ற வேளையில் வந்து அகப்பட்டுக் கொண்ட எலும்பு இல்லாத புழு—பூச்சி முதலிய உயிர்கள் வெந்து விடுவதைப்போல், தன் உடலும் உள்ளமும் வெப்பம் அடைந்தாளாம்.*

**அயிர்த்தனள் நோக்கி மன்னற்கு ஆருயிர் இன்மை தேறி...**
**வெயில் சுடுகோடை தன்னில் என்பிலா உயிரின் வேவாள்** *(14)*

*என்பது பாடல் பகுதி. இது,*

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம்** *(77)*

*என்னும் திருக்குறளை நினைவுபடுத்துகிறது அன்றோ!*

## சித்திர கூடப் படலம்

### இனிய சொல்

*இராமன் சீதைக்குச் சித்திர கூடத்தின் சிறப்பைக் காண்பித்துக் கொண்டு செல்கிறான். துளைகள்*

பொருந்திய குழலினும், நரப்பு எறிந்து மீட்டும் தமிழ் யாழினும் இனிய சொல் பேசும் கிளியே— எனச் சீதையை விளிக்கின்றான்:

குழுவு நுண்தொளை வேயினும் குறிநரம்பு எறிவுற்று
எழுவு தண்தமிழ் யாழினும் இனியசொல் கிளியே (28)

என்பது பாடல் பகுதி. தண் தமிழ்யாழ் என்பதற்குக் குளிர்ந்த இனிய யாழ் என்பது பொருள். தமிழ் என்றால் இனிமை என்ற பொருள் இருக்க, மற்றும் ஒரு கருத்து இதில் மறைந்து கிடக்கிறது. அதாவது:— இப்போது தமிழகத்தில் வீணைதான் ஆட்சி புரிகிறது. யாழைக் காணோம். பண்டு தமிழகத்தில் வீணையின் இடத்தில் யாழே விளங்கிற்று. வடக்கேயிருந்து வீணை வந்ததும் யாழ் மறையலாயிற்று. 'யாழ் தமிழ் இசைக் கருவி' என்னும் கருத்துதான் 'தமிழ் யாழ்' என்பதில் மறைந்திருப்பது.

## திருவடி சூட்டு படலம்

### உயிரும் ஒழுக்கமும்

பரதன் படைகளுடன் சித்திர கூடத்தை அடைந்தான். இந்தப் படைகள் தயரதன் அமைத்த படைகளே அல்லவா? இவற்றைத் தயரதனின் படைகள் என்கிறார் கம்பர். தயரதன், சொன்ன சொல் தவறாத ஒழுக்கத்திற்காக உயிரைவிட்டவன். அதை இங்கே குறிப்பிட்டுள்ளார். படைகள் பாலை நிலத்தையும் மருதம் போல் எண்ணிக் கடந்து சித்திர கூடம் சேர்ந்தனவாம்:—

வன்தெறு பாலையை மருதம் ஆமெனச்
சென்றது சித்திர கூடம் சேர்ந்ததால்
ஒன்று உரைத்து உயிரினும் ஒழுக்கம் நன்றெனப்
பொன்றிய புரவலன் பொருவில் சேனையே (24)

என்பது பாடல். இதிலுள்ள 'உயிரினும் ஒழுக்கம் நன்று' என்னும் தொடர்,

> ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம்
> உயிரினும் ஓம்பப் படும் *(131)*

என்னும் திருக்குறளிலிருந்து பெறப்பட்டதன்றோ?

## நிறையும் பொறையும்

நாடு திரும்பும்படி இராமனை வற்புறுத்தும் பரதன் பின் வருமாறு ஒரு கருத்து மொழிகிறான்: நிறை (கற்பு) நீங்கிய பெண்மையும், பொறுக்கும் ஆற்றல் இல்லாத தவமும், உண்மையான அருள் உள்ளம் இன்றிக் கடமைக்காகச் செய்யும் அறமும், மூத்தவனுக்கே பட்டம் என்னும் தொல்லோரின் முறையினின்றும் நீங்கிய அரசும் சிறப்புற மாட்டா என்று கூறுகிறான்:

> நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்
> பொறையின் நீங்கிய தவமும், பொங்கு அருள்
> துறையின் நீங்கிய அறமும், தொல்லையோர்
> முறையின் நீங்கிய அரசின் முந்துமோ? *(100)*

என்பது பாடல். மகளிர் நீர்மை = பெண் தன்மை = பெண்மை. இந்தப் பாடலின் முதல் அடியில், மகளிரைச் சிறையிட்டுக் காக்கும் காப்பு உண்மைக் காப்பாகாது; அவர்கள் தம் நிறையைத் (கற்பைத்) தாமே காத்துக் கொள்ளும் காவலே தலைமையான காவலாகும்—என்னும் கருத்துடைய

> சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
> நிறைகாக்கும் காப்பே தலை *(57)*

என்னும் குறளின் நீரோட்டத்தைக் காணலாம். அடுத்த இரண்டாம் அடியில், தமக்கு நேர்ந்த துன்பைப் பொறுத்துக் கொள்ளுதலும் எவ்வுயிர்க்கும் துன்பம் இழைக்காதிருத்தலும் ஆகிய அவ்வளவே தவத்திற்கு வடிவமாகும்—என்னும் கருத்துடைய

உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு (261)

என்னும் குறளின் நிழலோட்டத்தைக் காணலாம்.

## வாய்மையும் தூய்மையும்

நாடு திரும்ப மறுக்கும் இராமன் பரதனிடம் வினவுகின்றான்: நாம் வாய்மைக்கு மதிப்பு அளித்தல் வேண்டும்; வாய்மை தவறிய வேறு யாதொன்றையும் உலகம் தூய்மையான உண்மையென ஒத்துக் கொள்ளுமோ?— என வினவுகிறான்.

வாய்மை என்னும் ஈதன்றி வையகம்
தூய்மை என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ? (115)

என்பது பாடல் பகுதி. ஈண்டு, தண்ணீரால் வெளி உடம்பைத் தூய்மை செய்யலாம்; ஆனால் உள்ளே உள்ள உள்ளத்தின் தூய்மையோ வாய்மையினால்தான் பெறப்படும் என்னும் கருத்துடைய

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும் (298)

என்னும் குறள் எண்ணத்தக்கது. இவ்வாறெல்லாம் கம்பர் திருக்குறளை முத்தே போல் போற்றித் தம் நூலில் பயன்படுத்திக் கொண்டுள்ளார்.

# 9. கற்பனை நயங்கள்

சுழகக் காலத்திற்குப் பிற்பட்ட இலக்கியங்களில் கற்பனை மிகுதியாயிருக்கும். கம்பராமாயணம் போன்ற வரலாற்றுத் தொடர்புடைய இலக்கியங்களில் கற்பனை கட்டாயம் இருக்கும். கற்பனை இன்றெனில் அவை இலக்கியங்களாக மதிக்கப் பெறாமல் வரலாற்று நூலாகவே மதிக்கப் பெறும். வரலாற்று நூலாசிரியன் சிறிதும் கற்பனை இல்லாமலும் தன் கருத்தை வலிந்து புகுத்தாமலும் வரலாற்றை அமைக்க வேண்டும்; இல்லையேல்— அதாவது, கற்பனையும் சொந்தக் கருத்தும் புகுமேல் அவை இலக்கியங்களாகக் கருதப்படும். எனவே, வரலாற்றுத் தொடர்புடைய இலக்கியமாகிய கம்ப ராமாயணத்தின் அயோத்தியா காண்டத்தில் உள்ள முத்தான சில கற்பனை நயங்களைக் காண்பாம்:—

## கைகேயி சூழ்வினைப் படலம்

### தென்றலின் திருவிளையாடல்!

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. தென்றல் காற்று மலர்களின் இதழ்களை விரித்து உண்டாக்கிய நறுமணத்துடன் பெண்கள்மேல் வீசுகிறது. அவர்களின் உடை காற்றால் கலைகிறது. தென்றல் உண்டாக்கிய

இன்பப் பசிக்கு உணவு கிடைக்காமல் பெண்கள் உள்ளம் வெம்புகின்றனர். மணமாகாத கன்னியர் இராமனை அடைந்தது போல் கண்ட கனாவுக்கு இடையூறாகத் தென்றல் வீசி அவர்களை எழுப்பி விட்டது:

**இனமலர்க் குலம் வாய்விரித்து இளவாச மாருதம் வீசமுன்**
**புனை துகில்கலை சோரநெஞ்சு புழுங்கினார் சில பூவைமார்;**
**மன அனுக்கம் விடத் தனித்தனி வள்ளலைப் புணர் கள்ளஇன்**
**கனவினுக்கு இடையூறு அடுக்க மயங்கினார் சில கன்னிமார் (56)**

தென்றலின் திருவிளையாடலால் உடல் குளிர்ந்தும், உள்ளம் புழுங்கியிருக்கிறதாம். கன்னியர்கள் கனவு கலைந்தமைக்காக மயங்கினராம்.

## அரா நுழைவு

காம உணர்வைத் தூண்டும் மன்மதனின் அம்பாலும் திங்களாலும் காற்றாலும் உயிர் சோர்ந்துள்ள மங்கையரின் செவிகளில், காலையில் பண்ணோடு பாடப்படும் பாடலின் இசை நுழைந்தது செவிகளில் பாம்பு நுழைந்ததைப் போல் துன்புறுத்தியதாம். பண்ணும் காம இன்பத்தைத் தூண்டுவதுண்டு.

**மொய் அராகம் நிரம்ப ஆசை முருங்கு தீயின் முழங்கமேல்**
**வை அராவிய மாரன் வாளியும் வான் நிலா நெடு வாடையும்**
**மெய் அராவிட ஆவி சோர வெதும்பு மாதர்தம் மென் செவி**
**பை அரா நுழைகின்ற போன்றன பண் கனிந்து எழு பாடலே (58)**

அராகம்=அரபி. வை அராவிய=கூர்தீட்டிய. இன்பப் பொருள்கள் காம உணர்வைத் தூண்டும் என்ற அடிப் படையில் பண் கனிந்த பாடல் துன்புறுத்தியதாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது.

## தடங்கண் நல்லார்

குவளை மலரின் அழகையும் கருநிறத்தையும்— வேலின் சொல்லும் கொடுமையையும் குழைத்துக் கூட்டி,

அதன் நடுவில் மை என்று சொல்லப்படுகின்ற நஞ்சைத் தீட்டி, இவற்றை அப்படியே திங்களின் நடுவே வைத்தாற் போன்ற தோற்றம் உடைய மங்கையர், துவளும் இடையுடன் மயில் குழாம்போல் வந்து குழுமினர்— இராமனது முடிசூட்டைக் கொண்டாட—

**குவளையின் எழிலும் வேலின் கொடுமையும் குழைத்துக் கூட்டி**
**திவளும் அஞ்சனம் என்று ஏய்ந்த நஞ்சினைத் தெரியத் தீட்டி**
**தவள ஒண் மதியுள் வைத்த தன்மைசால் தடங்கண் நல்லார்**
**துவளும் நுண் இடையார் ஆடும் தோகையம் குழாத்தின் தொக்கார்**
*(74)*

திங்களின் சுற்றுப்புறம் வெண்மையாயும் நடுப்பகுதி களங்கம் என்னும் கருநிறத்ததாயும் இருப்பது போலவே, பெண்களின் கண்களின் சுற்றுப்புறம் வெண்மையும் நடுப் பகுதி (பாப்பா என்பது) கறுப்பாயும் இருப்பதைக் காணலாம். அந்தக் கருநிற நடுப்பகுதியிலே நஞ்சு இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. அதாவது, பெண் களின் பார்வை ஆண்களை நஞ்சுபோல் துன்புறுத்துகிறது என்பது உள் கருத்து.

**கானம் புக்கான்**

தயரதனின் அழைப்பின் பேரில் இராமன் தன் மாளிகையிலிருந்து தெருவில் தேர்மேல் செல்கின்றான். அந்தக் காட்சியை மகளிர் காண்கின்றனர். பெண்களின் தோள்கட்கு மூங்கிலும் கண்கட்கு வேலும் ஒப்புமை. காட்டில் மூங்கில் இருக்கும்— போர் மறவர்கள் போட்டுவிட்டுப் போன வேலும் இருக்கும். எனவே, இராமன் கைகேயியால் உண்மையான காட்டுக்குப் போகுமுன்பே, இந்த மூங்கிலும் வேல்களும் நிறைந்த காட்டினிடையே சென்றதாகக் கம்பர் கற்பனை செய்து உள்ளார்.

**துண்ணெனும் சொல்லாள் சொல்லச் சுடர்முடி துறந்து தூய**
**மண்ணெனும் திருவைநீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல்**

**பண்ணெனும் சொல்லினார்தம் தோள்எனும் பணைத்த வேயும்**
**கண்ணெனும் காலவேலும் மிடைநெடுங் கானம் புக்கான் (88)**

வேல் என்பது வேல் படை; வேல் என்பது வேல மரத்தையும் குறிக்கும். காட்டில் வேல மரங்களும் இருக்கும்; அந்தக் கருத்தையும் உள்ளடக்கினாற்போல் வேல் என்னும் சொல் இரட்டுற மொழிதலாக அமைக்கப் பட்டுள்ளது.

## நகர் நீங்கு படலம்

### கண் கலுழி ஆறு

பெண்கள் மார்பில் குங்குமச் சாந்தும் சந்தனச் சான்றும் பூசியுள்ளனர்; முத்து மாலையும் அணிந் துள்ளனர். முலைகள் மேடாக உள்ளன. இடுப்பில் மேகலை அணிந்துள்ளனர். இராமன் காடு ஏகப் போகிறான் என்பதை அறிந்ததும் கண்கலங்கி அழுதனர். கண்ணீர் மார்பிலுள்ள முலைகள், சாந்துகள் ஆகிய வற்றின் வழியாக வழிந்து மேகலைத் தடத்தை அடை கிறது. இதனைக் கம்பர் உருவகப்படுத்திக் கற்பனை செய்துள்ளார்:

**திடருடைக் குங்குமச் சேறும் சாந்தமும்**
**இடையிடை வண்டல் இட்டு ஆரம் ஈர்த்தன;**
**மிடை முலைக் குவடு ஒரீஇ மேகலைத் தடங்**
**கடலிடைப் புகுந்த கண் கலுழி ஆறரோ (178)**

கண்ணீராகிய ஆறு, குங்குமச் சேற்றையும் சந்தனக் குழம்பையும் திட்டு— திட்டாக ஆக்கியும், சில பகுதிகளை வண்டல்போல் ஒதுக்கியும் முத்துகளை அடித்துக் கொண்டும் முலைகளாகிய மலைப் பகுதியினின்றும் கீழிறங்கி மேகலைத் தடமாகிய கடலை அடைந்ததாம். ஆறுகளில் வெள்ளம் வரும்போது இவ்வாறு நிகழ்வ

துண்டு. அவ்வாறே இந்தக் கற்பனை அமைந்துள்ளது. கலுழி என்பது நீரின் மிகுதியைக் குறிக்கிறது.

### இழுக்கலில் வழுக்கல்

இராமனுக்குக் காடு என்பதை அறிந்தும் அதைப் பொறுத்துக் கொண்டிருக்கின்ற நம் கல் நெஞ்சத்தை மழுப்படையால் பிளப்போம் என்று கூறிக் கொண்டு சிலர் ஓடினர்; ஆனால், அவர்கள், ஊற்றுப்போல் கண்களிலிருந்து பெருகும் கண்ணீரால் சேறாகிய வழுக்கல் தரையில் வழுக்கி விழுந்து துன்புற்றனராம்.

**முழுக் கலின் வலிய நம் மூரி நெஞ்சினை**
**மழுக்களின் பிளத்தும் என்றோடுவார் வழி**
**ஒழுக்கிய கண்ணின் நீர்க் கலுழி ஊற்றிடை**
**இழுக்கலில் வழுக்கி வீழ்ந்து இடர் உற்றார் சிலர்** (189)

மழு என்பது ஒரு படை (ஆயுதம்). பெரிய கல்லைவிட வலிய— கொடிய மனமாம். இப்பாடல் மக்களின் உணர்வைப் புலப்படுத்துகிறது.

## குகப் படலம்

### செல்வன் சென்றான்

மன்னன் மறைந்தது போலவே செங்கதிர்ச் செல்வனும் (ஞாயிறு) மறைந்தான். மன்னனும் இருள் போன்ற பகைவரை ஓடச் செய்தவன்— கதிரவனும் இருளை ஓடச் செய்தவன். மன்னன் எட்டுத் திசைகளிலும் உள்ளாரை வென்றவன்— கதிரவனும் எல்லாப் பக்கங்களிலும் உள்ள இருளை வெல்பவன். மன்னன் தனது ஒற்றை ஆணை உருளையால் (ஆக்ஞா சக்கரத்தால்) உலகை ஆண்டவன்— கதிரவன் ஒற்றை உருளை பூண்ட தேரில் இருந்து உலகை ஆள்பவன். மன்னனுக்கும் புகழ் உண்டு— கதிரவனுக்கும் புகழ் உண்டு. மன்னனும் எல்லாருக்கும் அருள் புரிந்தவன்— கதிரவனும் எல்லாரையும் காப்பவன். இத்தகைய மன்னன் வீழ்ந்ததுபோலவே கதிரவனும் மேலைப் பக்கல் சென்று வீழ்ந்தான்.

விரிஇருள் பகையை ஓட்டித் திசைகளை வென்று மேல் நின்று
ஒருதனித் திகிரி உந்தி உயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத்து எவர்க்கும் உள்ளத் திருந்து அருள்புரிந்து வீந்த
செருவலி வீரன் என்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான் (*21*)

*இது ஞாயிறு மறையும் மாலைக் காட்சி பற்றிய பாடல். மன்னனுக்கும் கதிரவனுக்கும் பொருந்துமாறு கம்பர் கற்பனை புரிந்துள்ளார். மன்னன் தனித் திகிரி உந்துதல், உலகில் உள்ள வேறு மன்னர்கள் இவனுக்குக் கீழ்ப்பட்டவர்களே— இவன் ஒருவனே எல்லாரையும் வென்று ஒற்றை ஆழி உருட்டுகிறான்— வேறு எவரும் உருட்டவில்லை. கதிரவன் புகழ் நிறுவுகிறான் என்றால், கதிரவனை எல்லாரும் புகழ்ந்து வழிபடுகின்றனர் என்பது கருத்து. நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் முதல் இரண்டடிகளில் தெரிவித்துள்ள,*

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு

*என்னும் பகுதி ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. இளங்கோ அடிகளும் சிலப்பதிகாரத்தை ''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்'' எனப் போற்றித் தொடங்கி யுள்ளாரல்லவா? கதிரவன் எல்லாரையும் காப்பவன் என்பது, ஞாயிறு இல்லாவிடின் மழை இல்லை— விளைச்சல் இல்லை— உயிர்கட்குத் தேவையான வெப்பம் இல்லை— உலக வாழ்வே நடைபெறாது— என்பதைக் குறிப்பதாகும்.*

## வனம் புகு படலம்

### குறு நகை

*இராமன் சீதையுடன் காட்டில் சென்றுகொண்டிருந்த போது, வழியில் உள்ள பல காட்சிகளைக் காட்டியும்*

விளக்கியும் சென்றான்: ஏந்திய இள முலையாளே— எழுத வொண்ணா அழகியே! இதோ, காந்தளின் அரும்பினைப் பாம்பு என்று எண்ணி மயில் கவ்வியதைப் பார்த்து, முல்லை மலர்கள் புன்முறுவல் பூப்பதைக் காண்பாய்:—

ஏந்திள முலையாளே எழுத அரு எழிலாளே
காந்தளின் முகை கண்ணின் கண்டு ஒரு களி மஞ்ஞை
பாந்தள் இது என உன்னிக் கவ்வியபடி பாரா
தேந் தளவுகள் செய்யும் சிறு குறுநகை காணாய் (9)

காந்தள் = ஒரு மலர்; மஞ்ஞை = மயில்; பாந்தளி = பாம்பு; கவ்வியபடி = கவ்விய தோற்றம்; பாரா = பார்த்து— இது 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினை யெச்சம்; தளவுகள் = முல்லைகள். காந்தளின் அரும்பு பாம்புபோல் தோற்றமளிக்கும். அதைப் பாம்பு என்று ஒரு மயில் தவறாக எண்ணிக் கவ்வுகிறது. பாம்பின் பகை மயில் அல்லவா? இதைக் கண்டு முல்லைகள் புன்னகை புரிகின்றனவாம்— அதாவது, மயிலின் தவறான— ஏமாற்றமான செயலைக் கண்டு முல்லைகள் புன்னகை பூத்தல் என்பது ஒரு கற்பனை. சிரிக்கும் பல்லுக்கு முல்லையை ஒப்புமையாகக் கூறுதல் இலக்கிய மரபு. முல்லைகளின் தோற்றம் இயற்கையாகச் சிரிப்பது போல் உள்ளது. இதை, மயிலின் ஏமாற்றத்தைக் கண்டு தான் சிரிக்கின்றன என்று கம்பர் கற்பனை செய்துள்ளார்.

இந்தப் பகுதியில், பல பாடல்களில், இராமர் சீதையின் மார்பகங்களைப் புனைந்து இத்தகைய மார்பகங்களை உடையவளே— என விளிப்பதாகக் கம்பர் கூறியுள்ளமை படிப்பதற்கு என்னவோபோல்தான் உள்ளது. இது ஓர் இலக்கிய மரபு என்று கூறுவதோடு அமையாமல், மேலும் இதுபற்றி ஒன்று கூறவேண்டும். சிற்பங்களிலும் ஓவியங்களிலும் பெண்களின் மார்பகங்கள் பெரியனவாக அமைக்கப்பட்டுள்ளன. இதேபோல்,

சொல் சிற்பமாகிய— சொல் ஓவியமாகிய காவியத்திலும் இலக்கியத்திலும் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர். சிற்பியையும் ஓவியனையும் தூற்றாதவர்கள், சொல் ஓவியமாகிய இலக்கியங்களில் புனையப்பட்டுள்ளமையை மட்டும் இழிவாக நினைப்பதேன்? மற்றும், நமக்கெல்லாம் பால் தந்து வளர்த்த அன்னைமார்களின் மார்பகங்களைப் பற்றித் தீய எண்ணம்— தீய உணர்ச்சி கொள்வது அந்தக் காலத்தில் பெரும்பாலும் இல்லை என்பதும் ஈண்டு எண்ணத் தக்கது. இந்த அடிப்படையில் தான், இராமன், 'ஏந்து இள முலையாளே' என்று சீதையை விளித்ததாகக் கொள்ளவேண்டும்

## சித்திர கூடப் படலம்

### மேகமும் நாகமும்

மலைச்சாரல் பகுதியில், நிரம்ப நீரைக் கொண்டிருக்கிற— சூல் கொண்ட கரிய மேகமும் வரிசையாய் உறங்கிக் கொண்டிருக்கும் கரிய யானைகளும் வேற்றுமை அறிய முடியாதபடி இருக்கும் காட்சியைக் காண்பாய் என இராமன் சீதைக்குக் காண்பிக்கிறான்.

> நீள மாலைய துயில்வன, நீர் உண்ட கமஞ் சூல்
> காள மேகமும் நாகமும் தெரிகில காணாய் (2)

காள மேகம்= கரிய மேகம். நாகம்= மலை.

### மழை உதிர்ப்பது

காதலோடு மந்தியும் (பெண் குரங்கும்) கடுவனும் (ஆண் குரங்கும்) விளையாடிக் கொண்டுள்ளன. மந்தி அருவி நீரைக் கடுவன்மேல் வீசுகிறதாம். கடுவன் மலை மீது ஏறி மேகத்தைப் பிழிந்து மந்திமேல் நீர் சொரியச் செய்கிறதாம்.

ஒருவில் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே!
மருவு காதலின் இனிது உடன் ஆடிய மந்தி
அருவி நீர்கொடு வீசத் தான் அப்புறத்து ஏறிக்
கருவி மா மழை உதிர்ப்ப தோர் கடுவனைக் காணாய் (14)

**கடுவனும் கொடிச்சியும்**

*மலைவாழ் மக்கள் தினைப் புனக் காவலுக்காக ஒரு கடுவன் (குரங்கு) பறையை எடுத்து அடிக்கிறதாம். கொடிச்சி (மலைவாழ் மகள்) ஒருத்தி, மலை உச்சியில் உள்ள திங்களின் நடுவே இருக்கும் கறையாகிய களங்கத்தைத் துடைக்கிறாளாம்:*

அறைகழல் சிலைக் குன்றவர் அகன் புனம் காவல்
பறை எடுத்து ஒரு கடுவன் நின்று அடிப்பது பாராய்
பிறையை எட்டினள் பிடித்து இதற்கு இது பிழை என்னா
கறை துடைக்குறு பேதைஓர் கொடிச்சியைக் காணாய் (22)

*குரங்கு பறை அடித்தும் இருக்கலாம். ஆனால், கொடிச்சி திங்களின் கறையைத் துடைப்பது என்பது முற்றிலும் கற்பனையே. 'பேதை கொடிச்சி' என்று பாடியுள்ளார் கம்பர். பேதை என்னும் சொல்லுக்குப் பெண் என்ற பொருளும் அறிவிலி என்ற பொருளும் உண்டு என்பது ஈண்டு எண்ணத் தக்கது.*

**குண்டிகைச் சொரிவன**

*மிகவும் மூப்படைந்து தளர்ந்த தவத்தோர்க்காக, யானைகள் தம் தும்பிக்கையில் நீர் உறிஞ்சிக் கொணர்ந்து குண்டிகையில் சொரிகின்றனவாம்.*

அளவில் மூப்பினர் அருந்தவர்க்கு அருவி நீர் கொணர்ந்து
களப மால் கரி குண்டிகைச் சொரிவன காணாய் (29)

*இது ஓரளவு உண்மையாகவும் இருக்கலாம்— அல்லது கற்பனையாகவும் இருக்கலாம்.*

### நெறி காட்டுவ

அகவை முதிர்ந்த தவசிகள் கண்ணொளி மங்கி நடப்பதற்கு உரிய வழி தெரியாமல் தவிக்கின்றனர். அப்போது குரங்குகள், தம் நீண்ட வால்களை நீட்டி அவற்றைப் பிடித்துக் கொண்டு தம் பின்னாலேயே வருமாறு வழி காட்டுகின்றனவாம்:

இடுகு கண்ணினர் இடர்உறு மூப்பினர் ஏக,
நெடுகு கூனல் வால் நீட்டின உருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க்கு அருநெறி காட்டுவ காணாய் (30)

இதுவும் ஓரளவு உண்மையாய் இருக்கலாம். ஆனால், இது பெரும்பாலும் கற்பனையாகத்தான் இருக்கலாம்.

## கங்கை காண் படலம்

### கங்கை உரித்தன்று

பரதன் இராமனை அழைக்கப் பெரும் படையுடன் வந்தான். யானைகளின் மதநீர் கங்கையில் பாய்ந்ததால் வண்டுகள் மொய்த்தல் அல்லது, வேறு யாரும் பருகவும் குளிக்கவும் உரியதாகவில்லை. இதனால், மிக்க— பெரிய யானைப்படை உடன் சென்றது என்பது போதரும்:

எண்ணரும் சுரும்புதம் இனத்துக்கு அல்லது
கண்ணகன் பெரும்புனல் கங்கை எங்கணும்
அண்ணல் வெங்கரி மதத்து அருவி பாய்தலால்
உண்ணவும் குடையவும் உரித்தன் றாயதே (2)

### வேலையே மடுத்தது

கங்கை எப்போதும் சென்றடையும் கடலை இப்போது சென்றடையவில்லையாம். பரதனுடன் வந்த படைகளாகிய கடலே (கடல் போலும் படையே) கங்கையை வழியிலே குடித்துத் தீர்த்து விட்டதாம்:

பாலை ஏய் நிறத்தொடு பண்டு தான்படர்
ஓலை ஏய் நெடுங்கடல் ஓடிற் றில்லையால்;
மாலை ஏய் நெடுமுடி மன்னன் சேனையாம்
வேலையே மடுத்தது அக்கங்கை வெள்ளமே (4)

## திருவடி சூட்டு படலம்

*பாலை நிலத்தில் பரதனுடன் வந்த பெரிய படை சென்றதால் மிகுதியாகத் தூசி பறந்தது. அந்தத் தூசியால் ஞாயிற்றின் வெப்பம் ஆறியது. யானைகள் பொழிந்த மத நீரால் பாலைவன மணல் சேறாகியது; சேறு வழுக்குவதால் தரையில் நடக்க முடியவில்லை.*

எழுந்தது துகள் அதின் எரியும் வெய்யவன்
அழுந்தினன் அவிப்ப அரும் வெம்மை ஆறினான்
பொழிந்தன கரிமதம் பொடி வெங்கானகம்
இழிந்தன வழிநடந்து ஏற ஒண்ணாமையே (21)

*பாலை நிலத்து மணலில் எவ்வளவு நீர் சொரியினும் உள்ளே இழுத்துக் கொள்ளும். அத்தகைய பாலை மணல் வழுக்கும் அளவுக்கு யானைகள் மத நீர் சொரிந்தன என்ற கற்பனை, யானைகளின் மிகுதியை உணர்த்து கிறது.*

*கம்பனது கற்பனைச் சுவை அளப்பரியது. கம்பனது கற்பனைக் கடலில் மூழ்கி முழுதும் ஆழம் கண்டு முத்தெடுத்து வருவது அரிய செயலாகும்.*

# 10. புராண வரலாற்றுக் குறிப்புகள்

*இந்தப் பகுதியில் புராண வரலாறுகள் சிலவற்றைக் காண்போம்:*

## கைகேயி சூழ்வினைப் படலம்

### அரிந்தான்

*கைகேயி வரம் கேட்டதும் சோர்வுற்ற தயரதனிடம் அவள் கூறுகிறாள்: உண்மையை— உயர் பண்பைக் காக்கச் 'சிபி' என்னும் ஞாயிறு குலமன்னன் ஒரு புறாவிற்காகத் துலைத் தட்டில் ஏறித் தன் தசையை அரிந்த வரலாறு உனக்குத் தெரியாதா? எனவே, சொன்ன சொல்லை நீ மறுக்கலாமா?*

**அரிந்தான் முன் ஓர் மன்னவன் அன்றே அருமேனி**
**வரிந்தார் வில்லாய் வாய்மை வளர்ப்பான்...** (47)

### நாரணன் ஒக்கும்

*தயரதன் அழைத்ததனால் தனது மாளிகையிலிருந்து தேர் ஏறித் தெரு வழியே சென்ற இராமனைக் கண்டு பலர் பலவாறு பேசிக் கொண்டனர்: கஜேந்திரன் என்னும் யானையின் காலை முதலை பற்றி இழுத்தபோது, அந்த யானை 'ஆதி மூலமே' என்று கூவி அலறியபோது உடனே*

சென்று அதனைக் காத்த நாரணனை (திருமாலை) ஒத்திருக்கிறான் இராமன்— என்று சிலர் கூறினர்:

**வாரணம் அழைக்க வந்து கரா உயிர் மாற்றும் நேமி**
**நாரணன் ஒக்கும் இந்த நம்பிதன் கருணை என்பார்** (94)

## அகழ்ந்தோர்— கொணர்ந்தோர்

சகரர் என்பார் நிலத்தைத் தோண்டிக் கடலை உண்டாக்கினராம்; சகரரால் தோண்டப்பட்டதால் கடல் 'சாகரம்' எனப்பட்டதாம். பகீரதன் என்பவன் தவம் செய்து விண்ணிலிருந்து கங்கையைக் கொண்டு வந்தானாம். பகீரதனால் கொண்டு வரப்பட்டதால் கங்கைக்குப் 'பாகீரதி' என்ற பெயர் ஏற்பட்டதாம். ககுத்தன், முசுகுந்தன் முதலிய முன்னோர்கள் அசுரர்களை வென்று தேவர்களைக் காத்தனராம்:

**ஆர்கலி அகழ்ந்தோர், கங்கை அவனியில் கொணர்ந்தோர் முந்தைப்**
**போர்கெழு புலவர்க்காகி அசுரரைப் பொருது வென்றோர்...** (96)

ஆர்கலி= கடல்; புலவர் = தேவர். இவர்களின் புகழ்ச் செயல்கள் இராமன் புகழுக்குப் பிற்பட்டவையேயாம்.

# நகர் நீங்கு படலம்

## முப்புரம் எரித்தல்

தாராட்சன், கமலாட்சன், வித்வன்மாலி என்னும் அரக்கர் மூவரும் தேவர்கட்குத் தொல்லை தந்ததால், தேவர்களைக் காப்பதற்காகச் சிவன் மேருமலையை வில்லாக வளைத்து வாசுகிப் பாம்பை நாணாகக் கட்டி— திருமாலாகிய அம்பை ஏந்திச் சென்று சிரித்தே அம்மூவரின் கோட்டைகளை எரித்தாராம்; முப்புரம் எரித்தல் என்பது இதுதான்.

**இறைவன் புரம் மூன்று எரித்த போர்வில் இறுத்தாய்** (57)

இறைவன் = சிவபெருமான்.

### தாயை வெட்டியவன்

மழுப்படை ஏந்திய பரசுராமன், தன் தாய் இரேணுகையிடம் குறைகண்டதால் அவளை வெட்டி விடுமாறு தன் தந்தை யம தக்கினி கட்டளையிட, மறுக்காமல் அவ்வாறே தன் தாய் இரேணுகையின் தலையை வெட்டி விட்டானாம்:

> மான்மறிக் கரத்தான் மழு ஏந்துவான்
> தான் மறுத்திலன் தாதை சொல்; தாயையே
> ஊன் அறக் குறைத்தான்... (25)

### மேரு மத்து

அமிழ்தம் எடுப்பதற்காகப் பால்கடல் நடுவே மந்தர மலையை மத்தாக இட்டு வாசுகி என்னும் பாம்பைக் கடை கயிறாகப் பயன்படுத்தி, தேவர்கள் ஒரு புறமும் அரக்கர்கள் மறுபுறமுமாக நின்று கடலைக் கடைந்தனர். அப்போது கடல் திரிந்ததுபோல் இலக்குவன் திரிந்தானாம்:

> மாலைச் சிகரத் தனி மந்தர மேரு முந்தை
> வேலைத் திரிகின்றது போல் திரிகின்ற வேலை (119)

கூனியால் மாற்றம் ஏற்பட்டதைக் கண்டு கொதித்துத் திரிந்தானாம் இலக்குவன்.

### முற்றா மதியம்

சந்திரனின் மனைவிமார்கள் எனப்படும் அசுவணி—பரணி முதலிய இருபத்தேழு விண்மீன்களும் தக்கனின் பெண்களாம். சந்திரன் அவர்களிடம் ஒழுங்காய் நடந்து கொள்ளாமையால் தக்கன் சினந்து, சந்திரனை நோக்கி, நீ ஒவ்வொரு கலையாய் அழிந்து போவாயாக என்று கெடுமொழி (சாபம்) இட்டானாம். அதனால், சந்திரனின் பதினாறு கலைகளுள் ஒவ்வொன்றாய்ப் பதினைந்து கலைகள் அழிந்தனவாம். ஒரு கலை மட்டும் இருக்கும்

போது சந்திரன் சிவனிடம் அடைக்கலம் புகுந்தானாம். சிவன் முற்றாத அந்த ஒற்றைக் கலைப் பிறைச் சந்திரனை எடுத்துத் தலையில் சூடிக் கொண்டாராம். மேலும், நீ ஒவ்வொரு கலையாய் வளர்ந்து மீண்டும் முழுமை பெறுவாய்; பின்னர், தக்கன் கெடுமொழிப்படி ஒவ்வொன்றாய்க் குறைவாய். மீண்டும் ஒவ்வொன்றாய் வளர்வாய் என்று அருளினாராம். இதுதான் சிவன் பிறை சூடிய கதை:

**முற்றா மதியம் மிலைந்தான் முனிந்தானை அன்னான்** *(132)*

## சுமந்திரன் மீட்சிப் படலம்

### புரந்தரன் உரு

இந்திரன் கௌதம முனிவரின் மனைவியாகிய அகலிகையை, முனிவர் போல் கோலம் கொண்டு வஞ்சகமாய்ப் புணர்ந்ததனால், முனிவர் சினந்து, நீ விரும்பிய அந்தப் பெண் உறுப்பு உன் உடம்பு முழுவதும் உண்டாகுவதாக என்று கெடுமொழி (சாபம்) இட்டார். அவ்வாறே உடம்பு ஆயிற்று. மற்றவர் கண்கட்கு மட்டும் அவை கண்கள்போல் தெரியும்படி வரம் வேண்டிப் பெற்றான். இக்காலத்தில் மக்களுக்குக் கண்ணாயிரம் என்னும் பெயர் வைக்கப்படுகிறது. அது இந்திரனைக் குறிக்கும் பெயர். ஞாயிறு மறைய இருள் தோன்றியது. அப்போது, வானத்தில் விண்மீன்கள் பல மின்னின. அப்போது வானம், உடம்பு முழுதும் கண்கள் பெற்ற இந்திரனது தோற்றம் போல் இருந்ததாம். இராமன் காட்டில் இருந்தபோது, ஞாயிறின் மறைவும் இரவின் வருகையும் ஒரு நாள் நிகழ்ந்தது இவ்வாறு புனையப் பட்டுள்ளது. பாடல்:

**பரந்து மீன் அரும்பிய பசலை வானகம்**
**அரந்தை இல் முனிவரன் அறைந்த சாபத்தால்**

**நிரந்தரம் இமைப்பில நெடுங்கண் ஈண்டிய**
**புரந்தரன் உருஎனப் பொலிந்தது எங்குமே** *(6)*

## திருவடி சூட்டு படலம்

### இளை ஏந்தினான்

*இரண்யாட்சன் என்னும் அரக்கன் பூமியைப் பாயாகச் சுருட்டி எடுத்துக் கொண்டு பாதாள உலகில் சென்று தங்கிவிட்டானாம்; தேவரின் வேண்டுகோள்படி திருமால் பன்றி உரு எடுத்துக் கடலுள் புகுந்து இரண்யாட்சனை வென்று தன் (பன்றியின்) ஒற்றைக் கொம்பால் பூமியை மீண்டும் ஏந்தி எடுத்து வந்தாராம்:*

**கிளர் அகன் புனலுள் நின்று அரி ஓர் கேழலாய்**
**இளை எனும் திருவினை ஏந்தினான் அரோ** *(119)*

*அகன் புனல் = கடல். இளை = பூமாதேவி. இவ்வாறு பல புராணச் செய்திகள் உள்ளன.*

*புராணச் செய்திகளை அறிவியல் நோக்கில் ஆராயலாகாது. என்னவோ புராணக் கதைகள் என்ற அளவில் அமைய வேண்டும்.*

# 11. உவமை- உருவகங்கள்

## ஒப்புமைக்கலை

நன்கு தெரியாத ஒன்றை விளக்குவதற்கு நன்கு தெரிந்த ஒன்றை 'அதுபோல் இது' என்று எடுத்துக் காட்டுவது உவமை— ஒப்புமை எனப்படும். இந்த ஒப்புமை ஓர் இயற்கைக் கலையாகும். புலவர்கள் மட்டுமா— கல்வியறிவு இல்லாத பொது மக்களும்— எளிய மக்களும் பேசும்போது ஒப்புமை கூறுவது வழக்கம். எனவே, இது மக்கள் கலையுமாகும். ஓர் ஒப்புமையும் சொல்ல வராவிடினும், 'என்னமோ சொல்லுவாங்களே அதுபோல'— என்றாவது இனம் தெரியாத ஒப்புமை கூறப்படும். இவ்வாறு ஒப்புமை காட்டுவது 'தெரிந்ததி லிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறையுமாகும்.

ஒருவரின் முகமலர்ச்சியை விளக்குவதற்குத் தாமரை போல் அவர் முகம் மலர்ந்திருந்தது என்று கூறுவது உவமை— ஒப்புமையாகும். இதையே சுருக்கித் தாமரை முகம் எனலாம். தாமரை முகம் என்பதையே திருப்பிப் போட்டு 'முகத் தாமரை' என்று கூறுவது உருவகமாகும். தாமரை முகம் என்பதில், தாமரை— முகம் என இரு பொருள்கள் சுட்டப்படுகின்றன. முகத் தாமரை என்பதில் இரு பொருள்கள் இல்லை; முகமாகிய தாமரை— முகமே தாமரை என முகத்தையே தாமரையாக்கிக் காட்டுவது

உருவகம் எனப்படும். உவமை ஆங்கிலத்தில் Simile என்றும், உருவகம் Metaphor என்றும் வழங்கப் பெறும்.

படிக்காத மக்களே— எழுதத் தெரியாத மக்களே உவமையைக் கையாளும்போது, படித்த பாவலர்கள்— எழுத்தாளர்கள் உவமையைக் கையாளாமல் விடுவார்களா என்ன? எழுத்துப் படைப்பின் இன்றியமையாத ஓர் உறுப்பு உவமையாகும். கவிஞர்கள் உவமையைக் கையாள்வதில் தங்கள் கை வரிசைகளையெல்லாம் காண்பிப்பார்கள். எவ்வளவுக்கு எவ்வளவு மிகுதியாக உவமையை ஒருவர் கையாள்கிறாரோ— அவ்வளவுக்கு அவ்வளவு அவரை உயர்ந்த கவிஞராக எடை போடுவாரும் உளர். 'உவமைக் கவிஞர்' என்ற பட்டம் சூட்டுவதும் உண்டு.

இந்தக் கலையில் கம்பரும் இளைத்தவரோ— சளைத்தவரோ அல்லர். எங்கெங்கே எவ்வளவு உவமை— உருவகங்களைக் கையாள முடியுமோ— அங்கங்கே அவ்வளவையும் கையாண்டுள்ளார். இந்த அடிப்படையுடன், கம்பர் அயோத்தியா காண்டத்தில் படைத்துக் காட்டியுள்ள முத்தான உவமை— உருவகங்களுள் சிலவற்றைக் காண்போம்.

## மந்திரப் படலம்

### மந்திரக் கிழவர்

தேவர்கட்கு வியாழன் குருவாய் இருப்பதுபோல், தயரதனுக்கு மந்திரக் கிழவர்கள் (அமைச்சர்கள்— வசிட்ட முனிவர் முதலானோர்) இருந்தனராம்:

**இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த தன்**
**மந்திரக் கிழவரை வருக என்று ஏவினான் (3)**

## துறப்பும் பிறப்பும்

*தயரதன் மந்திரக் கிழவர்களை நோக்கித் தான் துறவு கொள்ளப் போவதாகக் கூறுகிறான்; பிறப்பு என்னும் பெருங்கடலைக் கடக்க, துறவு என்னும் தெப்பம் தேவையாம்:*

துறப்பு எனும் தெப்பமே துணை செய்யாவிடின்
பிறப்பு எனும் பெருங்கடல் பிழைக்கல் ஆகுமோ? (20)

*இப்பாடலில் துறப்பு தெப்பமாகவும் பிறப்பு கடலாகவும் உருவகிக்கப்பட்டுள்ளன.*

## இரண்டு கன்றுகள்

*தயரதன் தான் முடி துறந்து இராமனுக்கு முடிசூட்டப் போகிறேன் என்றதும், இராமன் முடிசூடுவதற்காக மகிழ்ச்சியும், தயரதன் துறப்பதற்காக வருத்தமும் கொண்டு, இரண்டு கன்றுகட்கு இரங்கும் ஆவைப் போல் ஆனார்களாம் அவையோர்கள்.*

திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர் ஆங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும் விதிர்ப்புறு நிலையால்
இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார் (31)

*இரண்டாவது கன்று போட்ட ஆ (பசு) புதுக் கன்றுக்காக மகிழினும், இவ்வளவு நாள் உடனிருந்த முதல் கன்று பிரிவதைப் பற்றி வருந்துமாம்— அதுபோன்று காணப்பட்டனர் அவையில் இருந்த மந்திரக் கிழவர்கள்.*

## நறவும் வண்டும்

*தயரதன் ஆணைப்படி இராமனை அழைக்கச் சென்ற சுமந்திரன், இராமனது அழகு என்னும் தேனை, தன் கண்களாலும் உள்ளத்தாலும் வண்டுபோல் நுகர்ந்தான்.*

அண்ணல் ஆண்டிருந்தான்; அழகு அருநறவு எனத் தன்
கண்ணும் உள்ளமும் வண்டு எனக் களிப்புறக் கண்டான் (49)

இப்பாடலில் அழகு நறவாகவும் கண்ணும் உள்ளமும் வண்டாகவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளன.

## பூத்தன தாமரை மலர்கள்

இராமன் தேரேறித் தெருவில் சென்ற போது, சில பெண்கள் வீட்டு வாயிலில் தூணைப் பிடித்துக் கொண்டும், சில பெண்கள் மாடியில் நிலாமுற்றத்தில் நின்று கொண்டும், சிலர் காலதருக்குள் (சன்னல்களுக்குள்) நின்று கொண்டும் இராமனைக் கண்டனராம்:

நீள் எழுத்தொடர் வாயிலில், குழையொடு நெகிழ்ந்த
ஆளகத்தினொடு அரமியத் தலத்தினும் அலர்ந்த;
வாள் அரத்த வேல் வண்டொடு கெண்டைகள் மயங்கச்
சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள் (53)

இப்பாடலில் பெண்களின் முகங்கள் தாமரை மலர்களாக உருவகிக்கப்பட்டுள்ளன. பெண்கள் வாயிலில் தூணைப் பிடித்துக் கொண்டு நின்று பார்ப்பது உண்டு. மாடியிலிருந்து கொண்டும், சாளர வழியாகவும் பார்ப்பது உண்டு. அங்கெல்லாம் (முகங்களாகிய) தாமரை மலர்கள் பூத்தன என்பது கூறப்பட்டுள்ளது. வாயிலில் காதணியோடும் மாடியில் கூந்தலோடும் தாமரைகள் (முகங்கள்) இருந்தனவாம். சாளரத்தில் பூத்த (முகமாகிய) தாமரை மலரில் வாள், வேல், வண்டு, கெண்டை மீன் ஆகியவை கலந்திருந்தனவாம். வாளும் வேலும் வண்டும் மீனும் போன்ற கண்கள் முகத்தில் இருப்பதை, தாமரையில் இந்த நான்கும் கலந்திருப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது. கண்கள் இந்த நான்கு பொருள்களாக உருவகிக்கப்பட்டுள்ளன.

## கூண்டோடு கைலாசம்

தயரதன் இராமனுக்கு முடிசூட்டு என்று சொல்லிய சொல்லாகிய மதுவை அவையோர் அருந்தினராம். மேலும், மகிழ்ச்சி மிகுதியால் மெய்ம்மயிர் சிலிர்க்க,

*உடம்போடு வீடு (முத்தி) பெற்ற சீவன்முத்தர்போல் களிப்போடு காணப்பட்டனராம்:*

இறைவன் சொல்எனும் இன்நறவு அருந்தினர் யாரும்
முறையில் நின்றிலர்; முந்துறு களியிடை மூழ்கி
நிறையும் நெஞ்சிடை உவகைபோய் மயிர்வழி நிமிர
உறையும் விண்ணகம் உடலொடும் எய்தினர் ஒத்தார் *(74)*

*தயரதன் சொன்ன சொல் நறவு (மது) என உருவகிக்கப் பட்டுள்ளது. அவையினர்க்குச் சீவன்முத்தர் உவமையாக்கப்பட்டுள்ளனர். உடலோடும் விண்ணகம் எய்துதல், உலக வழக்கில் ''கூண்டோடு கைலாசம் போதல்'' எனக் குறிப்பிடப்படுவதுண்டு.*

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### புள் புகல்

*இராமன் முடிசூட்டிற்காக நகரம் அணி செய்யப்படுகிறது. வெள்ளை, கறுப்பு, சிவப்பு முதலிய பல வண்ணக் கொடிகள் விண்ணில் பறந்து கொண்டிருந்த காட்சி, பல வண்ணப் பறவைகள் விழாகாண நகருக்குள் புகுந்து பறப்பதுபோல் இருந்ததாம்.*

வெள்ளிய கரியன செய்ய வேறுள
கொள்ளை வான்கொடி நிரைக் குழாங்கள் தோன்றுவ,
கள்ளவிழ் கோதையான் செல்வம் காணிய
புள்ளெலாம் திருநகர் புகுந்த போன்றவே *(37)*

### மாறிய உவமைகள்

*நகர் அயோத்தி அணி செய்யப்பட்டது. பெண்களின் துடைகள் போன்ற வாழை மரங்கள் கட்டப்பட்டன. அவர்களின் கழுத்து போன்ற கமுகுகள் (பாக்குமரம்) அமைக்கப்பட்டன. அவர்களின் பல்வரிசைகள் போன்ற*

*முத்து மாலைகள் தொங்கவிடப்பட்டன. அவர்களின் மார்பகங்கள் போல் (பூரணப்) பொற் குடங்கள் வைக்கப் பட்டன:*

**மங்கையர் குறங்கென வகுத்த வாழைகள்**
**அங்கவர் கழுத்தெனக் கமுகம் ஆர்ந்தன**
**தங்கொளிர் முறுவலின் தாமம் நான்றன**
**கொங்கையின் நிரைந்தன கனக கும்பமே** (38)

*வாழையைப் பெண்களின் துடைக்கும், கமுகைக் கழுத்திற்கும், முத்தைப் பல்லுக்கும், குடத்தை மார்பகத் திற்கும் ஒப்புமையாகக் கூறுவது வழக்கம். இங்கே, துடை வாழைக்கும், கழுத்து கமுகிற்கும், பல்வரிசை முத்துக்கும் மார்பகம் குடத்திற்குமாக— அப்படியே தலைகீழாய் மாற்றி உவமிக்கப்பட்டுள்ளன.*

**மாலை நல்கினாள்**

*கைகேயியிடம் கூனி வந்து, இராமனுக்கு முடி சூட்டாம் என்றதும், கைகேயியின் அன்பு என்னும் கடல் ஆரவாரித்ததாம்; தேய்வு இல்லாத முகமாகிய திங்கள் ஒளி யுடன் விளங்கித் தோன்றிற்றாம்; ஞாயிறு முதலிய சுடர்கட்கெல்லாம் தலைமை என்று சொல்லத்தக்க அளவு ஒளி வீசும் பொன் மணிமாலை ஒன்றைக் கைகேயி அளித்தாளாம்:*

**ஆய பேர் அன்பெனும் அளக்கர் ஆர்த்தெழத்**
**தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத்**
**தூயவள் உவகை போய் மிகச் சுடர்க்கெலாம்**
**நாயகம் அனையதோர் மாலை நல்கினாள்** (60)

*அன்பு கடலாகவும் முகம் மதியாகவும் உருவகிக்கப் பட்டுள்ளன. தேயாத மதி இல்லை; எனவே, தேயாத மதி என்பது இல்பொருள் உவமை.*

# கைகேயி சூழ்வினைப் படலம்

## கைகேயியின் கைத்திறன்

கூனியின் உரையால் உள்ளம் மாறிய கைகேயி தன் ஒப்பனையைச் (அலங்காரத்தைச்) சிதைத்துக் கொண்டாள். கரிய கூந்தலில் வைத்திருந்த பூக்களை (மாலையை) கரிய முகிலுள் நுழையும் திங்களைப் பிய்ப்பதுபோல் வண்டுகள் வருந்தப் பிய்த்தெறிந்தாள்.

**சோனை வார்குழல் கற்றையில் சொருகிய மாலை**
**வான மாமழை நுழைதரும் மதி பிதிர்ப்பாள்போல்**
**தேன் அவாவுறும் வண்டினம் அலமரச் சிதைத்தாள்** *(1)*

மதியைப் பிதிர்ப்பது கிடையாது; எனவே, இது, இல் பொருள் உவமையாகும். இன்னும் கைகேயியின் கைத் திறன் வருமாறு:—

கைகேயி, புகழ்க் கொடியை வேர் அறுத்தாற்போல் தன் மேகலையை அறுத்தெறிந்தாள். காலில் இருந்த கிண்கிணியையும் கையில் இருந்த வளையல்களையும் நீக்கி விட்டாள். திங்களின் நடுவில் உள்ள மறுவைத் (களங்கத்தைத்) துடைப்பதுபோல் தன் நெற்றியில் இருந்த மங்கலப் பொட்டை அழித்துவிட்டாள்.

**விளையும் தன்புகழ் வல்லியை வேர் அறுத்தென்ன**
**கிளைகொள் மேகலை சிந்தினள்; கிண்கிணி யோடும்**
**வளை துறந்தனள்; மதியினில் மறுத்துடைப் பாள்போல்**
**அளக வாள்நுதல் அரும் பெறல் திலகமும் அழித்தாள்** *(2)*

புகழை வெண்ணிறமாகச் சொல்வது இலக்கிய மரபு. கம்பர் இதைப் பல இடங்களில் கூறியுள்ளார். (இது பற்றி யான் 'சுந்தர காண்டச் சுரங்கம்' என்னும் எனது நூலில் ஓரிடத்தில் விரிவாக விளக்கியுள்ளேன்) வெண் புகழாகிய கொடியை அறுத்தாள் என்றால், வெண்மை யான முத்துக்களால் ஆன மேகலையை அறுத்தாள் என்பது பொருள். நெற்றிப் பொட்டை அரும் பெறல்

திலகம் (பெறுதற்கு அரிய) திலகம் என்றார் கம்பர். கணவன் இருப்பவர்களே பொட்டிட்டுக் கொள்வர்; கணவனை இழந்தவர்கள் பொட்டு வைத்துக் கொள்வதில்லை— என்பது ஒருவகை மரபு. கணவனாகிய தயரதன் இன்னும் சில மணி நேரத்தில் இறக்கப் போகிறான்— கைகேயி பொட்டு இழக்கப்போகிறாள் என்பதை உள்ளடக்கி 'அரும்பெறல் திலகம்' என்றார்.

மேலும் கைகேயி, எல்லா அணிகலன்களையும் சிதறி, கூந்தல் தரையில் படும்படிப் பரப்பி, கண்ணில் பூசிய மை போலி அழுகையால் ஒழுக, பூக்கள் உதிர்ந்த ஒரு கொம்பைப்போல் (கொடியைப்போல்) தரையிலே படுத்துப் புரண்டாள்:

தாவில் மணிக்கலம் மற்றும் தனித்தனிச் சிதறி,
நாவி ஓதியை நானிலம் தைவரப் பரப்பி,
காவி உண்ட கண் அஞ்சனம் சான்றிடக் கலுழா,
பூ உதிர்ந்த தோர் கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள் (3)

எல்லா அணிகலன்களும் நீக்கப்பட்டமையால் பூ உதிர்ந்த கொம்பு எனப்பட்டாள் கைகேயி.

## வேகம் அடங்கிய வேழம்

பாம்பு போன்ற கொடிய கைகேயியின் நாக்கின் வழி வந்த சொற்களாகிய நஞ்சைக் கேட்டதும், யானை போன்ற தயரதன், பாம்புக் கடியால் வேகம் (வலிமை) இழந்து விழும் யானைபோல் விழுந்தான்:

நாகம் எனும் கொடியாள் தன் நாவின் வந்த
சோக விடம் தொடரத் துணுக்கம் எய்தா
ஆகம் அடங்கலும் வெந்தழிந்து அராவின்
வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான் (15)

கொடியாள் என்பது, கொடியவள் என்னும் பொருளையும் கொடி போன்றவள் என்னும் பொருளையும் தரும். பாம்புக்குப் பல்லிலிருந்து நஞ்சு வரும்;

*கைகேயிக்குச் சொல்லிலிருந்து நஞ்சு வந்தது. நஞ்சு தீண்டினால் தான் கொல்லும்; சொல் காதால் கேட்கவே கொல்வதாயிற்று. பாம்பால் யானை வீழ்ந்ததுபோல், மனைவியால் மன்னன் விழுந்தான்.*

**தாய் கண்ட கன்று**

*இராமன் கைகேயியின் மாளிகைக்குச் சென்று, மாலையில் மந்தையிலிருந்து திரும்பி வீடு வந்த தாய் ஆவினை ஆன் கன்று கண்டு மகிழ்ந்தாற்போல் கைகேயி யைக் கண்டு மகிழ்ந்தானாம்.*

**அந்திவந் தடைந்த தாயைக் கண்ட ஆன் கன்றின் அன்னான்** *(108)*

*இத்தகையவனைக் கைகேயி காட்டிற்கு அனுப்பிவிட்டாள்.*

**பிணி அவிழ்ந்தது**

*அப்பொழுது அலர்ந்த செந்தாமரையை வென்ற முகத்தை உடைய இராமன், தந்தையின் கட்டளையால் அரசுச் சுமையை (அரச பாரத்தை) ஏற்றுக் கொண்டான். ஆனால் பின் என்ன ஆயிற்று? காளை மாட்டுக்கு உரியவன் காளையை வண்டியில் பூட்டி ஓட்ட, கண்டவன் ஒருவன் பூட்டை அவிழ்த்துக் காளையை விடுவித்தது போல், கைகேயியின் செயலால் அரசுச் சுமையைத் துறந்தானாம்:—*

**தெருளுடை மனத்து மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி**
**இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்கு இயைந்து நின்றான்**
**உருளுடைச் சகடம் பூண்ட உடையவன் உய்த்த கார் ஏறு**
**அருளுடை ஒருவன் நீக்க, அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்** *(113)*

*இராமன் கரியவன் ஆதலின் கார் ஏறு ஒப்புமை யாக்கப்பட்டது. அங்கு அருளுடைய ஒருவனால் மாடு சுமை நீங்கிற்று; ஆனால் இங்கே அருள் இல்லாத கைகேயியால் சுமை நீங்கிற்று; இருப்பினும், பின்பு சீதையை இழந்து வருந்துவதால் கைகேயியின் செய்கை அருள் உடையதாகாது.*

## நகர் நீங்கு படலம்

### மாலும் சிவமும் தழுவல்

*அளப்பரும் பெருமைமிகு திருமாலும் பொன்மான் உரியுடைய சிவனும் தழுவிக்கொண்டதுபோல் இராமனும் இலக்குமணனும் தழுவிக் கொண்டனராம்:*

**அன்னான்தனை ஐயனும், ஆதியோடு அந்தம் ஒன்றாம்**
**தன்னாலும் அளப்பரும் தானும் தன் பாகம் நின்ற**
**பொன்மான் உரியானும் தழீஇ எனப் புல்லிப் பின்னை**
**சொன் மாண்புடைய அன்னை சுமித்திரை கோயில் புக்கான் (138)**

*கரிய திருமால்போல் இராமன் கருநிறத்தான்; பொன்னிறச் சிவன்போல் இலக்குவன் பொன்னிறத்தான். எனவே ஒப்புமை பொருந்தும். திருமாலின் வலப்பக்கத்தே சிவன் இருப்பதாக ஆழ்வார்கள் கூறியுள்ளனர்; திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி என்னும் திவ்வியப் பிரபந்த நூலிலுள்ள*

பிறை தங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரம்மனைத் தன் உந்தியிலே தோற்றுவித்து (3-4-9)

*என்னும் பகுதியும், பொய்கையாழ்வாரின் இயற்பா—முதல் திருவந்தாதியிலுள்ள*

பொன்திகழும் மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்— என்றும்
இருவரங்கத் தால்திரிவ ரேலும் ஒருவன்
ஒருவன்அங்கத் தென்றும் உளன் (98)

*என்னும் வெண்பாப் பாடலும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன. இருவரும் ஒருவர் உடம்பிலே இன்னொருவராயும் இணைந்துள்ளனர். இதனால்தான், 'தானும் தன் பாகம் நின்ற பொன்மான் உரியானும்' என்று பாடினார். இந்த வடிவம் 'சங்கர நாராயணன்' எனப்படும். பல ஊர்களில், ஒரே கோயிலுக்குள் சிவன்*

கருவறையின் இடப்பக்கத்தே திருமாலின் கருவறை இருப்பதை— அதாவது— திருமால் கருவறையின் வலப் பக்கத்தே சிவன் கருவறையும் இருப்பதைக் காணலாம். மக்களுள் சிலருக்குச் 'சங்கரநாராயணன்' என்னும் பெயர் வழங்கப்படுவதைக் காணலாம்.

**நின்றனர்**

இராமனுக்குக் காடு என்பதை அறிந்த பெண்கள் சிலர், இரும்பு போன்ற மனத்தினராயும் பெரும் பொருளை இழந்தவர் போலவும் அப்படியே நின்றிருந்தனர்!

**இரும்பு அன மனத்தினர் என்ன நின்றனர்**
**பெரும் பொருள் இழந்தவர் போலும் பெற்றியார்** (170)

உலகியலில், இன்றியமையாப் பொருளை இழந்தவர் சிலர், மனத்தை இரும்பாக்கிக் கொண்டு, ஒன்றும் புரியாமல்— செய்வதறியாமல் அப்படியே நின்றிருப் பதைக் காணலாம்.

## சுமந்திரன் மீட்சிப் படலம்

**சிந்தையின் இருண்டது**

ஞாயிறு மறைந்ததும், மந்தரையின் உரையால் மாறிய கைகேயியின் மங்கிய மனம்போல் வானில் இருள் வந்ததாம்.

**அந்தியில் வெயில்ஒளி அழிய வானகம்**
**நந்தலில் கேகயன் பயந்த நங்கைதன்**
**மந்தரை உரையெனும் கடுவின் மட்கிய**
**சிந்தையின் இருண்டது செம்மை நீங்கியே** (5)

பகலில் வானம் வெளிச்சமாயிருந்ததைப் போன்று களங்கமின்றி வெள்ளையாயிருந்த கைகேயியின் மனம், இருள் வந்ததும் வானம் கருமையானதுபோல், கூனியின் வஞ்சக உரையினால் கைகேயியின் மனம் இருண்டது.

## தயரதன் மோட்சப் படலம்

**கை விளக்கு**

*பொய் வாழ்க்கையினராகிய அரக்கருக்கு உதவி செய்யப் போகின்றவர் போன்ற இருளைப் போக்க, வானம் கை விளக்கு எடுத்தது போல் திங்கள் தோன்றியது.*

**பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரைப் பொருந்தி அன்னார்**
**செய்வினைக்கு உதவும் நட்பால் செல்பவர்த் தடுப்ப தேய்க்கும்**
**மைகுழைத் தெனவே வந்து வயங்கு இருள் துரக்க வானம்**
**கைவிளக்கு எடுத்த தென்னப் பொலிந்தது கடவுள் திங்கள் (2)**

*திங்களை வணங்கும் மரபு உண்மையால் கடவுள் திங்கள் எனப்பட்டது. 'திங்களைப் போற்றுதும்— திங்களைப் போற்றுதும்' என்பது சிலப்பதிகாரத் தொடக்கப் பகுதி. கை விளக்கு என்பது நடைமுறை வழக்காறாகும். மக்களுக்குக் கை விளக்கு போல், வானத்திற்குத் திங்கள் கை விளக்காம். திங்களைக் கை விளக்கு என ஏன் சொல்ல வேண்டும்? மக்கள் பெரிய— பெரிய விளக்குகளையெல்லாம் பயன்படுத்துவதுண்டு. மின்சாரம் இல்லாத காலத்தில், இருளில் சிறிய கை விளக்கை எடுத்துக் கொண்டு அங்குமிங்கும் செல்வர். மக்களுக்குப் பெரிய விளக்குகள் உள்ளது போல வானத்திற்கு ஞாயிறு பெரிய விளக்காயிருப்பதால், திங்கள் கை விளக்கு எனப்பட்டது. மற்றும் இங்கே,*

**இருளை நீங்கக் கைவிளக்கு ஏந்தியாங்கு**
**வீறுயர் மதியம் தோன்ற... *(1542)***

*என்னும் சீவக சிந்தாமணிப் பாடல் ஒப்பு நோக்கத் தக்கது.*

**மக்களால் மாய்வு**

*தயரதன் இறந்தமையை அறிந்து கோசலை புலம்புகிறாள்: மன்னன் நோய் இல்லாமலும் பகைவரின் வாள்—*

*வேல் போன்ற படைகளால் தாக்கப்படாமலும் மக்களால் இறந்துவிட்டானே. நண்டு, நாகம், கனிவாழை, மூங்கில் ஆகியவைதாம் கருவுயிர்க்கும் பிள்ளைகளால் இறப்பதுபோல்— அழிவது போல் அல்லவா இருக்கிறது இது— என்று புலம்புகிறாள்:*

**நோயும் இன்றி நோன்கதிர் வாள்வேல் இவைஇன்றி**
**மாயும் தன்மை மக்களின் ஆக, மறமன்னன்**
**காயும் புள்ளிக் கற்கடகம் நாகம் கனிவாழை**
**வேயும் போன்றான் என்று மயங்கா விழுகின்றாள்** *(18)*

*கற்கடகம்= நண்டு; வேய் = மூங்கில். மற்றும் இங்கே,*

**நண்டு சிப்பி வேய் கதவி நாசமுறுங் காலத்தில்**
**கொண்ட கருவுயிர்க்கும் கொள்கைபோல்...** *(36)*

*என்னும் ஔவையின் நல்வழிப் பாடல் ஒப்பு நோக்கத் தக்கது. நண்டின் முதுகைப் பிளந்து கொண்டு குஞ்சுகள் வெளிவருமாம்; பின்னர் நண்டு இறந்து விடுமாம். உள்ளே இருக்கும் முத்தை எடுக்கச் சிப்பியைப் பிளப்பதால் சிப்பி அழிகிறது. பெரும்பாலான மூங்கில் இனங்கள் ஆண்டுகள் பல வாழ்ந்திருந்து ஒரே முறை பூத்துப் பின்பு சிறிது காலத்திற்குள் பட்டுப் போகுமாம். குலை ஈன்றதும் தாய் வாழை மரம் வெட்டப்படும் அதனால்தான் கம்பர் 'கனி வாழை' என்றார்.*

*கம்பர் சிப்பியைக் கூறவில்லை; நாகத்தைக் கூறியுள்ளார். நாகப் பாம்பு தன்னிடம் உண்டான மாணிக்கம் நீங்கினால் இறந்துவிடும் என்பதாகச் சொல்லப்படுகிறது.*

*நீலகேசி என்னும் காப்பியத்தின் உரையில் பின்வரும் பாடல் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது:—*

**புத்தன்தாய் நண்டிப்பி வாழை புனமூங்கில்**
**கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி— இத்தனையும்**

**வேலாலும் வாளாலும் இன்றியே தாம்கொண்ட**
**சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு**

இத்தனையும் சூல் கொண்டதால் அழிகின்றனவாம்.

இந்தப் பாடலில், நண்டு—இப்பி (சிப்பி)— வாழை— மூங்கில் என்பனவற்றோடு விரியன் பாம்பும் சிலந்தியும் அவ்வாறே அழியும் என்பது கூறப்பட்டுள்ளது. இந்தப் பாடலின் தொடக்கத்தில் 'புத்தன் தாய்' என்றிருப்பது கவனிக்கத் தக்கது. புத்தருடைய தாய் மாயா தேவி. புத்தரைப் பெற்ற ஏழாம் நாளே இறந்து விட்டாள்— என்பதை இது குறிக்கிறது.

முற்காலத்தில் பெண்கள் கருவுயிர்ப்பால் இறந்து போவது மிகுதி. அதனால்தான், கருவுற்றிருக்கும்போது அவர்கட்கு ஆசைப்பட்டதை ஆக்கிப் போடுதல்—வாங்கித் தருதல் போன்ற கரிசனம் பின்பற்றப்பட்டது. வயிற்றின் வழியாகக் குழந்தையை எடுக்கும் அறுவை மருத்துவம் வந்துள்ள இந்தக் காலத்திலுங் கூட, பொறையுயிர்ப்பால் பெண்டிர் சிலர் இறந்து போகின்றனர் அல்லவா? இத்தகைய அடிப்படையில், தயரதன் பிள்ளையால் இறந்தான் என்று கூறி அழுதாள் கோசலை. இராமன் பிரிந்ததாலேயே தயரதன் இறந்தான் அல்லவா?

## உய்த்து மீண்ட நாவாய்

தயரதன் இறந்ததும் அவன் உடலைத் தேவியர் பற்றிப் பிடித்துக் கொண்டு விழாமல் அழுதனர். உலகப் பித்து மயக்கமாகிய சுறான் மீன் உள்ள பிறவி என்னும் கடலைத் தேவியர் கடக்க நாவாயாக அவன் உடம்பு பயன்பட்டதாம். பலமுறை சென்று திரும்பிப் பழக்கப் பட்ட நாவாயாக அவன் உடல் இருந்ததாம்.

**கைத்த சொல்லால் உயிர் இழந்தும் புதல்வற் பிரிந்தும் கடைஓட**
**மெய்த்த வேந்தன் திருஉடம்பைப் பிரியார் பற்றி விட்டிலரால்;**
பித்த மயக்காம் சுறவு எறியும் பிறவிப் பெரிய கடல் கடக்க
உய்த்து மீண்ட நாவாயின் தாமும்போவார் ஒக்கின்றார் (25).

*உலகப் பித்து சுறா மீனாகவும், பிறவி கடலாகவும் தயரதன் உடம்பு நாவாயாகவும், தேவியர் பயணி களாகவும் உருவகம் செய்யப்பட்டுள்ளது.*

## வனம் புகு படலம்

### களிமயில்

*இராமன் சீதையுடன் காட்டில் செல்லும்போது, வழியிலுள்ள பல காட்சிகளைக் காண்பித்துச் செல்கிறான்: வண்டு பாடும் பாணனாகவும் மழை இடி முரசாகவும் இருக்க, மயில் என்னும் நடன மாது ஆகின்றாள். அந்த மயில் சீதையின் சாயலைப் பல கண்களால் காண்பது போல் தோன்றுகிறதாம். இராமன் பாராய் என்கின்றான்.*

பாண் இள மிஞறு ஆக, படுமழை பணை ஆக,
நாணின தொகுபீலி கோலின நடம் ஆடல்
பூணியல் நின் சாயல் பொலிவது பல கண்ணின்
காணிய எனல் ஆகும் இயல்பின இவை காணாய் *(4)*

*மயிலின் தோகையில் கண்கள் போன்ற பகுதிகள் பல இருப்பதால் 'பல கண்ணின் காணிய எனல் ஆகும்' என்று கூறப்பட்டுள்ளது.*

*காந்தள் மலரின்மேல் அமர்ந்துள்ள கிளி, சீதையின் முன்கையில் அமரும் கிளி போன்றுள்ளதாம். இதையும் காண்க என்றான். காந்தள் மலர் கைபோன்றிருக்கும்.*

### இருந்தையில் தீ

*பொன்னிற அசோகத்தில் கரு நிற வண்டுகள் மொய்க்கின்றன. இது, பொன் ஊது உலையில் உள்ள கரிய கரித்துண்டுகளின்மேல் தீ எழுவது போன்று உள்ளதாம். (இருந்தை = கரி).*

செருந்தியின் மலர்தாங்கும் செறி இதழின் அசோகம்
பொருந்தின களி வண்டின் பொலிவன பொன் ஊதும்
இருந்தையின் எழுதீ ஒத்து எழுவன இயல் காணாய் (8)

## சித்திர கூடப் படலம்

*சிங்கத்தோடு போர் செய்து புண்பட்ட யானையின் குருதியில் யானையிடம் பிறந்த முத்துகள் கலந்து கிடப்பது, பெண்கள் கணவருடன் ஊடல் கொண்ட காலத்தில் சிந்தின குங்குமக் குழம்பில் அவர்கள் மாலையி லுள்ள முத்துக்கள் சிதறிக் கலந்திருப்பதுபோல் தோன்று கிறதாம்:*

சலம் தலைக் கொண்ட சீயத்தால் தனி மதக் கதமா
உலந்து வீழ்தலின் சிந்தின உதிரத்தில் மடவார்
புலந்த காலை அற்று உக்கன குங்குமப் பொதியில்
கலந்த முத்தென வேழ முத்து இமைப்பன காணாய் (6)

*முத்து பிறக்கும் இடங்களில் யானையும் (யானைக் கொம்பும்) ஒன்று என்பது இப்பாடலால் புலனாகும்.*

## பள்ளி படைப் படலம்

### நிற்கும் பரிசிலர்

*அகன்ற குளக்கரையின் கீழே உள்ள பயிர்கள், மடைவாயிலிலிருந்து நீர் வராமையால், கருமிகளின் கடை வாயிலில் வருந்தி நிற்கும் பரிசிலர் போல் வாடினவாம்.*

அலர்ந்த பைங்கூழ் அகன்குளக் கீழன
மலர்ந்த வாயில் புனல்வழங் காமையால்
உலர்ந்த, வன்கண் உலோபர் கடைத்தலைப்
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே (26)

வீடுதோறிரந்தும் பசியறாது அயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்

என்னும் திருவருட்பாப் பாடல் பகுதி ஒப்பு நோக்கத் தக்கது.

## ஆறு செல் படலம்

### அரசிலா வையகம்

*அரசை ஏற்க மறுக்கும் பரதனுக்கு வசிட்ட முனிவர் கூறுகின்றார்: அரசர் இல்லாத நாடு, ஞாயிறு இல்லாத பகல் போலவும் திங்கள் இல்லாத இரவு போலவும் உயிர் இல்லாத உடம்பு போலவும் பொலிவு இன்றி மங்கிப் போகும்:*

வள்ளுறு வயிரவாள் அரசு இவ்வையகம்
நள்ளுறு கதிர் இலாப் பகலும், நாளொடும்
தெள்ளுறு மதியிலா இரவும், தேர்தரின்
உள்ளுறை உயிரிலா உடலும் ஒக்குமே (7)

### நான்கு கடல்கள்

*பரதனுடன் நால்வகைப் படைகளும் புறப்பட்டன. ஒவ்வொருவகைப் படையும் ஒவ்வொருவகைக் கடலாக உருவகிக்கப்பட்டுள்ளது. ஒரு கடல் தேர்களின் மேலும், இன்னொரு கடல் யானைகளின் மீதும், மற்றொரு கடல் குதிரைகள் மீதும் வேறொரு கடல் தரைமேல் பரவியும் சென்றனவாம்.*

தேர்மிசைச் சென்றது ஓர் பரவை, செம்முகக்
கார்மிசைச் சென்றது ஓர் உவரி, கார்க்கடல்
ஏர்முகப் பரிமிசை ஏகிற்று, எங்கணும்
பார்மிசைப் படர்ந்தது பதாதிப் பௌவமே (32)

*தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாள்படை ஆகிய நான்கும் கடலாக உருவகிக்கப்*

பட்டுள்ளன. இப்பாடலில் கம்பர் சொற்சிலம்பம் ஆடியுள்ளார். கடல் என்னும் பொருளைக் குறிக்கும் பரவை, உவரி, கடல், பௌவம் என்னும் நான்கு சொற்களையும் பயன்படுத்தியுள்ளார்.

**அறிஞர் போல**

பரதனுடன் கொண்டு செல்லப்படும் தாரை, சங்கு முதலிய இடங்கள் எல்லாம், அறிவிலார் கூட்டத்தில் அறிஞர் பேசாமல் அடங்கியிருப்பதுபோல் சிறிதும் ஒலி எழுப்பவில்லை.

தாரையும் சங்கமும் தாளம் கொம்பொடு
வார்மிசைப் பம்பையும் துடியும் மற்றவும்
பேரியும் இயம்பல சென்ற, பேதைமைப்
பூரியர் குழாத்திடை அறிஞர் போலவே (33)

**மதி இலாக் கங்குல்**

பரதனுடன் வெண் கொற்றக் குடை இல்லாமல் செல்லும் படை, விண்ணில் விண் மீன்கள் இருப்பினும் வெள்ளிய திங்கள் இல்லாத இரவைப் போன்றிருந்ததாம்:

அதிர்கடல் வையகம் அனைத்தும் காத்தவன்
விதிவரும் தனிக்குடை மீது இலாப் படை,
பொதிபல கவிகை மீன் பூத்த தாகிலும்
கதிர் மதி நீங்கிய கங்குல் போன்றதே (35)

**மறி கடல் ஒத்தது**

இராமன் சென்றபின் பரதனும் அறிஞர், இளைஞர் முதலியோருடனும் திருவுடனும், பலவகைப் படைகளுடனும் இராமனை அழைத்துவரக் காட்டிற்குச் சென்று விட்டதால், வறிய அயோத்தி, அகத்தியர் நீர் முழுவதையும் குடித்துவிட்ட காலிக் கடல் போல் காட்சியளித்ததாம்.

அறிஞரும் சிறியரும் ஆதி அந்தமாச்
செறிபெருந் தானையும் திருவும் நீங்கலால்,
குறியவன் புனல் எலாம் வயிற்றில் கொண்ட நாள்
மறிகடல் ஒத்தது அவ்வயோத்தி மாநகர் (45)

*குறியவன் = குள்ளமான அகத்தியன். கடலில் மறைந்து கொண்ட விருத்திராசுரன் என்னும் அரக்கனைக் கண்டு பிடிப்பதற்காக இந்திரனது வேண்டுகோளின்படி அகத்தியர் கடல் நீர் முழுவதையும் குடித்து விட்டார்— என்பது புராணக்கதை.*

**சித்திரச் சுவர்**

*மத்தளம் முதலிய பலவகை இயங்களோடு செல்லினும் ஒலிக்காமல் அமைதியாய்ச் செல்லும் படை, சுவரில் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ள படையைக் காண்பது போல் இருந்தது.*

மத்தளம் முதலிய வயங்கு பல்லியம்
ஒத்தன சேறலின் உரை இலாமையின்
சித்திரச் சுவர் நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்தது அப்படையின் ஈட்டமே (49)

'சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை ஒத்திருந்த முகம்' *(சுந்தர காண்டம்— காட்சிப் படலம்-20) எனக் கம்பர் பின்னர் ஓரிடத்தில் கூறியிருப்பது ஒப்பு நோக்கத் தக்கது.*

## கங்கை காண் படலம்

**எலியும் புலியும்**

*இராமனைக் கொல்லப் பரதன் படையுடன் வருவதாகத் தவறாக எண்ணிய குகன் கூறுகிறான்: இந்தப் படைகள் யாவும் எலிகள்— யானோ இவற்றைக் கொல்லும் பாம்பு என்று கூறி, உலகில் உள்ள புலிகளை*

*எல்லாம் ஓரிடத்தில் அழைப்பதுபோல் தன் படை மறவர் அனைவரையும் அழைக்கிறான்:*

எலி எலாம் இப்படை, அரவம் யான்என
ஒலி உலாம் சேனையை உவந்து கூவினான்;
வலி உலாம் உலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலி எலாம் ஒருவழிப் புகுந்த போலவே (*10*)

**ஆ முன் கூழ்**

*ஏழு கடல்கள் போன்ற பெரிய படை எனினும் இப்படை என்முன், ஆவின்முன் வைத்த சிறு கூழ்போல் ஆகிவிடும் என்று குகன் கூறுகிறான்:*

ஏ முனை உற்றிடில் ஏழு கடற்படை என்றாலும்
ஆ முனையின் சிறு கூழ்என இப்பொழு தாகாதோ (*23*)

**உன் புகழ்**

*பரதனது உள்ளக்கிடக்கையை உணர்ந்து கொண்ட குகன் பரதனைப் புகழ்கின்றான்: ஞாயிறு மற்ற ஒளிகளை யெல்லாம் அடக்கி விடுதல்போல், உன் புகழ், உன் முன்னோர் புகழ்களை எல்லாம் அடக்கித் தன் புகழாக்கிக் கொண்டது— என்றான்.*

என் புகழ் கின்றது ஏழை எயினனேன் இரவி என்பான்
தன் புகழ்க் கற்றை மற்றை ஒளிகளைத் தவிர்க் குமாபோல்
மன் புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன் புகழ் ஆக்கிக் கொண்டாய் உயர்குணத்து உரவுத்தோளாய்(*36*)

## திருவடி சூட்டு படலம்

**விளக்கு அவிதல்**

*தயரதன் இறந்தான் என்பதைக் கேட்டுப் புலம்பிய இராமனை வசிட்டன் தேற்றுகிறான்: புண்ணியம்*

என்னும் நெய் ஊற்றி, (ஆயுள்) காலம் என்னும் திரி இட்டுப் பற்றச் செய்த விதி என்னும் எரியும் விளக்கு, மற்றவை இரண்டும் தீர்ந்துவிடின் அவியும் அல்லவா?

**புண்ணிய நறுநெயில், பொரு இல் காலமாம்**
**திண்ணிய திரியினில், விதி என் தீயினில்**
**எண்ணிய விளக்கு, அவை இரண்டும் எஞ்சினால்**
**அண்ணலே அவிவதற்கு ஐயம் யாவதோ?** (75)

புண்ணியம் நெய்யாகவும் காலம் திரியாகவும் விதி தீயாகவும் உருவகிக்கப்பட்டுள்ளன. தயரதன் புண்ணியம் செய்து முடித்து விட்டான்; அவனது அகவையும் (ஆயுள் காலமும்) முடிந்தது; அவனது விதி இம்மட்டோடு நின்று விட்டது. எனவே, அவன் இறந்ததற்காக வருந்த வேண்டியதில்லை— என்பது கருத்து.

இவ்வாறு பல்வேறு முத்து முத்தான உவமை— உருவகங்களை அமைத்துக் கம்பர் காப்பியத்தைச் சுவைக்கச் செய்துள்ளார். உவமைகளின் வாயிலாகச் சில அரிய கருத்துகளை விளங்க வைத்துள்ளார்.

# 12. சில அணி நயங்கள்

அணிகளின் தாய் அணியாகிய— தலைமை அணியாகிய உவமை அணியையும் இடையிடையே உருவக அணியையும் கொண்ட பாடல்களின் சுவையை முன்னர்க் கண்டோம். இனி, வேற்றுப் பொருள் வைப்பு அணி, தற்குறிப் பேற்ற அணி ஆகிய அணிகள் அமைந்துள்ள முத்தான சில பாடல்களைக் காண்பாம்:

## வேற்றுப் பொருள் வைப்பு அணி

ஒரு நிகழ்ச்சியை விளக்கி அதன் வாயிலாகப் பெறத் தக்க— உலகறிந்த ஒரு பொது உண்மையை வேறாக— தனியாக எடுத்துக் கூறி வைப்பது வேற்றுப் பொருள் வைப்பு அணியாகும்:

முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை உலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப் பொருள்வைப்பே (47)

என்பது, அணிகள் பற்றிக் கூறும் 'தண்டியலங்காரம்' என்னும் நூலில் உள்ள நூற்பா ஆகும். இதற்குப் 'பிறிது மொழிதல் அணி' என்னும் பெயரும் கூறுவது உண்டு. இனிப் பாடல்களில் அணி அமைந்துள்ளமையைக் காண்பாம்.

## மந்திரப் படலம்

### அறத்தின் கொடுமை

*இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று தயரதன் சொல்ல அவையோர் அனைவரும் ஒத்துக் கொண்டதைத் தொடர்ந்து சுமந்திரன் கூறுகிறான்: மன்னா! இராமனுக்கு முடிசூட்டு என்பதை அறிந்து மகிழ்கின்ற மனத்தை, நீ நீங்கித் துறவு கொள்ளப் போகிறாய் என்று சொல்லும் சொல் சுடுகிறது. எனவே, முறையான அறத்தினும் கொடியது வேறொன்றும் இல்லை போலும் என்கிறான்.*

**உறத்தகும் அரசு இராமற்கு என்று உவக்கின்ற மனத்தைத்**
**துறத்தி நீஎனும் சொல் சுடும்; நின்குலத் தொல்லோர்**
**மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்று**
**அறத்தி னூங்கு இனிக் கொடிதெனல் ஆவது ஒன்று யாதோ** *(45)*

*இங்கே தயரதன் மேற்கொண்ட அறநெறியை முதலில் விளக்கி, அதன் வாயிலாகப் பின்னர், இது போன்ற நேரங்களில் அறத்தினும் கொடியது ஒன்று இல்லை என வேறொரு கருத்தை அமைத்து வைத்திருப்பது வேற்றுப் பொருள் வைப்பாம்.*

24870/2769404

### பெரியவர் இயற்கை

*தயரதன் இராமனை நோக்கி, நின்னைப் பெற்ற யான், இன்னும் அரசுச் சுமையால் வருந்துவது தகாது; எனக்கு நீ உதவ வேண்டும்; நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடக்க வேண்டும் மைந்தரைப் பெற்று, துன்பம் நீங்கி, இம்மை— மறுமை இன்பங்களைப் பெறுவது முதியோரின் இயற்கையல்லவா?*

**உரிமை மைந்தரைப் பெறுகின்றது உறு துயர் நீங்கி**
**இருமையும் பெறற்கு என்பது பெரியவர் இயற்கை;**
**தருமம் அன்ன நின் தந்த யான் தளர்வது தகவோ?**
**கருமம் என்வயின் செய்யின் என் கட்டுரை கோடி** *(62)*

ஈண்டு, தயரதன் இங்கே தனது நிலையைக் கூறுவதன் வாயிலாக, உலகப் பொது உண்மையாகிய— பிள்ளையைப் பெற்ற முதியவரின் நிலையைக் கூறியிருப்பது வேற்றுப் பொருள் வைப்பு இந்த வேற்றுப் பொருள், குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சியின் பின்னே கூறப்படுவதன்றி முன்னேயும் கூறப்படும்.

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

### அன்பின் ஆக்கம்

வசிட்டன் இராமனுக்கு மேலும் கூறுகிறான்: யாவர்க்கும் ஐம்புல வேட்கையை விட்டுவிட்டால் போதாது. அன்போடு நடந்து கொள்ள வேண்டும். அன்பினும் சிறந்த செல்வம் வேறில்லை.

**என்புதோல் உடையர்க்கும் இலார்க்கும் தம்**
**வன் பகைப் புலன் மாசற மாய்ப்பது என்**
**முன்பு பின்பின்றி மூவுல கத்தினும்**
**அன்பில் நல்லது ஓராக்கம் உண்டாகுமோ?** (24)

அன்பினும் நல்ல ஆக்கம் இல்லை என்பது வேற்றுப் பொருள் வைப்பு.

## நகர் நீங்கு படலம்

### பிறந்தார் பெயரும் தன்மை

வசிட்டன் கைகேயியின் மாளிகைக்குச் சென்று, இறந்தானா— இறக்கவில்லையா என்ற மயக்க நிலையில் இருந்த தயரதனைக் கண்டு, கைகேயி துன்பம் இன்றி உள்ளாள்— கோசலையோ துன்புற்றிருக்கிறாள். நற்குடியில் பிறந்தவர் மாறும் தன்மை பிறரால் அறிய முடியாது— என்கிறான்.

**இறந்தான் அல்லன் அரசன், இறவாது ஒழிவான் அல்லன்,**
**மறந்தான் உணர்வு என்று உன்னா வன் கேகயர் கோன் மங்கை**

**துறந்தாள் துயரம் தன்னை; துறவாள் துயர் கோசலை; இற்**
**பிறந்தார் பெயரும் தன்மை பிறரால் அறிதற்கு எளிதோ (35)**

*இதில் இறுதி அடி வேற்றுப் பொருள் வைப்பாகும்.*

**ஊழ் வினை**

*மரவுரி அணிந்த இராமனைக் கண்ட வசிட்டன், வாழ்வு பெற வேண்டிய மங்கல நாளிலே மரவுரி உடுத்திருக்கிறான். நான்முகன் முயலினும், ஊழ்வினையை ஒருவராலும் ஒழிக்க முடியாது— என்று கூறினான்.*

**வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்**
**தாழ்வினை அதுவரச் சீரை சாத்தினான்**
**சூழ்வினை நான்முகத்து ஒருவன் சூழினும்**
**ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ? (159)**

*ஒரு முகம் அன்று— இரு முகங்கள் அல்ல— நான்கு முகங்களை உடைய பிரமனாலும் முடியாது என்னும் நயம் இதில் அமைந்துள்ளது. இப்பாடலின் இறுதி அடி வேற்றுப் பொருள் வைப்பு.*

**உண்டு இடர்**

*கோசல நாட்டு மன்னனாகிய தயரதனின் மனைவிமார்கள் அறையினின்றும் வெளியில் வந்து புலம்புகின்றனர். இதுவரையும் அவர்களுடைய தாமரை போன்ற முகங்களைக் காணாத ஞாயிறும் இப்போது கண்டு விட்டான். விண்ணில் உறையும் இந்திரனாயினும் துன்பம் அடைவதுண்டு. துன்பம் வந்த போது உறாத வருத்தங்கள் என்ன இருக்க முடியும்?*

**தண்டலைக் கோசலைத் தலைவன் மாதரைக்**
**கண்டனன் இரவியும், கமல வாள் முகம்;**
**விண்தலத்து உறையும்நல் வேந்தற்கு ஆயினும்**
**உண்டு இடர் உற்றபோது என் உறாதன! (179)**

தேவியர் இதுவரையும் வெளியில் வராததால் ஞாயிறு இதுவரையும் அவர்களைக் கண்டதில்லை; இப்போது அவர்கள் வெளியில் வந்ததால் ஞாயிறு காண முடிந்தது. ஞாயிற்றின் ஒளிக்கும் தாமரைக்கும் தொடர்பு உண்டாதலின், 'கமல வாள் முகம்' என்றார். பெரிய செல்வர் வீட்டுப் பெண்கள் சிலரின் கால்கள் தரையில் பட்டதில்லை எனப் புனைந்துரைப்பது உலகியலில் உண்டு. அதாவது, அவர்கள் வீட்டை விட்டு வெளியில் வந்ததும் வண்டியிலேயே செல்வார்களாம். தேவியர் வெளிவராமையும் அது போன்றதேயாம். தண்டலை= சோலை; வேந்தன்=இந்திரன், "வேந்தன் மேய தீம்புனல் உலகமும்" எனத் தொல்காப்பியரும் (புறத்திணை யியல்— 5) இந்திரனை வேந்தன் எனக் கூறியிருப்பது நினைவுகூரத் தக்கது. பாடலின் இறுதியில் உள்ள 'இடர் உற்ற போது என் உறாதன' என்பது வேற்றுப் பொருள் வைப்பு.

## தயரதன் மோட்சப் படலம்

### விதியை வென்றவர் உளரோ?

சுமந்திரனோடு தயரதன் இருக்கும் பகுதிக்குச் செல்லும் வசிட்டன் பின் வருமாறு கூறிக் கொண்டே செல்கிறான்: வள்ளலாகிய மன்னன், வரங்களை மறுத்தால் பழி வரும் என அஞ்சி எதையும் தடுக்க முடிய வில்லை; யான் சொல்வதையும் கேட்கான்; அறத்தை உறுதியாகப் பின்பற்றுகிறான். விதியை வென்றவர் உளரோ?— இல்லையே— என்று கூறுகிறான்.

நின்றுயர் பழியை அஞ்சி நேர்ந்திலன் தடுக்க வள்ளல்;
ஒன்றும் நான் உரைத்தல் நோக்கான் தருமத்திற்கு உறுதி பார்ப்பான்
வென்றவர் உளரோ மேலை விதியினை என்று விம்மி
பொன்திணி மன்னன் கோயில் சுமந்திரனோடும் போனான் (8)

மேலை விதி=முன்னாலேயே அமைந்து விட்ட விதி. 'மேலை வதியினை வென்றவர் உளரோ' என்பது வேற்றுப் பொருள் வைப்பு.

## வனம் புகு படலம்

காட்டில் இலக்குவன் குடில் அமைத்ததும் இராமன் கூறுகிறான். அனிச்ச மலரினும் மெல்லிய அடியால் சீதை காட்டில் நடந்து வந்தாள். ஒரு குற்றமும் அறியாத தம்பி இலக்குவன் காட்டில் எப்படியோ குடில் அமைத்து விட்டான். எதையும் இழந்து இல்லாதவரானவர்க்கும் முயன்றால் முடியாதன யாவை? (முடியாதன இல்லை— எல்லாம் முடியும்) என்று கூறுகிறான்.

மேவு கானம் மிதிலையர் கோன் மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தா வில் எம்பி கை சாலை சமைத்தன
யாவை யாதும் இலார்க்கு இயையாதவே (50)

காட்டின் கடுமையான வழியில் நடந்தறியாத சீதை நடந்தாள். குடில் கட்டியறியாத இலக்குவன் குடில் அமைத்தான். எனவே, துணையில்லாரும் எதையும் முயன்று செய்துகொள்ள முடியும் என்பது கருத்து. இப் பாடலில், 'யாவை யாதும் இலார்க்கு இயையாதவே' என்பது வேற்றுப் பொருள் வைப்பு.

## ஆறு செல் படலம்

தெருள் மனத்தார்

முடிசூடிக் கொள்ள வேண்டுமென வசிட்டன் பரதனை வற்புறுத்திக் கூறுகிறான். பரத! அறத்தை நிலை நாட்டுதல் என்பது ஓர் அரிய பெரிய செயல் என்பதை நீ அறிவாய். எனவே, நீ அறத்தை மதித்து நடந்து கொள்ளின் இருமைப் பயனும் கிடைக்கும். இது, தெளிந்த

மனம் உடையவர்க்கு அல்லாமல் மற்றவர்க்குத் தெரியாது— என்கிறான்:

தருமம் என்று ஒரு பொருள் தந்து நாட்டுதல்
அருமை என்பது பெரிது, அறிதி ஐய நீ
இருமையும் தருவதற்கு இயைவது, ஈண்டு இது
தெருள் மனத்தார்க்கு அலால் தெரிதற் பாலதோ? (6)

இப்பாடலின் இறுதிப் பகுதி வேற்றுப் பொருள் வைப்பாகும்.

## திருவடி சூட்டு படலம்

### கால வலை

இராமனை அழைத்துவரப் பரதனுடன் காடு ஏகிய வசிட்டன் காட்டில் இராமனைக் கண்டு கூறுகிறான். நல்லொழுக்கமும் நல்லறமும் கொண்ட இராம! சிவன், திருமால், நான்முகன் ஆகியோராலும் காலம் என்னும் வலையைக் கடக்க முடியாது; எனவே, நடந்தது நடந்து போயிற்று. இனி நீ நாட்டுக்கு வந்து முடிசூடிச் கொள்ள வேண்டும் என்கிறான்:

சீலமும் தருமமும் சிதைவு இல் செய்கையாய்
சூலமும் திகிரியும் சொல்லும் தாங்கிய
மூலம் வந்து உதவிய மூவர்க் காயினும்
காலம் என்றொரு வலை கடக்கல் ஆகுமோ? (73)

சீலமும் தருமமும் சிதையாதவன் என்று கூறியதால், முறைப்படி நீ நாடாள்வதே அறமாகும் என்பது குறிப்பாய் அமைந்துள்ளது. சிவன் சூலமும் திருமால் ஆழியும் (சக்கரமும்) நான்முகன் சொல்லும் தாங்கியுள்ளனர். சொல் என்பது, ஈண்டு, சொல்லுக்கு (கல்விக்கு) உரிய கலைமகளைக் குறிக்கிறது. இப்பாடலின் இறுதிப் பகுதியாகிய 'காலம் என்று ஒரு வலை கடக்கல் ஆகுமோ' என்பது வேற்றுப் பொருள் வைப்பு அணியாகும்.

மேலுள்ளவாறு, ஒரு நிகழ்ச்சியை விளக்கி, அதன் வாயிலாக மற்றொரு (வேறொரு) பொதுக் கருத்தை விளங்க வைத்துள்ளார் கம்பர். இந்த வேற்றுப் பொருள் வைப்புத் தொடர், ஒரு பொது நீதி வாக்கியம் போல் உள்ளது பயன்தரத் தக்கதாகும்.

## தற்குறிப் பேற்ற அணி

அடுத்துத் தற்குறிப் பேற்ற அணி குறித்துப் பார்க்கலாம். ஒரு பொருளின் நிகழ்ச்சி இயல்பாக— இயற்கையாக நிகழ, புலவன் அதை விட்டு, இன்ன காரணத்தால் இது நிகழ்கிறது என்று ஒரு காரணத்தைத் தற்குறிப்பாக (தனது கருத்தாக) ஏற்றி உரைப்பது தற்குறிப்பு ஏற்ற அணியாகும். ''பெயர் பொருள் அல்பொருள் என இரு பொருளினும் இயல்பின் விளைதிறன் அன்றி அயலொன்று தான் குறித்து ஏற்றுதல் தற்குறிப் பேற்றம்'' என்பது தண்டியலங்கார நூற்பா. இனிச் சில எடுத்துக்காட்டுகள் காண்பாம்:

## கைகேயி சூழ்வினைப் படலம்

### கங்குல் நங்கை

இவ்வளவு நாள் கணவனோடு இருந்து விட்டு, இப்போது இரண்டு வரம் பெற்றுக் கணவனை மயங்கச் செய்த கைகேயி என்னும் இரக்கமில்லாப் பெண்ணின் செயலைக் கண்டு ஆடவர் முன் நிற்கவும் வெட்கப்பட்டு மறைந்தவள் போல் கங்குல் (இரவு) என்னும் பெண் மறையப் பொழுது விடிந்ததாம்.

சேண் உலாவிய நாளெலாம் உயிர் ஒன்று போல்வன செய்து பின்
ஏண் உலாவிய தோளினான் இடர் எய்த ஒன்றும் இரங்கிலா
வாணிலா நகை மாதராள் செயல் கண்டு மைந்தர்முன் நிற்கவும்
நாணினாள் என ஏகினாள் நளிர் கங்குலாகிய நங்கையே (50)

இங்கே, இரவு ஒரு பெண்ணாக உருவகிக்கப்பட்டு உள்ளது. ஒரு பெண்ணின் கொடிய செயலால் மற்ற பெண்கட்கும் ஏற்படுவது இழிவு தானே! என இரவாகிய பெண் எண்ணி ஆடவர் முன் நிற்க நாணினவள் போல் மறைந்து விட்டாளாம். இயற்கையாக இரவு போய்ப் பொழுது புலர்கிறது. ஆனால் கம்பர் இங்கே, கைகேயியின் செயலுக்கு நாணிக் கங்குலாகிய நங்கை மறைந்ததாகத் தானாக ஒரு காரணம் குறித்தேற்றிக் கூறியுள்ளார்— இது தான் தற்குறிப்பு ஏற்றம்.

## கோழியின் விளிப்பு

கைகேயியால் தயரதன் மயங்கியதற்கு வருந்தி, சிறகுகளாகிய தம் இரண்டு கைகளால் வயிற்றில் அடித்துக் கொண்டு கூவுவதுபோல் கோழிகள் கூவினவாம்.

**எண்தரும் கடை சென்ற யாமம் இயம்புகின்றன, ஏழையால்**
**வண்டு தங்கிய தொங்கல் மார்பன் மயங்கி விம்மிய வாறெலாம்**
**கண்டு நெஞ்சு கலங்கி அம்சிறை யான துணைக் கரம்**
**கொண்டு தம் வயிறு எற்றி எற்றி விளிப்ப போன்றன கோழியே** *(51)*

ஏழை = கைகேயி. துணைக் கரம் = இரண்டு கைகள். எற்றுதல் = அடித்துக் கொள்ளுதல். விளித்தல் = கூவுதல். துன்பம் வந்தபோது வாயிலும் வயிற்றிலும் கைகளால் அடித்துக் கொள்வது இயல்பு என்பதை, அவர்கள் 'வாயிலும் வயிற்றிலும்' அடித்துக் கொண்டார்கள் என்னும் உலக வழக்காற்றால் உணரலாம். விடியற் காலையில், கோழிகள் இரண்டு இறக்கைகளையும் மாறி மாறி விரித்தும் வயிற்றுப் பக்கம் அடித்துக் கொண்டும் கூவுவது இயற்கையாக நடப்பது. ஆனால், இவை, தயரதனுக்காக இரங்கி இவ்வாறு செய்வதாகக் கூறுவது ஒருவகைத் தற்குறிப் பேற்றமாகும்.

## மனத்து வைவன

நீர்நிலைகளிலும் மரங்களிலும் இரவில் தங்கியிருந்த பறவை இனங்கள், காலையில், பெண்களின் சிலம்பு,

ஒலிப்பது போல் ஒலி எழுப்புகின்றன. இதைக் கம்பர், கைகேயியை மனத்துள் நினைத்துக் கொண்டு அவளை வைவது போல் இருக்கிறதாகத் தற்குறிப்பேற்றம் செய்துள்ளார்:

**தோய் கயத்தும் மரத்தும் மென்சிறை துள்ளி மீது எழு புள் எலாம்**
**தேய்கை ஒத்த மருங்குல் மாதர் சிலம்பின் நின்று சிலம்புவ**
**கேகயத் தரசன் பயந்த விடத்தை இன்னதொர் கேடு சூழ்**
**மாகயத் தியை உள்கொதித்து மனத்து வைவன போன்றவே** (52)

**சிவந்தனன்**

கதிரவன், கைகேயியின் செயலால் மிகவும் சினந்து முகம் சிவந்தவன்போல் கிழக்கு மலையில் தோன்றினான்— இயற்கையான செந்நிறத்துடன் தோன்றினான். 'செஞ் ஞாயிறு' எனல் மரபு. ஆனால், சீதைமேல் சினங் கொண்டே முகம் சிவந்து தோன்றினான் எனத் தற்குறிப் பேற்றம் செய்யப்பட்டுள்ளது:

**பாபம் முற்றிய பேதை செய்த பகைத் திறத்தினில் வெய்யவன்**
**கோபம் முற்றி மிகச் சிவந்தனன் ஒத்தனன் குணக் குன்றிலே** (65)

* 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள்' என்பது தொல்காப்பிய நூற்பா. எனவே, கதிரவனின் சிவப்பு சினக் குறிப்பாயிற்று.

## தயரதன் மோட்சப் படலம்

**யானே காப்பேன்**

இராமனை அழைக்கப் பரதனுடன் வந்த மக்கள் காட்டில் ஒருநாள் இரவில் தூங்கிக் கொண்டிருந்தபோது, அவர்கள் அறியாமல் இராமன் வேறிடத்திற்குச் சென்று விட்டான். பொழுது விடிந்ததும் கதிரவன் தோன்றி னான். இங்கே கம்பர் கதிரவன் தோற்றத்தை

---

* தொல்காப்பியம்— உரியியல்—76.

(சூரியோதயத்தை) அணிந்துரைக்கிறார். கதிரவன், தன் மகன் தயரதன் இறந்து விட்டான்; அவன் மக்களும் காட்டிற்குச் சென்று விட்டனர்; அவர்கள் நாடு திரும்பி ஆட்சி ஏற்கும் வரையும் நானே காப்பேன் என்று எண்ணி வந்தவன் போல் வந்தானாம். கடல் ஒளியாகிய முரசு ஒலிக்க, தேவர்கள் துதிக்க, மண்ணுலகோர் வணங்க, ஒளியாகிய வாள் பக்கத்தில் விளங்க, ஒளி பொருந்திய தன் ஒற்றை ஆழித்தேரில் ஏறிக் கதிரவன் வந்தானாம்:

**மீன்நீர் வேலை முரசு இயம்ப, விண்ணோர் ஏத்த, மண் இறைஞ்ச**
**தூநீர் ஒளிவாள் புடை இலங்கச் சுடர்த்தேர் ஏறித் தோன்றினான்—**
**வானே புக்கான் அரும் புதல்வன்; மக்கள் அகன்றார்; வரும் அளவும்**
**யானே காப்பென் இவ் வுலகை என்பான் போல எறி கதிரோன்** *(30)*

இராமன் சூரிய குலத்தவனாம். இக்குலத்தாரின் தோற்றம் கதிரவனிலிருந்து தொடங்குகிறது. அதனால் தான், தயரதனை மகன் முறையாக்கி 'வானே புக்கான் அரும்புதல்வன்' என்பது கூறப்பட்டது. இந்தக் காலத்திலுங்கூட, ஒரு நாட்டின் அரசுத் தலைவரோ அல்லது தலைமை அமைச்சரோ இறந்து விடின் அல்லது நீங்கிவிடின், நிலையான அடுத்தவர் வரும் வரையும் ஒருவர் இடைக்கால அரசுப் பொறுப்பாளராய் இருப்பது வழக்கம். அதே போல், கதிரவன் தன் குலத்தின் இடைக் காலத் தலைவனாய் வந்தவன் போல் உள்ளான் எனத் தற்குறிப்பேற்றம் செய்யப்பட்டுள்ளது.

## இரு பொருள் அணி

மற்றும் இப்பாடலில் இரண்டு பேருக்கும் பொருந்துமாறு இரு பொருள் (சிலேடை) அணி அமைக்கப் பட்டுள்ளது. அரசர் பதவிக்கு வரும்போது முரசம் முழங்கும்— கதிரவனுக்கும் கடல் ஒலியாகிய முரசம் முழங்குகிறதாம். தயரதன், இராமன் முதலியோர் வரின் தேவரும் மண்ணுலகத்தவரும் ஏத்தித் தொழுவர்—

கதிரவனையும் தேவர்களும் மண்ணுலகத்தவரும் தொழுவர். காலையில் ஞாயிறு வணக்கம் செய்வது பலருக்கு நடைமுறை வழக்கமாகும். பெரும் பொங்கல் நாளை ஞாயிறு வணக்க நாளாகக் கொண்டாடுதல் மரபு. இளங்கோவடிகள் 'ஞாயிறு போற்றுதும்— ஞாயிறு போற்றுதும்' எனச் சிலப்பதிகாரத்தைத் தொடங்கி யுள்ளார். அடுத்து, மன்னரும் இடையில் உடைவாள் செருகியிருப்பர்— கதிரவனுக்கும் ஒளியாகிய வாள் உள்ளது. அரசரும் தேரேறி வருவர்— கதிரவனும் ஏழு குதிரைகள் பூட்டிய ஒற்றை ஆழித்தேரில் வருவதாகக் கூறப்படுகிறான். இப்பாடலில், கதிரவனின் இயற்கை யான தோற்றத்திற்குத் தான் ஒரு காரணம் கூறியுள்ளார் கம்பர். இது தற்குறிப்பேற்றம். இதில் இரு பொருள் அணியும் (சிலேடையும்) ஓரளவு உள்ளது.

## வனம் புகு படலம்

**காணாய்**

இராமன் காட்டில் பல காட்சிகளைச் சீதைக்குக் காட்டிக் கொண்டே செல்கிறான். கல் முள் நிறைந்த தரையில் நடக்க உன் அடிகள் பொறுக்கமாட்டா என மரங்கள் வழி நெடுக மலர்களை உதிர்த்திருப்பதைக் காணாய். மரம்— செடிகளில் உள்ள கொம்புகள் உன் துடிபோன்ற இடையைக் கண்டு நாணித் துவள்வதைக் காண்பாய்:

**அடிஇணை பொறைகல்லா என்றுகொல் அதர் எங்கும்**
**இடையிடை மலர் சிந்தும் இனமரம் இவை காணாய்**
**கொடியினொடு இள வாசக் கொம்பர்கள் குயிலே உன்**
**துடிபுரை இடைநாணித் துவள்வன அவை காணாய்** *(16)*

இயற்கையாய் நிகழ்வதற்குக் கம்பர் செயற்கையாகக் காரணம் கற்பித்துத் தற்குறிப்பேற்றம் செய்துள்ளார்.

## ஆறு செல் படலம்

**பிடி ஊர்தி**

*பரதனுடன் காடு செல்லும் மக்களுள் பெண்டிர் சிலர் பெண் யானையின் மேல் ஏறிச் சென்றனராம். இங்கே கம்பர் ஒரு தற்குறிப்பேற்றம் செய்துள்ளார். தாமரையை வென்ற கால்களை உடைய பெண்டிருடன் நடையழகில் போட்டியிட்டுத் தோற்றுப் போன பிடிகள் (பெண் யானைகள்) தாம் தோற்றதற்கு ஈடாக அப் பெண்டிரைச் சுமந்து சென்றனவாம்:*

சேற்றிள மரைமலர் சிதைந்தவாம் எனக்
காற்றளம் பொலிதரு கன்னி மாரொடும்
ஏற்றிளம் பிடிக்குலம் இகலி இன் நடை
தோற்று இள மகளிரைச் சுமப்ப போன்றவே (29)

*காற்றளம் என்பதைக் கால்தளம் எனப் பிரிக்க வேண்டும். பெண்களின் நடைக்குப் பிடியின் நடையை உவமிப்பது இலக்கிய மரபு. நடையில் பிடிகள் தோற்றதால் பெண்களைச் சுமக்கின்றனவாம்.*

*இவ்வாறு, சுவையான பல தற்குறிப்பு ஏற்றங்களைக் கம்பர் தம் பாடல்களில் செய்து காட்டியுள்ளார். இன்னும் தன்மையணி, ஒப்புவினை புணர்ப்பு (சமாதி) அணி முதலிய அணிகள் சிலவும் உள்ளன. அவற்றையெல்லாம் விவரிப்பின் பெருகும்.*

# 13. சில சுவையான முத்துகள்

இதுகாறும், குறிப்பிட்ட தனித் தனித் தலைப்புகள் தொடர்பான பாடல்களைப் பார்த்தோம். இந்தப் பகுதியில், இதுவரையும் பார்க்காத பொதுவான சுவை முத்துகள் சிலவற்றைக் காண்பாம்:

## நகர் நீங்கு படலம்

### தமியன் சென்றான்

வெண் சாமரையோடும் வெண்குற்றக் குடையோடும் இன்ன பிற அரசச் சிறப்புகளோடும் இராமன் முடிசூடிய கோலத்துடன் வருவான்— கண்டு மகிழலாம் என எண்ணமிட்டுக் கொண்டிருந்த கோசலை, முடியிழந்த இராமன் காடு செல்லும் பயணத்தை அறிவிக்க வந்த கோலத்தைக் கண்டு திகைத்து விட்டாள்:

குழைக்கின்ற கவரி இன்றிக் கொற்ற வெண் குடையும் இன்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம் பின் இரங்கி ஏக
மழைக் குன்றம் அனையான் மௌலி கவித்தனன் வரும் என்று என்று
தழைக்கின்ற உள்ளத் தன்னாள் முன்ஒரு தமியன் சென்றான் (1)

கவரியும் குடையும் இன்றி இயங்கும் இராமனை முன்னால் விதி இழுத்துக் கொண்டு செல்கின்றதாம். அறம், செய்வதறியாமல் அவன் பின்னால் தொடர்ந்து

கொண்டிருந்ததாம். முடியுடன் வருவான் என்று உள்ளம் தழைத்தாளாம் கோசலை— ஆனால், அவள்முன், கவரியோ— குடையோ— முடியோ— ஒன்றும் இன்றித் தனியனாகச் சென்றானாம். தமியன் = தனியன். கவரி மாறி மாறி மேலேற்றியும் கீழ் இறக்கியும் வீசப்படுவதைக் குறிக்கக் 'குழைக்கின்ற' என்ற சொல்லைக் கம்பர் ஆண்டிருப்பது சுவையாயுள்ளது. 'மழைக் குன்றம்' என்பது, இராமனின் கருமை பூத்த தோற்றத்தையும் வள்ளன்மையையும் அறிவிக்கின்றது.

## அரசே அரசே ?

மயங்கிக் கிடக்கும் மன்னனைக் கண்டு கோசலை புலம்புகிறாள்: பிரியாத இராமனைப் பிரிவது எவ்வாறு? பெரியோய்! இது தகுதியா— முறையா? அடியேங்களின் எளிய நிலையை நினைத்துப் பார்க்காதது ஏன்? வறியவர் கட்குச் செல்வமாயிருந்தாயே! தமியேங்கட்கு வலிமையா யிருந்தாயே! இச் செயலை நீ உன் அறிவு கொண்டுதான் செய்தாயா? அல்லது இது யாருடைய சூழ்ச்சிச் செயலா யிருக்குமா? அரசே— அரசே! என்று புலம்பினாள்:

**பிறியார் பிரிவு ஏது என்னும், பெரியோய் தகவோ என்னும்,**
**நெறியோ, அடியேம் நிலை நீ நினையா நினைவு ஏதுஎன்னும்,**
**வறியோர் தனமே என்னும், தமியேன் வலியே என்னும்,**
**அறிவோ வினையோ என்னும், அரசே அரசே என்னும்** (30)

இந்தப் பாடல் மிகவும் இரக்கத்தைக் கொப்புளிக் கிறது.

## தழுவிக் கொள்ள வா

தயரதன் மகனைப் பிரிந்து உயிர் துறக்க நேரிடுவதற்கு உரிய காரணமாக, முன்னர்த் தான் பெற்ற ஒரு கெடுமொழியை (சாபத்தை) விவரிக்கிறான்:—

''நான் யானை வேட்டைக்காகக் காடு சென்றிருந்த போது, ஒரு தடாகத்தின் கரையில் யானை நீர் அருந்தும்

ஒலி கேட்டது. உடனே ஒலி வந்த பக்கம் யான் அம்பு எய்தேன். அப்போது ஓர் இளைஞனின் அலறல் கேட்டது. போய்ப் பார்த்தேன். யானை என்று எண்ணி, நேரில் பார்க்காமலேயே அவன்மேல் அம்பு எய்து விட்ட தவறு எனக்குப் புரிந்தது. நீ யாரப்பா என்று அவனைக் கேட்டேன். அவன் கூறினான்: கண்களையிழந்து அகவை முதிர்ந்துள்ள என் பெற்றோர்களை ஆங்கு ஒருபால் இருக்கச் செய்து அவர்களின் தாகத்தைத் தீர்க்கத் தண்ணீர் கொண்டு செல்ல வந்தேன். இங்கே நீ என்மேல் அம்பு எய்து விட்டாய். இதோ நான் இறக்கப் போகிறேன். என் பெற்றோர்கட்கு நீர் கொண்டு சென்று கொடுத்து என் முடிவையும் கூறுக என்று சொல்லி அவன் இறந்து விட்டான்.

பின்னர் யான் தண்ணீரோடு அவனது உடலையும் எடுத்துக் கொண்டு அவன் பெற்றோர் இருக்கும் இடத்தைத் தேடியடைந்தேன். யான் சென்ற ஒலியைக் கேட்டு, அவர்கள் தம் மகன்தான் வந்து விட்டான் என்றெண்ணிப் பின்வருமாறு அன்பான நயமொழி கூறினர்:

''தம்பி இன்னும் வரவில்லையே! தண்ணீர் கொண்டு வரச் சென்றானே! நிற்க மாட்டானே! விரைவில் வந்து விடுவானே—ஓ—ஓ— இதோ தம்பி வரும் ஒலி கேட்கிறது. இதோ அருகே வந்தே விட்டான். எங்கள் கண்ணான செல்வமே! நீர் கொணர உனக்கு இவ்வளவு நேரமா ஆயிற்று! தொலைவு மிகுதியோ கண்ணே! நீ வரக் காலம் நீட்டித்ததால், எங்கள் செல்வனாகிய நினக்கு என்ன நேர்ந்ததோ என்று பதைபதைத்துக் கொண்டிருந்தோம். நல்ல வேளையாய் வந்து விட்டாய். எங்கள் ஆருயிரே! எங்களைத் தழுவிக் கொள்ள வா கண்ணா!'' என்று அவர்கள் மகன் வந்த மகிழ்ச்சியைச் சுவைத்துக் கொண்டிருந்தனர். அப்போது யான் அவர்களிடம் நடந்தன அனைத்தும் கூறிப் பொறுத்தருள வேண்டினேன்.

உங்கள் மகனுக்குப் பதிலாக யான் என்ன செய்ய வேண்டு மெனினும் செய்வேன்— என்னைப் பொறுத்தருள்க என்று கெஞ்சினேன். அவர்கள் எனக்கு அப்போது இறப்பு நேரும்படிக் கெடுமொழி (சாபம்) இடாமல், நீ இறுதியில் எங்களைப் போலவே மகனைப் பிரிந்து இறப்பாய்— என்று கெடுமொழி இட்டனர். அந்தக் கெடுமொழி இப்போது பலிக்கத் தொடங்கியுள்ளது— என்று விவரித் தான். அந்தப் பெரியவர்கள், மகன் வந்து விட்டான் என அறிந்து கூறியதாக உள்ள பாடல் இவண் வருமாறு:—

மைந்தன் வரவே நோக்கும் வளர் மாதவர்பால் மகனோடு
அந்தண் புனல்கொண்டு அணுக, ஐயா இப்போ தளவாய்
வந்திங்கு அணுகாய் என்னோ வந்தது என்றே நொந்தோம்
சந்தம் கமழும் தோளாய் தழுவிக் கொள வா எனவே (79)

என்பது பாடல். அடுத்து, செய்தியறிந்த அந்தப் பெரிய வர்களின் நிலையைக் காணலாம். அவர்கள் அயர்ந்தனர்— மகன்மீது விழுந்து புரண்டனர்— எங்கட்கு இப்பொழுது தான் உண்மையிலேயே விழிகள் போயின என்றனர்— துன்பக் கடலுள் ஆழ்ந்தார்கள்— ஐயா ஐயா என்று அழைத்து அலறினார்கள்— எங்கள் நெஞ்சைப் பிளந் தனையே என்றனர். பொன்னுலகில் (மேலுலகில்) நீ மட்டும் சென்று வாழ்வதா? இனி நாங்கள் இங்கே இருக்க மாட்டோம்— இதோ நாங்களும் வந்து விட்டோம்— வந்து விட்டோம்— என்று புலம்பினர்:

வீழ்ந்தார் அயர்ந்தார் புரண்டார் விழிபோயிற்று இன்று என்றார்,
ஆழ்ந்தார் துன்பக் கடலுள், ஐயாஐயா என்றார்,
போழ்ந்தாய் நெஞ்சை என்றார், பொன்னாடதனில் போய்நீ
வாழ்ந்தே இருப்பத் தரியேம், வந்தேம் வந்தேம் இனியே (83)

## குகப் பலடம்

### என் கிளை

இராமனுடன் தானும் தொடர்ந்து காட்டில் வரப் போவதாகக் கூறிய குகனுக்கு இராமன் கூறுகிறான்:

*தம்பி குகனே! அயோத்தியில் உள்ள நம் சுற்றத்தாரைக் காக்க உன் தம்பி பரதன் அங்கே உள்ளான். நீ என்னுடன் வந்துவிடின், இங்கே உள்ள உன் சுற்றத்தாரைக் காக்க யார் உளர்? நீயே சொல்வாயாக. உனது சுற்றம் எனது சுற்றம் அன்றோ? அவர்கட்கு எந்தத் துன்பமும் வரக்கூடாதே. எனவே, என் சுற்றத்தாராகிய— இங்கு உள்ளவர்களை நீ இங்கே இருந்து காப்பாயாக! இது எனது அன்புக் கட்டளையாகும்:—*

**அங்கு உளகிளை காவற்கு அமைதியின் உளன் உம்பி;**
**இங்குஉள கிளைகாவற்கு யார்உளர் இசையாய்நீ;**
**உன்கிளை எனதுஅன்றோ? உறுதுயர் உறல் ஆமோ?**
**என்கிளை இது கா என் ஏவலின் இனிது என்றான்** (45)

இங்கே, இராமன் குகனை மிகவும் நெருக்கமானவனாகக் கொண்டாடியுள்ளான். பரதனை 'உம்பி' (உன் தம்பி) என்றும், குகனுடைய சுற்றத்தை 'என் (இராமனின்) கிளை' என்றும் குகனிடம் இராமன் கூறியுள்ள அன்புரை நெஞ்சைத் தொடுகிறது.

## கங்கை காண் படலம்

**குகனது மற உரை**

பரதன் இராமனை அழைப்பகற்காகப் படைகளுடன் கங்கையை நெருங்குகிறான். இதைக் கண்ட குகன், இராமனைக் கொல்வதற்காகப் பரதன் வருகிறான் என்று தவறாக எண்ணித் தன் படைஞரை நோக்கிப் பரதனை விடமாட்டேன் என மற உரை பகர்கிறான். இந்த மற உரை பத்துப் பாடல்களில் அமைந்துள்ளது. இந்தப் பத்துப் பாடல்களையும் இசையின்றி வாளா படித்தாலுமே அந்த மற உணர்வு பீரிட்டுக் கொண்டு தோன்றும். அவற்றுள் இரண்டினை மட்டும் காண்பாம்:

என் ஆருயிர் நாயகனாகிய இராமன் ஆளாதபடி வஞ்சனையால் அரசு பெற்ற பெரிய அரசர் வந்து

விட்டாரோ! நெருப்பு கக்கும் நம் அம்புகள் அவர்மேல் தைக்காவோ! இவர் இங்கிருந்து தப்பி இராமனை நோக்கிச் சென்றுவிடின் என்னை 'நாய்க் குகன்' என்று எல்லாரும் ஏசாரோ!

பரதனின் படையை வென்று, அறவோராகிய இராமரே ஆளும்படி வேடுவர் படை மீட்டுத் தந்தது என்னும் புகழை அடைய வேண்டாவா? நாடு கொடுத்த இராமற்கு, இவர்கள், காட்டில் இருக்கவும் இடம் தராமல் படையெடுத்து வருவதைப் பாரீர்:—

**அஞ்சன வண்ணன் என்ஆருயிர் நாயகன் ஆளாமே**
**வஞ்சனையால் அரசு எய்திய மன்னரும் வந்தாரோ**
**செஞ்சரம் என்பன தீ உமிழ்கின்றன செல்லாவோ**
**உஞ்சு இவர் போய்விடின் நாய்க்குகன் என்று எனை ஓதாரோ?**
(14)

ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள
வேடு கொடுத்தது பார்எனும் இப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்த என் நாயகனுக்கு இவர்நாம் ஆளும்
காடு கொடுக்கில ராகி எடுத்தது காணீரோ? (22)

கம்பர், இராமனையே அவன்— இவன் என்பது போல ஆண்பால் ஒருமையில் கூறியிருக்க, இங்கே குகன் கூறுவதாக, 'மன்னரும் வந்தாரோ' எனப் பரதனைச் சிறப்புப் பன்மையால் குறிப்பிட்டிருப்பது மிகவும் சுவையானது. அதாவது— 'ஓ— ரொம்ப பெரியவர் இவர்— இவர் வந்து விட்டாரோ' எனத் தம்மினும் தாழ்ந்தவரை ஒருவர் விடைப்பது போல, 'மன்னரும் வந்தாரோ' எனக் குகன் பரதனை விடைப்பதாக உள்ளது இந்தத் தொடர். மேவீரோ— காணீரோ என்பன மறு உரைக் குறிப்பாகும். பாடல்களைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்துக் கருத்து நயத்துடன் ஒலி நயத்தையும் சுவைக்க வேண்டும்.

**விம்முற்றான்**

பரதனது தவக் கோலத்தைக் கண்டு தன் பழைய எண்ணத்தை மாற்றிக் கொண்டு குகன் எண்ணுகின்றான்!

மரவுரி உடுத்திருக்கிறான்— உடம்பு முழுதும் அழுக்கு படிந்துள்ளது— கலையிழந்த திங்களைப் போல் முகத்தில் நகைப்பொலிவு இல்லை— கல்லும் கனியும்படித் துன்பத் தால் கனிந்து கசங்கியுள்ளான்— என்றெல்லாம் குகன் எண்ணியபோது, அவனை அறியாமலேயே வில் அவன் கையிலிருந்து கீழே விழுந்து விட்டது. மிகவும் விம்மி விம்மிச் சோர்ந்தான்.

மேலும் குகன் கூறுகின்றான்: பரதன் இராமனைப் போன்றுள்ளான்; அவன் பக்கத்தில் உள்ளவன் (சத்துருக்கனன்) இராமனுடன் சென்ற தம்பி இலக்குவனை ஒத்துள்ளான்; பரதன் தவக் கோலம் தாங்கியுள்ளான்; அவனது துன்பத்திற்கு அளவில்லை போலும்! இராமன் சென்ற திசையை நோக்கித் தொழுகிறான். ஆகா! இராமன் பின் பிறந்தவர்கள் தவறு செய்வார்களா? (மாட்டார்களே)— என்று கூறுகிறான்:

வற்கலையின் உடையானை மாசு அடைந்த மெய்யானை
நற்கலை இல் மதி என்ன நகை இழந்த முகத்தானை,
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையி னின்று இடை வீழ விம்முற்று நின்றொழிந்தான் (29)

(கற்கனிய = கல் கனிய; விற்கை = வில்கை)

நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்; அயல் நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான்; தவ வேடம் தலை நின்றான்;
துன்பம் ஒரு முடிவில்லை திசை நோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு என்றான் (30)

இரக்கம் உண்டாக்கும் ஒலி இப்பாடல்களில் அமைந் துள்ளது.

## ஆயிரம் இராமர்!

குகன் பரதனை வணங்கிப் புகழ்கிறான்: தாய் கைகேயியின் உரைப்படி தந்தை தந்த அரசைத் தீயதாகக் கருதித் துறந்து, உயர் எண்ணம் கொண்டு, இராமனை

*அழைத்துப் போக வந்துள்ளாய் என்பதை நினைக்கும் போது, புகழ் மிக்கவனே! ஓர் இராமர் அல்லர்— பத்து இராமர் அல்லர்— நூறு இராமர் அல்லர்— ஆயிரம் இராமர் கூட உனது பண்புக்கு ஒப்பாகார்— அம்மாடி! என்று கூறி இராமனைப் புகழ் மலையின் உச்சியில் நிறுத்தியுள்ளான்:*

**தாய் உரைகொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்**
**தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்**
**போயினை என்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்**
**ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா!** *(35)*

## அழகிது அடிமை

*இராமனுக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் இலக்குவன் உடனிருந்து செய்து கொண்டிருக்கின்றான் என்பதைக் கேட்டறிந்த பரதன் நொந்து கூறுகிறான்: இராமனுக்கு உள்ள— ஒத்த தன்மையுடைய தம்பியருள், யான் என்றும் இராமனுக்குத் துன்பம் வரும்படியான நிலைமையை உண்டாக்கி விட்டேன். தம்பி இலக்குவனோ, என்னால் இராமனுக்கு ஏற்படும் துன்பங்களை எல்லாம் நீக்க உள்ளான்; அவனது அன்பிற்கு எல்லையே இல்லை. இந்நிலையில், இராமனுக்கு யான் செய்யக் கூடிய அடிமை (தொண்டு) மிகவும் அழகாயிருக்கிறது— என்று நொந்து கூறுகிறான்:*

**என்பத்தைக் கேட்ட மைந்தன், இராமனுக்கு இளையர் என்று**
**முன்பு ஒத்த தோற்றத்தோமில் யான் என்றும் முடிவு இலாத**
**துன்பத்துக்கு ஏது ஆனான்; அவன் அது துடைக்க நின்றான்;**
**அன்பத்துக்கு எல்லை உண்டோ! அழகிது என் அடிமை! என்றான்**
*(43)*

*எதுகைக்காக 'என்பதை' என்பது 'என்பத்தை' என்றும், 'அன்பதுக்கு' என்பது 'அன்பத்துக்கு' என்றும் 'த்' மிக்கு வந்தது. ஒருவர் ஒழுங்கற்ற முறையில் இயங்கிய போது, அவரை மற்றொருவர் பார்த்து 'நீ செய்வது*

ரொம்ப அழகாயிருக்குதப்பா' என்று கூறி இடுப்பை ஒடிப்பது போல், பரதன் 'என் அடிமை அழகாயிருக்கிறது' என்று தன்னைத் தானே நொந்து கொள்கிறான். இந்தப் பாடலில் இராமனுக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தைப் பரதன் வாயிலாக 'முடிவு இலாத துன்பம்' எனக் கம்பர் பாடியுள்ளார். இது பொருள் பொதிந்த தொடராகும். இராமனுக்கு இதுவரையும் வந்த துன்பங்களைவிட இனிமேல் வரப்போகும் துன்பங்கள் பலவாகும். சீதையை இழந்தது, இலங்கை சென்று போர் புரிந்து சீதையை மீட்டது— முதலியன பெரிய துன்பங்கள் அல்லவா? இம்மட்டோடு இராமனின் துன்பங்கட்கு முற்றுப் புள்ளி வைக்கப்படவில்லை. அயோத்திக்குச் சென்று முடிசூடிக் கொண்ட பின்பும் சீதையைக் காட்டிற்கு அனுப்பி விட்டானல்லவா? பரதனுக்குப் பட்டம் என்றதனால் இராமன் காட்டிற்கு வந்தான்— காட்டில் இருந்ததால் இராவணன் சீதையை எடுத்துச் சென்றான்— இராவணனது இலங்கையில் இருந்ததால், அயோத்தியில் சீதைக்குக் களங்கம் கற்பிக்கப்பட்டது—அதனால் இராமன் சீதையைக் காட்டிற்கு அனுப்பி விட்டான்— ஆகிய இவற்றையெல்லாம் உள்ளடக்கி 'முடிவு இலாத துன்பம்' எனக் கம்பர் கூறியிருக்கும் புலமை சுவைக்கத் தக்க தன்றோ? பரதன் பண்பும் சுவைக்கத் தக்கது.

### குகனுக்கு அறிமுகம்

சுற்றத்தார் தேவரோடு தொழுகின்ற கோசலையைக் குறிப்பிட்டு இவர் யார் என்று குகன் வினவ, பரதன் அறிமுகம் செய்கிறான்: இவர் தயரதனின் முதல் தேவி— முதல் மகனாகிய இராமனைப் பெற்றதால் அடைய இருந்த பெரிய அரசச் செல்வத்தை, யான் பிறந்ததால் இழந்துவிட்ட பெரிய அம்மையார்— என்றான்.

**சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற**
**கோசலையைத் தொழுது நோக்கிக்**
**கொற்றத்தார்க் குரிசில்இவர் ஆர்என்று**
**குகன் வினவக் கோக்கள் வைகும்**

முற்றத்தான் முதல் தேவி; மூன்றுலகும்
ஈன்றானை முன் ஈன்றானை
பெற்றத்தால் பெறுஞ் செல்வம் யான்
பிறத்தலால் துறந்த பெரியாள் என்றான் (64)

*கோக்கள் = அரசர்கள். முற்றம் = வாயில். கோக்கள் வைகும் முற்றத்தான் = அரசர் பலர் காண்பதற்காக வாயிலில் வரிசையில் நிற்கும் பெருமைக்கு உரிய தயரதன். (இப்பொழுது மட்டும் என்ன வாழ்கிறது?— மணிக் கணக்கில் வரிசையில் காத்துக் கிடக்க வேண்டியுள்ளது). மூன்றுலகும் ஈந்தானை முன் ஈன்றானை = மூன்றுலகையும் ஈன்ற திருமால் முதல் மகனாக ஆன இராமன்.*

குரிசில்

*குகன் கோசலையின் கால்களில் அழுது கொண்டு விழ, அவனைக் குறிப்பிட்டு இவன் யார் என்று அவள் வினவப் பரதன் குகனை அறிமுகப்படுத்துகிறான்: இவன் இராமனின் துணைவன்— எனக்கும் (பரதனுக்கும்) இலக்குவனுக்கும் இளைய தம்பி சந்துருக்கனனுக்கும் மூத்தவன் (தமையன்)— குகன் என்னும் பெயர் உடைய குரிசில்— என்று பரதன் தெரிவித்தான்:*

என்றலுமே அடியின்மிசை நெடிது வீழ்ந்து
அழுவானை இவன் யார் என்று
கன்று பிரி காராவின் துயர் உடைய
கொடி வினவக் கழல் கால் மைந்தன்
இன் துணைவன் இராகவனுக்கு; இலக்குவர்க்கும்
இளையவற்கும் எனக்கும் மூத்தான்;
குன்றனைய திருநெடுந்தோள் குகன் என்பான்
இந்நின்ற குரிசில் என்றான் (65)

*கன்றைப் பிரிந்த காராவைப் போல் இராமனைப் பிரிந்த கோசலை துவள்கிறாள். பரதன், இராமன் தவிர்த்த மற்ற மூவர்க்கும் குகன் மூத்த தமையன் என்று*

குலவேற்றுமை பாராட்டாது கூறியிருப்பது உள்ளத்தைத் தொடுகிறது. குரிசில்=சிறந்த ஆண் மகன்.

## ஐவீரும் ஒருவீர்

குகனைப் புரிந்து கொண்ட கோசலை, என் பிள்ளைகளே! வருந்தாதீர். இராமன் நாடு விட்டுக் காடு சென்றதும் ஒரு வகையில் நன்மை ஆயிற்று. அதாவது—இராமன் பிரிந்ததால் குகன் எனக்கு மைந்தனாகவும் உங்கட்கெல்லாம் அண்ணனாகவும் கிடைத்தது பெரிய நன்மையன்றோ? எனவே, நீங்கள் ஐவரும் ஒருவராய்—உடல் ஐந்தெனினும் உயிர் ஒன்றாய் ஒன்றி இந்நாட்டைக் காப்பீராக— என்று கோசலை வாழ்த்தினாள்:

**நைவீர் அலீர் மைந்தீர் இனித் துயரால்;**
**நாடு இறந்து காடு நோக்கி**
**மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்று**
**ஆம் அன்றே! விலங்கல் திண்தோள்**
**கைவீரக் களிறனைய காளை இவன்**
**தன்னோடும் கலந்து நீவிர்**
**ஐவீரும் ஒருவீர் ஆய் அகல் இடத்தை நெடுங்**
**காலம் அளித்திர் என்றாள்** (66)

மெய் வீரர் = இராமர். கோசலைக்கு பிள்ளைகள் ஐவர் கிடைத்தனராம்— உடன் பிறந்தார் ஐவர் ஆயினராம். இனித் துயரால் நைவீர் அலீர் என்றதனால், குகன் துயர் தீர்க்கும் துணிவுடையவன் என்பது பெறப் படும். இராமன் அரசை விட்டுக் காடு சென்றதும் நன்மையே என்றால், அரசாட்சிக்குப் பதில் குகன் கிடைத்திருக்கிறான்— அவ்வளவு உயர்ந்தவன் குகன் என்று கொள்ளல் வேண்டும். 'கலந்து நீவிர் அகல் இடத்தை நெடுங்காலம் அளித்தீர்' என்னும் பாடல் பகுதி யில் அரிய பெரிய கருத்துகள் இரண்டு உள்ளன. ஒன்று: நீங்கள் நெடுங்காலம்— அதாவது இறுதிவரை— பிரியாது கலந்து ஒன்றியிருக்க வேண்டும் என்பது; மற்றொன்று:

நீங்கள் நெடுங்காலம் வாழ வேண்டும் என வாழ்த்தியது. இப்பாடலில், முதல் தொடங்கி இறுதிவரை, கம்பர், நைவீர், அலீர், மைந்நீர், நீவிர், ஐவீர், ஒருவீர் என, முன்னிலைப் பன்மைப் பொருண்மையைக் கட்டிக் காத்திருப்பது நயமாயுள்ளது.

## பிரியாதானைப் பெற்றவள்

குகன் சுமித்திரையைச் சுட்டிக் காட்டி யார் என்று வினவப் பரதன் கூறுகிறான்: நேர்மையைக் காத்த மன்னனின் இளைய தேவி— இராமனுக்குப் பின் பிறந்த தம்பியும் உண்டு என்று சொல்லும்படி என்றுமே இராமனைப் பிரியாதிருக்கிற இலக்குவனைப் பெற்ற பெரியவள்— என்று அறிமுகம் செய்தான்:

அறம் தானே என்கின்ற அயல் நின்றான்
தனைநோக்கி, ஐய, அன்பின்
நிறைந்தாளை உரை என்ன, நெறி திறம்பாத்
தன் மெய்யை நிற்ப தாக்கி
இறந்தான் தன் இளந்தேவி; யாவர்க்கும்
தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்தனைப்
பயந்த பெரியாள் என்றான் (67)

சுமித்திரை அன்பு நிறைந்த நெஞ்சத்துடன், அறம் என்பது 'தான்தான்' என்று சொல்லும்படி நின்றிருந்தாளாம். இங்கே, சுமித்திரையை 'அறம்தானே' என அறத்தின் உருவாகக் கூறியிருப்பதில் உள்ள பொருத்தம் என்ன? அவள் பெற்ற இலக்குவன் இராமனுடன் காடு ஏகுமுன் அவளிடம் விடைபெறச் சென்றான். அவள், * "அடே பைத்தியக்காரா! எவனாவது எங்கே இருந்தால்— எங்கே போனால் உனக்கு என்ன? இராமனுடன் காட்டிற்குச் சென்று நீ ஏன் அல்லல்பட வேண்டும்? நீ உன் நலத்தைக் கவனி என்றெல்லாம் கூறினாளா?

* நகர் நீங்கு படலம்—147.

இல்லை— இல்லவேயில்லை. இலக்குமணா! நீ இராம னுடன் காடேகி அவனுக்குத் துணையாய் வேண்டுவன வற்றையெல்லாம் செய்து கொடு— தம்பி என்ற முறையில் நீ பழகலாகாது— தொண்டன் என்ற முறையிலேயே பழக வேண்டும்— இராமன் ஒரு துன்பமும் இன்றி நாடு திரும்பினால் நீயும் அவனுடன் வா! இல்லையேல் அவன், முடிவதற்கு முன் நீ முடிந்துவிடு''— என்றல்லவா சுமித்திரை சொன்னாள். உலகில் எத்தனைத் தாய்மார்கள் இவ்வாறு சொல்வர். சுமித்திரை சொன்னாளே! அதனால்தான் அவள், 'அறம் தானே' என அறத்தின் வடிவமாகப் புகழப்பட்டுள்ளாள்.

தயரதன் மெய்யை (சத்தியத்தை) நிலை நிறுத்தித் தான் இறந்து விட்டானாம். இங்கே, பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ள,

> **மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
> **தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே** *(165- 1, 2)*

என்னும் புறநானூற்றுப் பாடலும், கார் நாற்பதில் உள்ள,

> **மண்ணியல் ஞாலத்து மன்னு புகழ் வேண்டிப்**
> **பெண்ணியல் நல்லாய் பிரிந்தார்** *(8)*

என்னும் பாடல் பகுதியும், தஞ்சை வாணன் கோவையில் உள்ள,

> **மன்னா உலகத்து மன்னிய சீர்த் தஞ்சை வாணன்** *(21)*

என்னும் பாடல் பகுதியும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன. அடுத்து, 'இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் என்னும் தொடர் பொருள் பொதிந்தது. இராமனுக்குத் தம்பி இல்லை என்று யாரும் சொல்லி

*விடாதபடி எப்போதும் அவனை விட்டுப் பிரியாதவனாம் இலக்குவன்.*

**மனத்தால் அளந்தவள்**

*கணவனைச் சுடுகாட்டிற்கு அனுப்பி, பிள்ளையைத் துன்பத்தில் தோய விட்டு, மூத்தவனைக் காட்டிற்கு ஏகச் செய்து, திருமால் 'வாமனாவதாரம்' எடுத்து மூன்று அடியாக அளந்த உலகம் முழுவதையும் தன் மனத் தாலேயே அளந்து பெற்ற கைகேயியைக் குறிப்பிட்டு, யார் இவர் என்று குகன் கேட்கப் பரதன் கூறுகிறான்:*

சுடு மயானத்திடை தன் துணை ஏகத்
தோன்றல் துயர்க் கடலில் ஏகக்
கடுமையார் கானகத்துக் கருணை ஆர்கலி
ஏகக் கழல்கால் மாயன்
நெடுமையால் அன்றளந்த உலகெலாம்
தன்மனத்தே நினைந்து செய்யும்
கொடுமையால் அளந்தாளை ஆர்இவர்
என்றுரை என்னக் குரிசில் கூறும் (68)

*திருமால் நீ மாவலி மன்னனிடம் மூன்றடி மண் கேட்டு நெடிய உருவெடுத்து உலகம் முழுவதையும் மூன்று அடியாக அளந்தாராம். ஆனால், கைகேயியோ, உலகத்தைத் தன் மனத்தாலேயே அளந்து விட்டாளாம். அதாவது— மனம் ஒரு நொடி நேரத்திற்குள் உலகம் முழுவதையும் சுற்றி விடும் அல்லவா? ஆ என்ன கொடுமை!*

**என்னை ஈன்றாள்**

*பரதன் குகனுக்குக் கைகேயியை அறிமுகப்படுத்து கிறான்: இவள் துன்பம் யாவும் தோன்றச் செய்பவள்;*

பழியை வளர்க்கும் செவிலித் தாய். இவள் குடலில் நெடுங்காலம் கிடந்தேன். அதனால் எனது உயிர்ச் சுமை குறைந்தது— உயிர் இல்லாத உடம்பு போன்றதாகவே என் உடல் எனக்குத் தோன்றுகிறது. இராமன் அரசு இழந்ததால் உலகம் முழுதும் துயர் உற்றிருக்கவும், இவள் ஒருத்தி மட்டுமே, துன்பத்தின் சுவடு கூடத் தெரியாத முகத்தளாய் உள்ளாள். இவள் யாரென அறிந்திலையேல், இவள்தான் என்னைப் பெற்ற கைகேயி என்று அறிந்து கொள்— என்றான்:

படர் எலாம் படைத்தாளைப் பழி வளர்க்கும்
செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங் காலம் கிடந்தேற்கும்
உயிர்ப் பாரம் குறைந்து தேய,
உடர் எலாம் உயிர் இலா எனத் தோன்றும்,
உலகத்தே ஒருத்தி அன்றே,
இடர் இலா முகத்தாளை அறிந்திலையேல்
இந்நின்றாள் என்னை ஈன்றாள் (69)

படர் = துன்பம். குடர் = குடல். உடர் = உடல். குடர், உடர் என்பன, சொல்லின் கடைசியில் 'ல்' போல் நிற்பதால் 'கடைப்போலி' எனப்படும். 'முந்தித் தவங் கிடந்து முந்நூறு நாள் சுமந்து' என்றார் பட்டினத்தார். முந்நூறு நாளுக்குள்ளேயே குழந்தை பிறந்துவிடும் பெரும்பாலும். பரதனும், எல்லாரும் தாயின் குடலில் கிடந்த கால அளவுதான் கிடந்திருப்பான்; ஆனால் அது பாவிக்குடல் ஆனதால், நெடுங் காலம் கிடந்ததாகக் கூறியுள்ளான். அவனுக்கு முந்நூறு நாள், முந்நூறு திங்களாகவோ— முந்நூறு ஆண்டுகளாகவோ தோன்றுகிறது போலும். தாயின் குடலில் கிடக்கும்போதும் பின்னர் வெளிவரும் போதும் குழந்தைக்குத் துன்பம் இருந்திருப்பினும் பின்னால் அது தெரியாதல்லவா?

இதனால்தான், மாணிக்கவாசகர், 'யான் ஏதும் பிறப்பு அஞ்சேன்— இறப்பதனுக்கு என் கடவேன்' எனப் பிறப்பு தொடர்பாக அஞ்சவில்லை— இறக்கும்போது என்னபாடு படுவேனோ— என நோய் நொடியுடன் கிடந்து இறப்பதற்கு அஞ்சியுள்ளார். பரதனை நோக்கினால், தாயின் குடலில் கிடந்து தேய்ந்ததாக அதாவது பிறந்ததற்கும் வருந்துவதாகக் கூறியுள்ளான். கைகேயியைப் பற்றி (மூன்றரை அடிகளில்) கூறியும், அவள் இன்னாள் என்று உனக்குத் தெரியவில்லையென்றால், குகனே! யானே கூறுகின்றேன்— அவள்தான் என்னைப் பெற்றவள்— என்று தெரிவிக்கிறான்.

## திருவடி சூட்டு படலம்

தந்தை தயரதன் இறந்து விட்டான் என்பதைக் கேட்டதும் இராமன் புலம்புகிறான்:

**நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்**
**தந்தாய் தனி அறத்தின் தாயே தயாநிதியே**
**எந்தாய் இகல் வேந்தர் ஏறே இறந்தனையே**
**அந்தோ இனி வாய்மைக்கு ஆர் உளரோ மற்று என்றான்** (60)

இந்தப் பாடலுக்கு விளக்கம் வேண்டா. படித்துப் படித்து அழுகைச் சுவையை (அவலச் சுவையை) நுகரலாம்.

### உயிர்க்கு இரங்கலா?

தயரதன் இறந்தமையை அறிந்து புலம்பிய இராமனுக்கு வசிட்டன் ஆறுதல் கூறுகின்றான்: ஐம்பொறிகள், ஐம்புலன்கள் ஆகியவற்றிற்கு முதற்பொருளாயுள்ள மண்

முதலிய ஐந்து பூதங்களுமே ஒரு காலத்தில் அழிந்து விடும். அங்ஙனம் இருக்க, தயரதன் உயிர் போனதற்காக நீ வருந்துதல் ஏன்?— என்று வினவுகின்றான்:

**கண்முதல் காட்சிய கரைஇல் நீளத்த**
**உண்முதல் பொருட்கெலாம் ஊற்றம் ஆவன**
**மண்முதல் பூதங்கள் மாயும் என்றபோது**
**எண்முதல் உயிர்க்குநீ இரங்கல் வேண்டுமோ?** (74)

இந்தப் பாடலில் அரிய பெரிய கருத்துகள் அடங்கியுள்ளன. மாப்பேருலகத்தில் (universe— பிரபஞ்சத்தில்) உள்ளவை விண், காற்று, தீ, நீர், மண் என்னும் ஐந்து மூலப் பொருள்களே. இந்த ஐந்தின் விரிவே மாப் பேருலகம். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் இந்த ஐந்தின் திரிபுகளே. உயிர்களின் உடம்பு, இந்த ஐந்து பூதங்களின் (மூலப் பொருள்களின்) திரிபாக்கமே. வட மொழியில் 'பஞ்ச பூத பரிணாம சரீரம்' என்பர். இதனைத் தமிழில் 'ஐம்பூதங்கள் திரிபாக்கம்' என்று கூறலாம். பரிணாமம்=திரிந்து மற்றொன்றாக ஆவது.

நம் உடம்பில் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிவுப் பொறிகள் ஐந்து உள்ளன. இவற்றை வட மொழியில் 'ஞானேந்திரியம்' என்பர். மற்றும் வாக்கு (பேசும் உறுப்பு) கை, கால், சிறுநீர் கழிக்கும் உறுப்பு, மலம் கழிக்கும் உறுப்பு என்னும் ஐந்து செயல் பொறிகள் உள்ளன. இவற்றை வடமொழியில் 'கண்மேந் திரியங்கள்' என்பர். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் (மணம்) என்னும் ஐந்தும் ஐம்புலன்கள் எனப்படும். விண் என்னும் பூதத்தின் வாயிலாகச் செவி என்னும் பொறி, ஓசை என்னும் புலனை அறிகிறது— வாக்கு (ஒலி உறுப்பு) பேசுகிறது. 'வானொலி' என்னும் பெயர் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. காற்று என்னும் பூதத்தின் உதவியால் மெய் (உடம்பு முழுவதும்) என்னும் அறிவுப் பொறி, (தொடு உணர்வு) ஊறு என்னும் புலனை

அறிகிறது— கால் என்னும் செயல் பொறி நடமாடுகிறது. காற்று அடிக்கும் திசையில் நடப்பது எளிதல்லவா? தீ என்னும் பூதத்தின் உதவியால், கண் என்னும் அறிவுப் பொறி ஒளி என்னும் புலனை அறிகிறது— கை என்னும் செயல் பொறி பல செயல்களைச் செய்கிறது. அவருக்குச் சூடு பிடித்து விட்டது— அதனால்தான் இவ்வளவு வேலை செய்கிறார் என்னும் உலக வழக்கு ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. நீர் என்னும் பூதத்தின் உதவியால், வாய் (நாக்கு) என்னும் அறிவுப் பொறி சுவை என்னும் புலனை அறிகிறது— மலம் கழிக்கும் உறுப்பு என்னும் செயல் பொறி மலம் கழிக்கிறது. வாயில் ஊறும் நீருடன் சென்றாலேயே உணவு சுவைக்கும்— எளிதில் செரிக்கும். மலச்சிக்கல் இருந்தால் நிறைய நீர் குடிப்பது நல்லது. மண் என்னும் பூதத்தின் உதவியால், மூக்கு என்னும் செயல் பொறி நாற்றம் (மணம்) என்னும் புலனை அறிகிறது— 'ஆகாயப் பூவுக்கு மணம் இல்லை' என்பது கருதத்தக்கது— பால் உறுப்பு என்னும் செயல் பொறி விந்து விடுகின்றது— உடம்பில் நகம், மயிர் முளைப்பது மண் தன்மையினாலேயாம்.

எனவே, ஐம்பூதங்களால் ஆன உடம்பு, அந்த ஐம்பூதங்களின் உதவியாலேயே இயங்குகின்றது என்பது புலனாகும். எல்லாமாக உள்ள இந்த ஐந்து மூலப் பொருள்களும் உலகின் ஊழிக் காலத்தில் அழிந்து விடுமாம்.

எனவே, அகவை முதிர்ந்த தயரதனுடைய உயிர் பிரிந்து விட்டதற்காக நீ வருந்தலாமா?— என்று கூறி வசிட்டன் இராமனைத் தேற்றுகிறான்.

## பரதனும் பாதுகையும்

இராமனிடமிருந்து பாதுகையைப் பெற்றுத் தலையில் சுமந்து கொண்டு சென்ற பரதன் நேரே அயோத்திக்குச்

*செல்லவில்லை. இரவு முழுவதும் தூங்காமல், அயோத்திக்குப் புறத்தே உள்ள நந்தியம் பதியை அடைந்தான். அங்கே பாதுகையையே ஆட்சித் தலைவனாக எண்ணி வைத்து இயங்கினான். இரவு பகல் தூக்கம் இல்லை. பொறி— புலன் உணர்வுகளையெல்லாம் அடக்கிக் காலத்தை ஓட்டினான்.*

பாதுகம் தலைக் கொடு பரதன் பைம்புனல்
மோது கங்கையின் கரை கடந்து முந்தினான்
போதுகும் கடிபொழில் அயோத்தி புக்கிலன்
ஓது கங்குலின் நெடிது உறக்கம் நீங்கினான் *(139)*

நந்தியம் பதியிடை நாதன் பாதுகம்
செந்தனிக் கோல்முறை செலுத்தச் சிந்தையான்
இந்தியங்களை அவித்து இருத்தல் மேயினான்
அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினான் *(140)*

இராமனது செலவு

*இங்கிருந்தால் அன்பினால் மக்கள் நலிவார்கள் என்று எண்ணி, இராமன் தன் தம்பி இலக்குவனுடனும் சீதையுடனும் மேலும் தென்திசை நோக்கிச் செல்லலானான்:*

குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால்
நின்றவர் நலிவரால் நேயத்தால் எனா
தன்துணைத் தம்பியும் தானும் தையலும்
தென்திசை நெறியினைச் சேறல் மேயினான் *(141)*

*இந்தப் பாடலோடு கம்பராமாயணம்—அயோத்தியா காண்டம் முற்றுப் பெறுகிறது. அயோத்தியா காண்டம் என்னும் ஆழ்கடலில் உள்ள முத்துகள் கம்பன் தந்தவை. கம்பனுக்கு நன்றி. கம்பன் புகழ் வாழ்க. கன்னித் தமிழ் வாழ்க. வணக்கம்.*

## இந்நூலுக்குக்
## கருத்து வழங்கிய கருவூல நூல்கள்

| நூல் பெயரும் உட்பிரிவும் | ஆசிரியர் பெயர் |
|---|---|
| *அம்பிகாபதி கோவை—178* | *அம்பிகாபதி* |
| *கொன்றை வேந்தன்—70* | *ஒளவையார்* |
| *புறநானூறு—24-22* | *மாங்குடி கிழார்* |
| *,, —327-2* | *(ஆசிரியர் பெயர் தெரியவில்லை.)* |
| *ஆம்பல்...குப்பை—கல்லாடம்* | *கல்லாடனார்* |
| *நற்றிணை—138-1* | *அம்மூவனார்* |
| *பெருங்கதை—2-2-72* | *கொங்கு வேளிர்* |
| *சிலப்பதிகாரம்—25-37* | *இளங்கோவடிகள்* |
| *பெருங்கதை—2-14-68, 69* | *கொங்கு வேளிர்* |
| *சிலப்பதிகாரம்—6-121* | *இளங்கோ* |
| *மணிமேகலை—16-122, 123* | *சீத்தலைச் சாத்தனார்* |
| *புறநானூறு—186* | *மோசி கீரனார்* |
| *பெருங்கதை—11-17, 18* | *கொங்கு வேளிர்* |
| *சீவக சிந்தாமணி—2908* | *திருத்தக்க தேவர்* |
| *சூளாமணி—நகர—16* | *தோலா மொழித் தேவர்* |
| *திருவிளையாடல் புராணம்—பழியஞ்சின படலம்—44* | *பரஞ்சோதி முனிவர்* |
| *திருமந்திரம்—724, 725* | *திருமூலர்* |
| *சிலப்பதிகாரம்—10-102, 103* | *இளங்கோ* |

| நூல் பெயரும் உட்பிரிவும் | ஆசிரியர் பெயர் |
|---|---|
| *தணிகைப் புராணம்—களவு —244* | *கச்சியப்ப முனிவர்* |
| *புறநானூறு—189-1,2* | *நக்கீரர்* |
| *சோண சைல மாலை—39* | *நல்லாற்றூர் சிவப்பிரகாச அடிகளார்* |
| *சங்க இலக்கியங்கள்* | *சங்கப் புலவர்கள்* |
| *சீவக சிந்தாமணி— 53* | *திருத்தக்க தேவர்* |
| *வெற்றி வேற்கை— 14* | *அதிவீர ராம பாண்டியன்* |
| *கலிங்கத்துப் பரணி— கடைதிறப்பு— 47* | *செயங்கொண்டார்* |
| *பிரபு லிங்க லீலை— கைலாச கதி— 23* | *சிவப்பிரகாசர்* |
| *நைடதம்— மணம் புரி படலம்— 54* | *அதிவீர ராம பாண்டியன்* |
| *நல்வழி— 24* | *ஔவையார்* |
| *வேமன்ன பத்தியம்* | *வேமனா* |
| *பிரபு லிங்க லீலை— கைலாச கதி— 38* | *சிவப்பிரகாசர்* |
| *சிலம்பு— கட்டுரை காதை— 100... 104* | *இளங்கோ* |
| *கவுதம் புத்தர் காப்பியம்— அமைச்சரும் புலவரும் அழைத்த காதை— 64, 65* | *சுந்தர சண்முகன்* |
| *புறநானூறு— 173- 1* | *குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்* |
| *திருமுருகாற்றுப்படை—289* | *நக்கீரர்— (நச்சினார்க் கினியர் உரை)* |
| *தொல்காப்பியம்— மெய்ப்பாட்டியல்—3,5* | *(பேராசிரியர் உரை)* |

| நூல் பெயரும் உட்பிரிவும் | ஆசிரியர் பெயர் |
|---|---|
| தண்டியலங்காரம்— பொருளணியியல்—44 | தண்டியாசிரியர் |
| திருமுருகாற்றுப்படை—317 | நக்கீரர் |
| புறநானூறு—163 | பெருஞ்சித்திரனார் |
| தொல்காப்பியம்— வேற்றுமையியல்—18 | தொல்காப்பியர் |
| நன்னூல்— பெயரியல்—43 | பவணந்தி முனிவர் |
| வெற்றி வேற்கை— 17...21 | அதிவீர ராம பாண்டியன் |
| தமிழ்க் கலைக் களஞ்சியம்— முதல் தொகுதி | (தொகுப்பு— அவிநாசி லிங்கம் செட்டியார்) |
| நன்னூல்— வினையியல்—24 | பவணந்தி முனிவர் |
| திருத் தொண்டத் தொகை—2-2 | சுந்தரர் தேவாரம்— |
| குறுந்தொகை—124 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| திருமுருகாற்றுப்படை— 1, 2 | நக்கீரர் |
| சிலம்பு— மங்கல வாழ்த்துப் பாடல் | இளங்கோ |
| பெரிய திருமொழி— 3-4-9 | திருமங்கையாழ்வார் |
| திவ்வியப் பிரபந்தம்—இயற்பா முதல் திருவந்தாதி—98 | பொய்கையாழ்வார் |
| சீவக சிந்தாமணி—1542 | திருத்தக்க தேவர் |
| நல்வழி—36 | ஔவையார் |
| நீலகேசி— | உரை மேற்கோள் பாடல் |
| திருவருட்பா— | வடலூர் இராமலிங்க வள்ளலார் |
| புறநானூறு— 165-1, 2 | பெருந்தலைச் சாத்தனார் |

| நூல் பெயரும் உட்பிரிவும் | ஆசிரியர் பெயர் |
|---|---|
| *கார் நாற்பது—8* | *மதுரைக் கண்ணங் கூத்தனார்* |
| *தஞ்சை வாணன் கோவை-21* | *பொய்யாமொழிப் புலவர்* |
| *பட்டினத்தார் பாடல்* | |
| *திருவாசகம்—* | *மாணிக்க வாசகர்* |
| *திருக்குறள்— 82, 648, 6, 948, 266, 969, 10, 236, 41, 215, 216, 387, 985, 66, 379, 131, 57, 261, 298, 68, 706, 1086, 1091, 29, 212.* | *திருவள்ளுவர்* |



